# சினிமா நட்சத்திரங்களின் பொலிவுடன்

## உங்கள் மேனியும் மிளிரட்டும்!

நகையழகையும் உடையழகையும்விட மாசற்ற மேனியழகையே மேலான அழகாக மதிப்பவர் பேரழகி எம். என். ராஜம். "எனது மேனியைத் தெளிவுடனும், புதுமையுடனும் வைத்திருப்பதற்கு ஆதாரம், நான் அன்றாடம் உபயோகித்துவரும் லக்ஸ் டாய்லெட் சோப்பே" என்கிறார் எம். என். ராஜம். என்னே அதன் நுரையின் செழிப்பு, அதன் நறுமண இன்பம்! அத்தகைய லக்ஸ் பராமரிப்பை உங்கள் மேனிக்கும் அளியுங்கள்!

எம்ஜியார் பிக்சர்ஸ் "நாடோடி மன்னன்" படத்தில் தோன்றும் அழகு நட்சத்திரமாயே எம். என். ராஜம்

தூய, வெண்மையான

**லக்ஸ்**
**டாய்லெட் சோப்**




சினிமா நட்சத்திரங்களின் அழகுசாதன சோப்

LTS. 576-50 TM

ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட், பம்பாய்.

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.




| | | |
|---|---|---|
| மலர் 18<br>இதழ் 1 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற<br>தாயென்று கும்பிடடி பாப்பா — *பாரதியார்.* | விளம்பி ௵<br>ஆடி ௴ 19௳ |


# அமரிக்கை யிழந்த அமெரிக்கா

**அ**ழைப்பை ஏற்றுக் கொள்ள மாட்டார், நிச்சயம் என்று எண்ணி ருஷியத் தலைவர் க்ருஷேவை அமெரிக்க சர்க்கார், நியூயார்க் ஐ. நா. சபைக்கு அழைத்தார்கள். "இதோ வருகிறேன், எங்காயினும் வருகிறேன், கட்டாயம் வருகிறேன்" என்று க்ருஷேவ் பதில் அளித்துவிட்டார். 'ஐயோ! இதுவென்ன விபரீதம்!' என்று இப்போது அமரிக்கை இழந்த அமெரிக்க சர்க்கார் தவிக்கிறது.

"வேறு என்ன சாக்கு சொல்லுவோம்? என்ன புது முட்டுக்கட்டை இப்போது போடலாம்?" என்று டல்லெஸ் மகான் கவலையும் சிந்தையுமாக வாடுகிறார். "அரபிப் பிரதேச பிரச்னை மட்டும் பேசினால் போதாது, எல்லாவற்றையும் பேசவேண்டும்" என்று ஒரு முட்டுக்கட்டை போட்டால் தப்பித்துக் கொள்ளலாம் என்று சாமர்த்தியமாக ஒரு யோசனை செய்து வருகிறார்கள். இதுவும் பயன்படாது.

"எதுவும் பேசலாம், எல்லாம் பேசலாம்" என்றே ருஷ்யப் பிரதமர் க்ருஷேவ் சொல்லப் போகிறார். அதன்பின் அம்பலம்தான்!

என்னவாயினும் கூட்டம் நடத்த விடாமல் செய்யவேண்டும் என்பது அமெரிக்க சர்க்காரின் தீர்மானம்.

லெபனானில் ஏதோ சூழ்ச்சி செய்கிறார்கள், ரகசியமாக லெபனானின் சுதந்திர வாழ்க்கையைப் பாழ்படுத்த நாஸரும் வேறு அரபி நாட்டாரும் சதி செய்து வருகிறார்கள் என்பது குற்றச்சாட்டு.

இது உண்மையானாலும் ராணுவ பலம் இதற்கு என்ன செய்ய முடியும்? என்ன பயன் தரும்? சூழ்ச்சிகளையும் ரகசியங்களையும் லெபனான் சர்க்கார் கண்டுபிடித்துப் பார்த்து அதற்குமேல் ஆயுதப் போர் ஆரம்பித்து அதை எதிர்க்கச் சக்தி இல்லையாயின் அமெரிக்க ராணுவத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாமே யொழிய அமெரிக்க ராணுவத்தைக் கொண்டு ரகசிய சதிகளைப் பற்றி என்ன செய்ய முடியும்? ராணுவம் எதிரியோடு ஆயுதப்போர் செய்ய முடியுமேயொழிய ரகசிய போலீசு வேலை அதனால் செய்ய முடியாது. இது ஒரு வீண் சாக்கே தவிர உண்மையான சமாதானமல்ல. லெபனானில் புதுத் தேர்தல் நடப்பதை உத்தேசித்து, தங்களுடைய கைக்குள் அடங்கிய ஆளைச் சிம்மாசனம் ஏற்ற ஒரு முயற்சியே தவிர அன்னியருடைய ரகசிய சூழ்ச்சிகளை நோக்கி அல்ல, அந்த நாட்டில் அமெரிக்க ராணுவம் இறங்கியிருப்பது.

ஒரு நாட்டின் உள்நாட்டு விஷயத்தில் தலையிடுவது தவறு என்று உலகம் சொல்லும். ஆகையால் உண்மையை மறைத்து ஏதோ ஒரு சாக்கு சொல்லுகிறார்கள்.

அரபி மக்கள் ஒன்றுபட்டு ஜனநாயகம் ஏற்படுத்திக் கொள்ளுவது அமெரிக்க சர்க்காருக்குப் பிடிக்கவில்லை. பிரிட்டிஷ் சர்க்காருக்கும் அது பிடிக்கவில்லை என்று சொல்லவே வேண்டியதில்லை. இதற்காகத்தான் எல்லாத் தடபுடலும்.

நாஸருடைய செல்வாக்கு வளர்ந்து கொண்டு வருகிறது. இந்த பூதம் ஒரு இரண்டாம் ஹிட்லரே ஆகிவிடும் என்று மேற்கு வல்லரசுகள் திகில் கொண்டிருக்கிறார்கள். ஹிட்லரை அடக்கிவிட முடிந்தது. ஏனெனில் அப்போது ஸ்டாலினும் ருஷிய மக்களும் உதவினார்கள். இப்போது ருஷிய மக்களும் க்ருஷேவும் விரோதக் கட்சியில் அல்லவா நிற்கிறார்கள்? இதுவே மேற்கத்தியாரின் சங்கடம்.

அரபிநாட்டு மக்களை ஏன் இப்படிச் சந்தேகிக்க வேண்டும்? அவர்கள் தங்கள் அரசியலைக் குடியரசு முறையில் அமைத்துக் கொண்டால் இவர்களுக்கு என்ன ஆபத்து? ஈராக்கில் குடியரசு ஏற்பட்ட பின்னரும் பிரிட்டிஷ் வியாபாரத்துக்கும் சொத்துக்கும்

ஒரு நஷ்டமும் உண்டாகவில்லை. இந்தியா குடியரசாகி விட்டதினால் இங்கிலாந்துக்கு என்ன நஷ்டம் ஆயிற்று? குடியரசு தேசங்களெல்லாம் ருஷியாவின் நண்பர்கள் என்று எண்ணிக்கொண்டு பயப்பட வேண்டியதில்லை. பர்மாவும் குடியரசு முறையில் சுதந்திரமாக அரசியல் நடத்தி வருகிறது. யாருக்கு என்ன அபாயம்? ஒன்றுமில்லை. அமெரிக்காவும், பிரிட்டனும் செய்யும் நடவடிக்கைகளே அரபி மக்களை ருஷ்ய பட்சத்தில் பலாத்காரமாகத் தள்ளுகின்றன. இனி பிடித்தவர்களுடைய மதி சீரழிவது இயற்கை.

தற்போதுள்ள தலைவரே லெபனுனுக்கு மறுபடியும் தலைமை வகிக்க வேண்டும் என்று ஏன் அமெரிக்கா பிடிவாதம் செய்யவேண்டும்? அதற்காகத்தான் இந்த அட்டூழியமெல்லாம். ராணுவத்தோடு அமெரிக்க சர்க்காரின் பெரிய உத்தியோகஸ்தர் மர்பியை ஜனாதிபதி ஸ்தானத்தைப் பற்றிப் பேரம் பேச அனுப்பியிருக்கிறார்கள். யார் தலைமை வகித்தாலும் அந்த நாட்டின் நட்பை நல்ல வழியில் காப்பாற்றிக் கொள்ள முடியாதா? ஒரு ஆளையே நம்பி ஒரு நாட்டின் விவகாரத்தைச் சமாளிக்க முடியுமா? லெபனுன் மக்களைச் சமாதான முறையில் இழுத்துக் கொள்வதே சாமர்த்தியம். அதற்குப் பதில் ராணுவ பலத்தைக் காட்டிப் பேரம் பேசி, நண்பர்களாயிருப்பவர்களை அமெரிக்கக் குறுக்கீட்டை வெறுக்கும்படிசெய்து கொள்வது மடமையிலும் மடமை.

பல அமெரிக்கப் பத்திரிகைகள் இந்த மடமையை மிகவும் வன்மையாகக் கண்டித்திருக்கின்றன.

நாசர் பேரில் ஏன் இவ்வளவு துவேஷம்? அரபி மக்களின் புது எழுச்சிக்கு அவர் ஒரு சின்னமே தவிர அவர் பூதமுமல்ல, பேயுமல்ல. அவர் இறந்தாலும், அல்லது ஒருவேளை கொல்லப்பட்டாலும் அவரைப் போன்ற வேறு தலைவர்கள் அந்த ஸ்தானத்துக்கு வந்துதான் தீருவார்கள். அப்போது இப்போதைவிட அதிகமாகத்தான் துவேஷமும் வேகமும் இருக்கும். நாஸர் மேல் வெறுப்பு கொண்டு அமெரிக்கர் தவறான மார்க்கத்தில் செல்வது மிகவும் வருந்தத் தக்கது. உலக சமாதானத்துக்குப் பேராபத்து.

# தூத்துக்குடி தேர்தல்

**தூ**த்துக்குடி மக்களைப் பாராட்டுகிறோம். வீரர் வ. உ. சி.யைப் பெற்ற புண்ணியபூமி என்ற பெயருக்கு ஏற்பத் தூத்துக்குடி மக்கள் நடந்து கொண்டு விட்டார்கள். காங்கிரஸ் அபேட்சகரைத் தேர்ந்தெடுத்து விட்டார்கள்.

காங்கிரஸுக்குச் சமீப காலத்தில் எத்தனையோ அவப் பெயர். மக்கள் காங்கிரசிடம் எவ்வளவோ அதிருப்தி கொண்டிருக்கிறார்கள். ஆட்சியாளர்களிடம் அவர்களுக்குள்ள மனத்தாங்கலுக்கும் குறைவில்லை. இருப்பினும் வீரர் வ.உ.சி. பல்லாண்டுகளுக்கு முன்பு தூத்துக்குடியில் ஊன்றிய தேசபக்தி விதையின் சக்தி குறையவில்லை. வீரர் வ. உ. சி.க்கு வணக்கம் செலுத்திவிட்டு, காங்கிரஸுக்கு வோட்டளித்த தூத்துக்குடி மக்களைப் பாராட்டுகிறோம்!

கூடவே, ஒரு எச்சரிக்கையையும் செய்ய விரும்புகிறோம். தேர்தலில் போட்டியிட்ட தி. மு. க. அபேட்சகரும் கம்யூனிஸ்ட் அபேட்சகரும் கணிசமான அளவு வோட்டுக்கள் பெற்றிருக்கிறார்கள். நாட்டில் அவர்கள் பெற்று வரும் பலத்தை இது குறிக்கிறது. இப்பொழுது பிடித்தே எச்சரிக்கையாக இருக்க வேண்டும்! அதற்கு வழி தி. மு. க. வினர் மீதும், கம்யூனிஸ்டுகள்மீதும் பேசச் சந்தர்ப்பம் கிடைக்கும்போது, வசைமாரி பொழிவதல்ல. மக்களுக்கு நிரந்தரமான பயன் அளிக்க கூடிய நற்பணிகள் புரிய வேண்டும். குறைந்த பட்சம் தீயபணிகள் செய்யாமலாவது இருக்க வேண்டும். நிர்வாகத்தைச் சர்க்கார் காரியதரிசிகளிடம் ஒப்படைத்து விட்டு ஊர் ஊராகச் சுற்றுப் பிரயாணம் செய்வது மட்டும் போதாது. மக்களின் கஷ்ட நஷ்டங்களை உணர்ந்து உடனுக்குடன் பரிகாரங்கள் தேடி நன்மை புரிந்தால் அதுவே காங்கிரஸுக்குச் செல்வாக்கைத் தேடித் தரும்.

ஒரு சில நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் காங்கிரஸ் செல்வாக்கையும் பதவியையும் உபயோகிப்பதை விட்டு, தங்களுடைய ஒரு சில நண்பர்களுக்கு நஷ்டம் ஏற்பட்டாலும் பெருவாரியான ஏழை மக்களுக்கு லாபம் விளையக் கூடிய செயல்களை மந்திரிகள் புரிந்தாலே போதும். இதைவிடச் சிறந்த பிரசாரம் காங்கிரஸுக்கு வேறு தேவை இல்லை!

# கேரளத்தில் கலவரம்

“**மி**ரண்டவன் கண்களுக்கு இருண்டதெல்லாம் பேய்” என்பதாக ஒரு தமிழ் மொழி உண்டு. அந்தத் தமிழ் பழமொழிக்கு ஏற்பவே கேரள காங்கிரஸ் நடந்து கொள்கிறது. கேரள முதன்மந்திரி நம்பூத்ரி பாடு அவர்கள் கோவையில் பேசும்போது, “உள் நாட்டுக் கலகம் நேரலாம்” என்று சொல்லி வைத்தார். அப்பொழுதிலிருந்து அந்தச் சொற்கள் நாட்டில் பெரும் பரபரப்பையுண்டாக்கியிருக்கின்றன.

கேரள ராஜ்யத்தில் தற்போது நடைபெற்று வரும் மாணவர் குழப்பத்தைக் கேரள காங்கிரஸார் ஒரு ‘உள் நாட்டுக் கலகம்’ அளவுக்குப் பெரிதுபடுத்த விரும்புகின்றனர். படகுகளில் மாணவர் பெற்று வரும் சலுகை விஷயமாக ஏற்பட்ட பூசல் போலீஸ் தடியடி, துப்பாக்கிப் பிரயோகம் ஆகிய அளவுக்கு வளர்ந்து விட்டது. இதை வைத்து, ஆட்சியிலிருக்கும் கம்யூனிஸ்ட் கட்சிக்கு அவப்பெயர் உண்டாக்கித் தருவதில் முனைந்

## காங்கிரஸ் ஜெயித்தது!




தூத்துக்குடி தேர்தலில் காங்கிரஸ் வெற்றி பெற்றும், எதிர்க்கட்சிகள் பெற்றுள்ள கணிசமான வோட்டுக்கள் காங்கிரஸுக்கு எச்சரிக்கை செய்வனவாகவே இருக்கின்றன.

துள்ளது கேரள காங்கிரஸ். ஏதாவது சாக்கு கிடைத்தால் போதும் என்றுதான் ஏங்குகிறது கேரள காங்கிரஸ். இதை நன்கு உணர்ந்து பாரதப் பிரதமர் நேருஜி, 'கேரளத்தில் உள் நாட்டுப் போர் நடைபெறக்கூடிய சூழ்நிலையே இல்லை, இரண்டு கட்சிகளிடையே நடைபெறும் சாதாரணப் பூசல். அதை உள் நாட்டுக் கலகம் என்று அழைக்கக் கூடாது!'' என்று கண்டிப்பாக உதறித் தள்ளி விட்டார்.

நேருஜியின் மன நிலையை நன்கு உணர்ந்த பின்னராவது கேரள காங்கிரஸ், மாணவர்களைத் தங்கள் கட்சி நலன்களுக்குப் பயன்படுத்திக்கொள்ளாமல் நல்ல முறையில் நடந்து கொண்டால் எவ்வளவோ மேலாக இருக்கும்!

# பதினெட்டாம் ஆண்டு

அன்பார்ந்த கல்கி நேயர்களுக்கு, வணக்கம். பதினேழு ஆண்டுகளுக்கு முன்னால் உங்கள் கல்கிப் பத்திரிகை உதயமாயிற்று. இன்று அதற்குப் பதினெட்டாவது ஆண்டு பிறந்திருக்கிறது.

சென்ற பதினேழு ஆண்டுகளில் கல்கி தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் இடைவிடாமல் தொண்டு செய்து வந்திருக்கிறது. அரசியல் துறையிலும் இலக்கியத் துறையிலும் பணி ஆற்றியிருக்கிறது. கலைகளை வளர்ப்பதில் இணையற்ற சேவை செய்திருக்கிறது.

சென்ற பதினேழு ஆண்டுகளாகத் தமிழ் மக்கள் கல்கிப் பத்திரிகைக்கு அளித்திருக்கும் ஆதரவு ஒப்புவமை இல்லாதது. சென்ற ஆண்டில் அந்த ஆதரவின் சிகரத்தைக் கல்கி அடைந்தது! இந்த அபிமானத்துக்கும் ஆதரவுக்கும் தமிழ் மக்களிடம் என்றென்றைக்கும் நன்றியுடையவர்களாக இருப்போம். அவர்களுக்கு மேலும் மேலும் தொண்டு செய்து கொண்டிருப்போம்.

இந்த இதழின் அட்டைப்படம் கல்கியின் பதினெட்டாம் ஆண்டின் பிறப்பைக் குறிப்பிடுகிறது. 'இந்தப் பாரில் எந்நாளுமோர் கன்னிகையென்னப் பயின்றிடும்' தமிழ் அரசி காதிலே தாமரை மலரைச் சூடிக்கொண்டு பதினெட்டாவது மலரைத் தேடிப்போகிறாள்.

புத்தம் புதுமலர்கள் பூக்குமே வண்டினங்கள்
சித்தம் மகிழ்ந்துண்ணச் சேருமே—நித்தமும்
பல்கி வளரும் பசுந் தமிழ்ச் சோலையாம்
கல்கி படர்ந்து வருங்கால்!

— கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை

# புதிய மசோதா

கொழும்பு, ஜுலை 17உ.

பார்லிமெண்டில் சமர்ப்பிக்கப்பட்டிருக்கும் தமிழ் உபயோக மசோதாவைப் பற்றி எப்படியும் ஆகஸ்ட் 7 அல்லது 8-ந் தேதிக்குள் விவாதத்தை நடத்தி அம் மசோதாவை இரண்டாம் முறையாக நிறைவேற்றிவிட வேண்டுமென்றும் அதன் பிறகு முழு சபையும் அடங்கிய கமிட்டியின் பரிசீலனைக்கு அதை விட வேண்டுமென்றும் பிரதம மந்திரி விருப்பம் தெரிவித்திருக்கிறார். ஆனால் இந்த விவாதத்தில் தமிழரசுக் கட்சித் தலைவர்கள் கலந்து கொள்ள அநுமதிக்கப்படுவார்களா என்பதைப் பற்றி அவர் திட்டமாக ஏதும் சொல்லவில்லை. அவர்கள் இல்லாமல் மசோதாவை நிறைவேற்றுவது, இராமன் இல்லாமல் இராமாயண நாடகம் நடத்துவதைப் போலத்தான் இருக்குமென்பதை எதிர்க் கட்சித் தலைவர் எடுத்துக் காட்டியும் பிரதமரிடமிருந்து திட்டவட்டமான பதில் கிடைக்கக் காணோம். இந்த நிலைமையில் மசோதாவின் சாதக பாதகங்களைப் பற்றித் தமிழ்த் தலைவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதை யாரும் அநுமானிக்க முடியாமல் இருக்கிறது. தமிழ்த் தலைவர்களின் ஆதரவைப் பெறாமல் தமிழ் மசோதா பார்லிமெண்டில் நிறைவேறும் பட்சத்தில் அதற்குத் தமிழ் மக்களின் ஆதரவு இருக்குமென்று எதிர்பார்ப்பதற்கில்லை. எனவே மசோதாவைப் பற்றி விவாதம் நடைபெறுகையில் அந்த விவாதத்தில் கலந்துகொள்ளத் தற்சமயம் தடுப்புக்காவலில் வைக்கப்பட்டிருக்கும் தமிழ்த் தலைவர்களுக்குச் சந்தர்ப்பமளிக்கப் பிரதமர் ஏற்பாடு செய்வாரென்றே எதிர்பார்க்கப்படுகிறது.

இதற்கிடையில் சர்க்கார் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்ட திரு எஸ். டி. பண்டாரநாயகா என்ற அங்கத்தினர் தமிழ் உபயோக மசோதாவுக்கு பார்லிமெண்டில் கடுமையான எதிர்ப்பை உருவாக்கப் பகீரதப் பிரயத்தனங்களைச் செய்து கொண்டிருக்கிறார். இவர் சர்க்கார் கட்சி எம். பி.க்களுக்கு அனுப்பியிருக்கும் ஒரு சுற்று நிருபத்தில் சென்ற பொதுத் தேர்தலின்பொழுது சிங்களத்தை நாட்டின் ஒரே ஒரு ராஜாங்க மொழியாகச் செய்வதாகவும், தமிழ் மக்களுக்கு நியாயம் செய்வதாகவும் வாக்குறுதியளிக்கப்பட்டதே தவிர, தமிழ்மொழி உபயோகத்துக்கு ஒரு மசோதா கொண்டுவரப்படுமென்று சொல்லப்படவில்லையென்றும் இப்பொழுது பிரதமர் கொண்டு வந்திருக்கும் மசோதாவுக்குப் பொதுஜனங்கள் அதிகாரமளிக்கவில்லையென்றும், இம்மசோதாவை நிறைவேற்றுவது நாட்டுக்குத் துரோகம் செய்வதைப் போலாகுமென்றும் திரு பண்டாரநாயகா சர்க்கார் கட்சி எம். பி.க்களுக்கு அனுப்பியுள்ள சுற்று நிருபத்தில் தெரிவித்திருக்கிறார். மொழிப் பிரச்னையில் பெரும்பாலான அங்கத்தினர்களுக்கு முரணான அபிப்பிராயம் கொண்டிருந்ததாலேயே அவர் சர்க்கார் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டார். இவரைப் போன்ற தீவிரவாதிகளின் நிர்ப்பந்தம் காரணமாகவே தமிழ் உபயோக மசோதா இவ்வளவு காலமும் ஒத்தி வைக்கப்பட்டு வந்தது. இதே மசோதா மொழி ஒப்பந்தம் ஏற்பட்டவுடன் கொண்டு வரப்பட்டிருப்பின் நிலைமை வேறுவிதமாக இருந்திருக்கும்.

தமிழரசுக் கட்சியுடன் செய்துகொண்ட சமரச ஒப்பந்தத்தில் பிராந்திய சபைகளை ஏற்படுத்தவும், தமிழ்ப் பகுதிகளில் பெருவாரியாகச் சிங்களவர்கள் குடியேறுவதைத் தடுக்கவும் ஒப்புக் கொள்ளப்பட்டிருந்தது. இதற்காக, பிராந்திய சபை மசோதா ஒன்றைக் கொண்டு வருவதாகவும் பிரதமர் உறுதி கூறியிருந்தார். ஆனால் அந்த மசோதா மொழி மசோதாவுடன் கொண்டு வரப்படவில்லை.

மொழிப் பிரச்னையில் தோட்டத்தொழிலாளர்களான தமிழர்களுக்கு அக்கறையில்லாததைப் போலச் சிலர் பேசுகிறார்கள். அவர்களுக்குப் பதில் அளிக்கும் முறையில் இ.தொ. காங்கிரஸ் தலைவரான ஸ்ரீ எஸ். தொண்டமான் இவ்வாரம் நாவலப்பிட்டிப் பகுதியிலுள்ள கடியன்சேனை என்னுமிடத்தில் தொழிலாளரின் பிரும்மாண்டமான பொதுக்கூட்டமொன்றில் பேசிய பொழுது, தோட்டத் தொழிலாளர் தங்களது அரசியல் உரிமையான பிரஜாவுரிமைக்காகப் போராடிய பொழுதிலும் இனத்தால் அவர்கள் இதர தமிழ் மக்களுடன் ஒன்றுபட்டவர்களென்றும், தமிழ்மொழி உரிமை சம்பந்தப்பட்ட மட்டில் அவர்களது உணர்ச்சி மற்றத் தமிழர்களுக்குச் சற்றும் இரண்டாம்பட்சமானதல்லவென்றும் அழுத்தமாகப் பேசினார். தோட்டத் தொழிலாளர் நாட்டு மக்கள் அனைவருடனும் இணைந்து வாழ வேண்டிய அவசியத்தையும் அவர் வலியுறுத்தினர்.

— ரஜனி

---

**பாரத நாட்டின் இன்றையப் பொருள் நிலையும்**

அதன் முக்கிய அம்சமாகிய

**அந்நியக் கடன்களும் அவற்றின் விளைவும்**

என்ற விஷயம் பற்றிய இந்த ஆராய்ச்சி அரங்கத்தில்

அடுத்த வாரம்

திரு எஸ். அனந்தராமகிருஷ்ணன், திரு மினு மஸானி, திரு முரார்ஜி தேசாய்... 

ஆகிய அறிஞர்கள் கலந்துகொள்கிறார்கள்.

# அருள் வாக்கு

பலனை உத்தேசித்துச் செய்யப்படும் காரியங்கள் காம்ய கர்மா எனப்படும். காம்யம் என்றால் இஷ்டம். வேதங்களிலேயே பலவித காம்ய கர்மாக்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. இந்தக் கர்மாக்கள் சாதாரணமாகக் கோரிய பலனைக் கொடுக்க வல்லது. சில சமயம் பலன் அளிக்காமலும் போகக் கூடும். கர்மா செய்கிறவனுடைய ஊக்கம், சிரத்தை, கர்மா செய்ய வேண்டிய விதிகளினின்று வழுவாமை இவற்றை அனுசரித்துப் பலன் கிடைக்கும். பலன் கிடைத்தாலும், கிடைக்கா விட்டாலும் இப்படிப்பட்ட கர்மாக்களினால் உலகபந்தம்தான் ஏற்படும். மோக்ஷத்துக்குக் காரணமாகாது.

ஆனால் இதே கர்மாக்களை சமத்வ நோக்குடன் செய்தால், அதாவது கர்மாவின் பலனில் இச்சையில்லாமல் செய்தால், உலக பந்தத்துக்கு அவை காரணமாகாமல் போய்விடும். கர்ம பலத்தில் இச்சை சிறிதும் இல்லாமல், கர்மாவின் தன்மை எப்படியிருந்த போதிலும், தனது கடமையைச் செய்வது என்று செயல் புரிபவன் எவனோ அவனுடைய புத்தி ஸமத்வ புத்தி என்று சொல்லப்படும். அப்படிப்பட்ட ஒருவன் தன்னுடைய கர்மா நல்ல பலனைக் கொடுத்தாலும் தீய பலனைக் கொடுத்தாலும் மனம் கலங்குவதில்லை. நன்மை தீமை இரண்டினாலும் அவன் பாதிக்கப்படுவதில்லை.

இவ்வாறு சமத்வ நோக்குடைய ஒருவனால் கர்மாக்களையே உலக பந்தத்திலிருந்து விடுபடும் கருவியாக மாற்றிக் கொள்ள முடியும். கர்மாக்களை இந்த விதமாகச் செய்வதுதான் புத்தியோகம். இதைத்தான் பகவத் கீதையில், ''யோக: கர்மஸு கௌஸலம்'' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இங்கே ''கௌஸலம்'' என்று ஒரு வார்த்தை உபயோகப்படுத்தியிருக்கிறது. இதனுடைய அர்த்தத்தை ஒரு உதாரணத்தின் மூலம் விளக்கலாம்.

தாயார் பக்குவம் செய்து அளித்த ஒரு பதார்த்தத்தைத் தனயன் 'வெகு நன்றாக இருக்கிறது' என்று ருசித்துச் சாப்பிடுகிறான். சாப்பிட்டானதும் பையனைப் பார்த்து, ''இப்போது சாப்பிட்டது என்ன பதார்த்தம் சொல்ல முடியுமா?'' என்று கேட்கிறாள் தாயார். 'என்னவென்று தெரியாது, ஆனால் ருசியாக இருந்தது' என்று அவன் பதிலளிக்கிறான். கசப்பான ஒரு பொருளினால் தயார் செய்யப்பட்டது அந்த உணவு, சிக்காய்ப் பொடியினால் ஆனது என்று தாயார் விளக்கம் சொல்லுகிறாள். சமையல் செய்வதில் தாயாருக்கு இருந்த ''கௌஸலத்தி''னால் (உயர்ந்த சிறப்பினால்)தான் கசப்புப் பொருளையும் இனிப்புப் பண்டமாக மாற்ற முடிந்தது. அதே மாதிரி ''பந்தத்துக்கு''க் காரணமான கர்மாக்களையே மோக்ஷத்துக்குக் காரணமாக மாற்றிக் கொள்ளுவதுதான் கர்மாக்களில் கௌஸலம் எனப்படுவது. இப்படி கர்மாவைச் செய்வதுதான் யோகம் அல்லது புத்தியோகம் என்பது. ''தூரேண ஹ்யவரம் கர்ம புத்தி யோகாத்'' என்ற ச்லோகத்தில் ''புத்தி யோகம்'' என்ற பதங்களுக்கு இதுதான் தாத்பர்யம்.

விவேகத்துடன் கூடிய மனிதர்களை 'மனீஷிண' என்று சொல்லப்பட்டிருக்கிறது. தாங்கள் செய்யும் கர்மாக்களின் பலன் தங்களை ஒட்டிக் கொள்ளாமலிருக்கும் வகையில் அவர்கள் கர்மாவைச் செய்கிறார்கள். அதனால்தான் அவர்கள் விவேகிகள் எனப்படுகிறார்கள். இதன் மூலம் 'பரமாத்ம பதம்' என்று சொல்லப்படும் உத்தம நிலையை அவர்கள் அடைகிறார்கள். இதனால் ஜனனமரணச் சுழலிலிருந்து அவர்களுக்கு விடுதலை கிடைத்து விடுகிறது.

கர்மாக்கள் பந்தத்துக்குத்தான் காரணம் என்றால் கர்மாக்கள் செய்யாமலேயே இருந்து விடுவது மேல் அல்லவா என்ற கேள்வி எழுகிறது. அப்படி இருந்து விட்டால் என்ன? ஆனால் அவ்விதம் இருக்க ஒருவனாலும் இயலாது. காரியங்கள் செய்வது என்பது ஒவ்வொரு மனிதனுக்கும் உடன்பிறந்தது. அவன் ரத்தத்திலேயே ஊறி இருக்கிறது. அவனால் சும்மா இருக்கமுடியாது. ஆகையால்தான் தன்னுடைய மனத்தில் படிந்திருக்கின்ற ஆசை அல்லது 'மோஹம்' என்னும் அழுக்கைத் துடைக்கவே அவன் கர்மாக்களைச் செய்ய வேண்டும். அவ்வாறு கர்மாக்கள் செய்து மனம் சுத்தியடைந்து விட்டால் பிறகு விஷயங்களில் மனம் செல்லாது. பரமாத்ம விஷயத்தில் ஈடுபடும்.

ஸ்ரீ சங்கராச்சாரியார் ❖ காஞ்சிகாமகோடி பீடம் ❖

# குரங்குப் பிடிவாதம்!

கச்சா பிலிம் இறக்குமதியை முதலில் 40 சதவிகிதத்துக்குக் குறைத்து, பின்னர் அதனால் திரைப்படத் தொழிலுக்கு ஏற்படும் விளைவுகளை ஒருவாறு உணர்ந்து, 60 சதவிகிதத்துக்கு இதை அரசாங்கம் உயர்த்தியது. அழுகின்ற குழந்தைக்கு வாழைப்பழத்தை அளிப்பது போன்ற இந்தச் சலுகையின் மூலம் இத்தொழிலில் எவ்வித அபிவிருத்தியும் ஏற்படவில்லை. இனிமேலாகிலும் ஏற்படக் கூடும் என்ற நம்பிக்கைக்கும் இடமில்லை.

இந்தக் கச்சா-பிலிம் இறக்குமதிக் குறைப்பினால் அதிகமான இன்னல்கள் தென்னிந்தியத் திரைப்படத் தொழிலுக்குத்தான் ஏற்பட்டிருக்கின்றன. ஏனெனில் தென்னிந்தியாவில் மட்டும் 75 ஸ்டூடியோக்கள் இருக்கின்றன. இவற்றில் சுமார் 12 கோடி ரூபாய் முதலீடு செய்யப்பட்டிருக்கிறது. விநியோக ஸ்தாபனங்கள் மட்டும் 200 இருக்கின்றன. இவை தவிர, 2100 கொட்டகைகள் இருக்கின்றன. இத் தொழிலில், உற்பத்தி, விநியோகம், கொட்டகைகள் முதலிய இனங்களில் மொத்தம் சுமார் 160 கோடி ரூபாய் முதலீடு செய்யப்பட்டிருக்கிறது. சுமார் இரண்டு லக்ஷம் மக்கள் இத்தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். தென்னிந்தியாவில் மட்டும், 75,000 குடும்பத்தினர் நேரடியாக இந்தத் தொழில் மூலம் ஜீவனம் நடத்துகிறார்கள். இவர்களெல்லாம் கலைஞர்கள், பாடகர்கள், கதை எழுதுபவர்கள், வசனகர்த்தாக்கள், என்ஜினீயர்கள், படப்பிடிப்பாளர்கள், ஆபீஸ் சிப்பந்திகள், தரகர்கள், ஏஜெண்டுகள், விளம்பரதாரர்கள் என்று பல தரப்பட்டவர்கள். இவர்களைத் தவிர, இத்தொழிலை நம்பிப் பிழைப்பவர்கள் பலர்.

இது மட்டுமல்ல; ராஜ்ய சர்க்காருக்கு வருமான வரி, தமாஷா வரி, இதர வரிகள் இவற்றின் மூலம், தென்னிந்தியாவில் மட்டும் 5 கோடி ரூபாய் வரையில் அரசாங்கத்துக்கு இத்தொழில் மூலம் கிடைக்கிறது.

மேலும் வெளிநாடுகளுக்குத் தென்னிந்தியப் படங்கள் ஏற்றுமதியாகி அதன் மூலம் நமக்கு அன்னியச் செலாவணி வருஷத்துக்குச் சுமார் 90 லக்ஷம் ரூபாய் கிடைக்கிறது. அகில இந்தியாவுக்கும் இந்தத் தொகை சுமார் 2 கோடி ரூபாய் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.



திரு நாகி செட்டி

இப்படிப்பட்ட தொழில்தான் இப்போது நசிக்கும் தறுவாயில் இருக்கிறது. காரணம் படம் எடுக்க இன்றியமையாத கச்சா பிலிம் இறக்குமதி தடை செய்யப்பட்டிருப்பதுதான். அதனால் லக்ஷம் குடும்பங்கள் பரிதவிக்க வேண்டியிருந்தாலும் பாதகமில்லை. படப்பிடிப்புச் சாலைகள் மூடப்பட்டாலும் பரவாயில்லை. அவர்கள் போட்ட முதல் முடங்கிக் கிடந்தாலும் அக்கறை இல்லை. ஏன், அரசாங்கத்துக்குத் தமாஷா வரி, வருமான வரி குறைந்தாலும் கவலை இல்லை! இறக்குமதியை அனுமதிக்கக் கூடாது என்பதுதான் அரசாங்கத்தின் தற்போதையக் கொள்கை.

இதைக் குரங்குப் பிடிவாதம் என்று கூறினால் சற்றும் தவறில்லை. விபரீத விளைவுகள் ஏற்பட்டாலும் ஆராய்ச்சிகூடச் செய்ய மனமில்லாது அரசாங்கம் நடவடிக்கைகளைக் கண்மூடித்தனமாக மேற்கொள்ளுவதைக் கண்டு வெறுப்புத்தான் உண்டாகும். ஐந்தாண்டுத் திட்டம் எதற்காக? பத்து லக்ஷம் பேர்களுக்கு வேலை வாய்ப்பு தேடித் தருவதற்காக என்று பறைசாற்றப்படுகிறது. இதில் எவ்வளவு தூரம், பலன் கிடைத்திருக்கிறது என்பது திட்டமாகச் சொல்ல முடியாது. இங்கே லக்ஷம் பேர்கள், வேலையிலிருந்து கொண்டு ஜீவனம் செய்து கொண்டிருந்தவர்கள், இப்போது தெருவில் நிற்கும் நிலைமைக்கு வந்திருக்கிறார்கள். இதை அரசாங்கம் உணராதது மிகவும்வருந்தத்தக்கதே.

இதில் கவனிக்க வேண்டிய மற்றொரு அம்சம் என்னவென்றால் கச்சா பிலிம் தருவிப்பதற்கு வேண்டிய அன்னியச் செலாவணி முழுவதையும், திரைப்படங்களைக் கிழக்கு ஆசியா நாடுகளுக்கும் இதர நாடுகளுக்கும் அனுப்பித் திரையிட்டு அதன் மூலம் சம்பாதித்துக் கொடுக்கக் கூடிய வாய்ப்புடையது இத்தொழில். ஏற்றுமதி இறக்குமதிக் கணக்கை மட்டும் கொண்டு பார்த்தால் இந்தத் தொழிலினால் அரசாங்கத்துக்கு நஷ்டம்ஏற்படாது. திரைப்படத் தொழிலதிபர்கள் சங்கத் தலைவர் திரு பி. நாகி ரெட்டி இதைப்பற்றி ஓயாமல் எடுத்துச் சொல்லியும் நிலைமையில் அபிவிருத்தி காணவில்லை.

சமீபத்தில் சென்னைக்கு விஜயம் செய்த அயல் வர்த்தக நிர்வாகஸ்தர் திரு கே. பி. லால் எந்தத்தொழிலும் தான் உற்பத்தி செய்யும் பொருள்களை அயல் நாடுகளுக்கு அனுப்பி அதன்மூலம் அன்னியச் செலாவணி சம்பாதித்துத் தருவதாக வாக்குறுதி அளித்தால் அந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் அத்தியாவசியமான சாமான்களை அயல் நாட்டிலிருந்து இறக்குமதி செய்ய அனுமதிக்கப்படும் என்று வர்த்தக சங்கத்தினர்களிடம் தெரிவித்தார். திரைப்படத் தொழில் சம்பந்தமாக இக் கொள்கையை அவர் நடைமுறையில் அமுல் செய்தால், கச்சா பிலிம் முன்போலவே இனியும் இறக்குமதி செய்ய வகை ஏற்படும். அதன்மூலம் தென்னிந்தியப் படத் தொழிலுக்கு அவர் பேருபகாரம் செய்தவராவார். அவரைப் பேட்டி காணச் செல்லும் தூதுகோஷ்டியினர் எடுத்துச் சொல்லும் குறைகளைக் கேட்டுப் பரிகாரம் செய்வார் என்று எதிர்பார்க்கிறோம்.

41

எதைக் கண்டு மனிதன் பயப்பட வேண்டும்? புலியைக் கண்டும் பாம்பைக் கண்டும் நடுங்குவது போல் மனிதன் தீவினைக்கு அஞ்ச வேண்டும் என்கிறார் முனிவர்.

தீவினைக்கு முதன் முதலில் மனம் நடுங்குகிறது. தீவினைகளில் வழக்கப் பட்ட பிறகு அந்த அச்சம் தேய்ந்து போகிறது. அப்படித் தேய விடலாகாது. தீவினை யச்சத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.

**தீவினையார் அஞ்சார்**
**விழுமியார் அஞ்சுவர்**
**தீவினை என்னும் செருக்கு.**

தீவினை யோசனை மனத்தில் உதயமாவதைக் கண்டு நல்லவர்கள் நடுங்குவார்கள். தீவினையில் வழக்கப்பட்டவர்களுக்கு அந்தப் பயம் இல்லை. தைரியம் வந்து விடுகிறது. மிருகத்தோடு பழகினவன் மிருகத்தைக் கண்டு அஞ்சுவதில்லை. பழகாதவர்கள் நடுங்குவார்கள். ஒரு தீவினையைச் செய்யத் தீர்மானிப்பதற்கு முன் அது ஒரு தீய எண்ணமாக மனத்தில் முளைக்கிறது. அந்த எண்ணத்தைக் கண்டே நல்லவர்கள் அச்சப்படுவார்கள். உடம்பின் மேல் ஒரு புழுவைக் கண்டால் அச்சப்படுவது போல் எண்ணத்தைக் கண்டே அச்சப்படுவார்கள்.

'செருக்கு' என்பதைப் பரிமேலழகர் 'மயக்கம்' என்று வைத்து உரை கூறுகிறார். செருக்கு என்பதைக் 'களிப்பு' என்று வைத்து மணக்குடவர் உரை. தானாக உண்டாக்கிக் கொள்ளும் மயக்கமும் களிப்பும் ஒன்றே. பாபங்கள் எல்லாம் அகந்தையால் உண்டாவதால் தீவினை என்பது செருக்கு—காரணம் காரியமாக உபசரிக்கப் பட்டது என்பார் சிலர். 'செருக்கு' என்னும் சொல்லைப் பல இடங்களில் வள்ளுவர் உபயோகப் படுத்தியிருக்கிறார், 'செருக்கு' என்பதை 'ஆண்மை' என்ற பொருளிலும் 'மயக்கம்' என்ற பொருளிலும் 'செல்வம்' என்ற பொருளிலும் உபயோகித்திருக்கிறார். மயக்கத்தால் தாற்காலிகமாக ஒருவித மகிழ்ச்சியைத் தருவது 'செருக்கு' என்று வைத்துக் கொள்ளலாம். தீவினையிலும் அது உண்டாகிறது. அதை நல்லவர்கள் அஞ்சுவார்கள். பாவிகள் அஞ்ச மாட்டார்கள்.

* * *

நெருப்பின் விசேஷ குணம் என்னவென்றால் தீப்பற்றி எரிகிற பொருளை அந்த நெருப்புக்குத் தீனியாகி அதன் வேகத்தைப் பெருக்குகிறது. பொருளை அழிப்பதோடு நிற்பதில்லை. அழியும் பொருளே நெருப்புக்கு உயிரும் வேகமும் பெருகச் செய்கிறது. நெருப்பைப் போலவே பாவச் செயலும். செய்யச் செய்ய வளருகிறது. அடங்குவதில்லை. ஒரு பாவத்தினின்று ஒரு பாவம் உண்டாகி வளர்ந்து கொண்டே போகும். நெருப்பைப் போன்றது பாவம். ஆனால் நெருப்பை விடப் பாவம் அதிக அபாயம்.

**தீயவை தீய**
**பயத்தலால் தீயவை**
**தீயினும் அஞ்சப் படும்.**

தொட்டால் சுடும் என்று நெருப்பைக்கண்டு அஞ்சுவது போல் பாபச் செயல்களையும் அஞ்ச வேண்டும். குணத்தால் பாபமானது தீயின் சாதியைச் சேர்ந்தது. ஆனால் தீயானது தொட்டால் சுடும்; பாபமானது தூரத்திலிருந்தே சுடும், காலம், தேசம், உடம்பு (மறுபிறப்பு) இவற்றைக் கடந்தும் சுடும். நெருப்பை அணைக்க முடியும். ஆனால் பாவச் செயல் கர்மவிதியால் தொடர்ந்து செல்லும், அணைக்க முடியாது என்பதைஉணர்ந்து தீயை விடப் பாபத்தை அஞ்சுவாய் என்கிறார் முனிவர்.

# முன்னறிவிப்பு...

புதிய மர்பி ரேடியோ மாடல் 0724 மற்ற இதர ரேடியோக்களைவிட மிகவும் போற்றப்படும். ஏனெனில்

- மிக அழகிய பெட்டியில் அமைக்கப்பட்டுள்ளது
- பல்லாண்டுகளுக்கு மிகச் சிறந்த முறையில் சேவை அளிக்கும்








**மாடல் 0724**

- 6-வால்வ்
- ஆல்-வேவ்
- 8 பாண்ட், முழுதும் பாண்ட்ஸ்பிரெட்
- ஏஸி அல்லது ஏஸி/டிஸி (இரு மாடல்கள்)
- விலை ரூ. 495/-: உள்ளூர் வரிகள் தனி

## murphy radio

பல ஆண்டுகளுக்கு உங்களை மகிழ்விக்கும்!

தென் இந்தியாவுக்கு சோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்

முகமது இப்ராஹிம் & கோ. பிரைவேட் லிட்., பெங்களூர்-ஹைதராபாத்-சென்னை 1

டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யரைத் தமிழ் மக்களுக்கும் 'கல்கி' வாசகர்களுக்கும் அறிமுகப்படுத்துவது அவசியமில்லை. அரசியல், அரசாங்க நிர்வாகம், சட்டம், சமூக அறிவு, தத்துவம் மற்றும் பல துறைகளில் அறிவும், ஆற்றலும் உள்ளவர். எந்த விஷயத்தைப் பற்றிப் பேசினாலும், அறிவூட்டும் வகையில் விளக்கம் செய்யும் திறம் படைத்தவர் நமது வேண்டுகோளுக்கிணங்கி இவ் விஷயத்தைப் பற்றித் தமது கருத்துக்களை விளக்க இசைந்ததற்கு நாம் பெருமை கொள்ளுகிறோம். கருத்துப் பொதிந்த அவர் கட்டுரை கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. — ஆசிரியர்

# வேண்டாம் இந்தப் பிடிவாதம்!

**டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர்**

நமது நாட்டின் அன்னியச் செலாவணி வாய்ப்புகள் பற்றியும் அயல் நாட்டுக் கடன் சுமையால் நாட்டுப் பொருளாதாரத்துக்கு ஏற்படும் விளைவுகளைப் பற்றியும் பேசும்போது இம்மாதிரி நிலைமையில் இங்கிலாந்தின் அனுபவத்தை நினைவுபடுத்திக் கொள்ளுவது பொருத்தமேயாகும். விவேகத்துடன் கூடிய நிர்வாகத்திறமையால் ஆங்கிலேயர்கள் தங்களுடைய அன்னியச் செலாவணி நிலைமையை அபிவிருத்தி செய்து கொண்டனர். சுமார் ஒரு வருஷத்துக்கு முன்புதான் அங்கு ஒரு செலாவணி நெருக்கடி ஏற்பட்டது என்பது எல்லோரும் அறிந்ததே. வர்த்தகப் போக்கினால் உண்டானதல்ல அது. பாங்கர்களின் ரகஸ்ய பேர நடவடிக்கைகளினால் ஏற்பட்டது. ஸ்டர்லிங் நாணயத்தின் வெளிநாட்டு மதிப்பு பாதிக்கப்படலாம் என்ற பீதி இருந்தது. ஆனால் சீக்கிரத்திலேயே அந்த நாணயம் தன் மதிப்பை நிலைநிறுத்திக் கொண்டு விட்டது. நடப்பு வருஷத்தில் முதல் மூன்று மாதகாலத்தில் இங்கிலாந்து தனது தங்க நிதியையும் டாலர் நிதியையும் பெருக்கிக் கொண்டதோடு தனது கடன்களையும் திருப்பிக் கொடுத்துக் கொண்டிருந்தது. 1957-ம் ஆண்டு செப்டம்பரிலிருந்து 13½ கோடி பவுன் ஸ்டர்லிங் கடனைத் திருப்பிக் கொடுத்து விட்டு, 23·9 கோடி பவுன் கூடுதலாகத் தனது தங்க நிதியைப் பெருக்கிக் கொண்டது. ஏற்றுமதி—இறக்குமதி பாங்கிக் கடன் தொகையைக் கணக்கிடாமல் ஏற்பட்ட அபிவிருத்தி இது.

இங்கே இந்தியாவில், அன்னியச் செலாவணி நெருக்கடி ஏற்பட்டதைத் தடுத்திருக்க முடியாது. ஆனால் மே மாத ஆரம்பத்தில் நமது கையிருப்பிலுள்ள அயல்நாட்டுப்பத்திரங்கள் 184 கோடி ரூபாய் அளவுக்குக் குறைந்து விடும் என்று எதிர்பாராததால் அதைக் கேட்டதும் திடுக்கிட்டோம். சட்டப்படி இந்த அளவு 200 கோடி ரூபாய் அளவுக்குக் குறையக் கூடாது. அந்த வாரத்திய கணக்கில் வெளிநாடுகளில் நமது கையிருப்பு அதிகரித்திருந்தாலும் நெருக்கடி என்ற நிலைமையில் மாறுதல் இல்லை. அடுத்த சில மாதங்களில் இந்தக் கையிருப்பு நிதியிலிருந்து அதிகமாகப் பணம் எடுக்க வேண்டியிருக்குமாதலால் இது மேலும் குறையலாம் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது. "ஈஸ்டர்ன் எகானமிஸ்டு" என்னும் வாரப்பத்திரிகை இது சம்பந்தமாக ஆராய்ந்த போது சுமார் 50 கோடியாவது இந்தக் கையிருப்பு குறையலாம் என்று மதிப்பீடு செய்தது. உண்மையில் இந்த வருஷ முடிவுக்குள் ரூ. 100 கோடியாவது குறைந்து விடும் என்று தான் நினைக்க வேண்டும்.

இந்த நெருக்கடி எப்படி உருவாயிற்று? முந்திய ஆண்டுகளில் நன்கு ஆராய்ச்சி செய்யாமல் கவனக் குறைவால் மேற்கொண்ட இறக்குமதிக் கொள்கையினால் மட்டும் ஏற்பட்டதல்ல இது. உயர்ந்து கொண்டே போகும் பாதுகாப்புச் செலவினாலும் அதனால் ஏற்பட்ட கணிசமான அன்னியச் செலாவணி செலவினாலும் உண்டாயிற்று என்பதை நம் நாட்டில் எல்லோரும் ஏறக்குறைய ஒருமுகமாகவே இப்போது ஒப்புக் கொள்ளுகின்றனர். நமது ஐந்து வருஷத் திட்டப் பொறுப்புகளை உத்தேசித்து, அபிவிருத்தி இனங்களில் அவசியமாக ஏற்படும் செலவுகளை நாம் குறைத்துக் கொள்ளக் கூடாது. குறைக்கவும் முடியாது. ஆனால் அபிவிருத்தி யல்லாத இதர இனங்களில் அன்னியச் செலாவணி செலவழிப்பதைக் கண்டிப்பாகக் குறைக்க வேண்டும். அதுதான் நாட்டுக்குத் தேவை. நமது பிரதமர் நேரு சென்ற பிப்ரவரி மாதம் 'பட்ஜெட்' சமர்ப்பித்த போது நிகழ்த்திய



டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர்

பிரசங்கத்தில் இந்த நிலைமையைப் பற்றி நம்பிக்கை யூட்டும் முறையில் பேசினார். ஆனால் உண்மை நிலை வேறு. முதல் திட்டத்தின் இறுதி ஆண்டில், நமது விமானப்படைச் செலவு மட்டும் ரூ. 35 கோடி ஆயிற்று என்று கணக்கு கொடுக்கப்பட்டது. இரண்டாவது திட்டத்தில் முதல் மூன்று ஆண்டுகளில் இந்த ஒரு இனத்தில் மட்டும் செலவு ரூ. 100 கோடிக்கும் அதிகமாகப் போயிருக்கிறது என்பது தெரிகிறது. இந்தத் தொகையில் பாதி பாகம் அன்னியச் செலாவணி அம்சம். இவ்வாறு படைபல விஸ்தரிப்பு நாம் பறைசாற்றிப் பிரகடனம் செய்யும் லக்ஷியங்களுக்கு ஒத்ததுதானா என்று கூடக் கேள்விகள் கேட்கப்படுகின்றன. காந்திஜியின் அஹிம்ஸைக் கொள்கைகளைப் பற்றி இங்கே பிரஸ்தாபிப்பது பொருத்தமாக இருக்காது என்பதை அங்கீகரித்தாலும் பாகிஸ்தானுடன் நாம் போட்டி போட்டுக் கொண்டு நமது படைபலத்தை விஸ்தரிக்க வேண்டுமா என்பதை எடுத்துக் கூறத்தான் வேண்டும். மேலும், நமது ஆலை அபிவிருத்திகளுக்காக அயல் செலாவணி எதிர்பார்த்ததைவிடச் சுமார் ரூ. 100 கோடிக்கும் அதிகமாகச் செலவாகி யிருக்கிறது என்பதையும் இங்கே குறிப்பிடவேண்டும். இம்மாதிரி நிலைமையில், போதிய அளவு அயல் நாட்டு உதவியும், திருப்திகரமாகத் தவணைக் கடன்கள் உதவியும் கிடைத்தாலொழிய மேலும் மேலும் அயல் நாணயச் செலவினங்களை மேற்கொள்ளக்கூடாது என்று பலர் அபிப்பிராயப்படுகிறார்கள். இதில் விவேகம் இருக்கிறது என்பது தெளிவு. இந்தக் காரணத்தினால்தான், அத்தியாவசியமான திட்டங்கள், அவசியமல்லாத இனங்கள் என்று துருவித் துருவிப் பாகுபாடு செய்யாமல், அயல்நாட்டுச் செலாவணியைக் கோரும் எந்தப் புது அம்சத்தையும் திட்டத்தையும் மேற்கொள்ளாதிருக்கவும், மேற்கொண்டதைக் கூடக் குறைத்துக் கொள்ளவும் ஆலோசனை சொல்லுகிறார்கள் பல பிரமுகர்கள்.

நெருக்கடியைச் சமாளிக்க, இறக்குமதிக் கட்டுப்பாடு கடுமையாக மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. அயல் நாடுகளிலிருந்து கடன் வசதிகளுக்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஆனால், அடுத்த மூன்று அல்லது நான்கு ஆண்டுகளில், ஏற்கனவே கிடைத்துள்ள கடன்களுக்காகவும், தவணைக் கடன்களுக்காகவும் பெரும் தொகையை நாம் திருப்பிக் கொடுக்க வேண்டியிருக்கும் என்பதைப் பொது மக்கள் எப்படியும் உணர வேண்டும். இது சம்பந்தமாக, ஸ்விட்ஜர்லாந்து தங்கள் நாட்டிலிருந்து இந்தியாவுக்கு அனுப்பும் சாமான்களுக்கு நாம் கொடுக்க வேண்டிய தொகையைச் செலுத்துவதில் சில சலுகைகள் அளிக்க உடன்பட்டிருக்கிறது என்பதைச் சந்தோஷத்துடன் வரவேற்க வேண்டும். தொழில் நிதிக்கார்ப்பரேஷன்கூட, நம் நாட்டில் தனியார் தொகுதியிலுள்ள தொழில் அபிவிருத்திக்காகவும், அவர்களுடைய செலாவணி நெருக்கடியைச் சமாளிக்கவும், வெளிநாடுகளில் கடன் எழுப்பப் போவதாயும் சொல்லப்படுகிறது. இவையெல்லாம் நெருக்கடியைச் சமாளிக்கச் சில வழிகள். ஆனால் இதில் வருந்தத்தக்க மற்றொரு அம்சத்தையும் கவனிக்க வேண்டும். நாம் மாமூலாக ஏற்றுமதி செய்து அயல் செலாவணி சம்பாதிக்கும் தேயிலை, சணல் போன்ற இனங்களில் வெளிநாட்டுப் போட்டி காரணமாக, ஏற்றுமதி குறைந்து கொண்டே வருகிறது என்பது கவலைதரக் கூடியது.

இந்தப் பிரச்னையைப் பற்றிப் பிரஸ்தாபித்த "ஹிந்து" தினசரிப் பத்திரிகை அரசாங்கத் தொகுதியில் புது அபிவிருத்தித் திட்டங்கள் மேற்கொள்ளப் படுவது தாமதிக்க வேண்டுமென்றும், தனியார் தொகுதியில் புதிது புதிதாக அயல்நாட்டுக் கூட்டுறவுடன் பெரிய பெரிய தொழிற்சாலைகளை நிறுவ வேண்டும் என்றும் ஜூன் 7ஆம் தேதி இதழில் வலியுறுத்தி யிருக்கிறது. இது கவனிக்கப்பட வேண்டிய ஒரு ஆலோசனை. இந்தியாவில் தற்போது பதுங்கிக் கிடக்கும் தங்கத்தை (இதன் மதிப்பு சுமார் 1750 கோடி என்று உத்தேசமாகக் கணக்கிட்டிருக்கிறார்கள்) வெளிக் கொண்டுவர சில ஆலோசனைகளும் கூறப்பட்டிருக்கின்றன. இந்த ஆலோசனைகள் கூடப் பரிசீலனைக்குகந்தவையே. மத்திய அரசாங்க நிதிமந்திரி கூடச் சமீபத்தில் ஒரு இடத்தில், நமது அன்னியச் செலாவணி நிலைமை 'கவலை தரும்படியாகத்தான் இருக்கிறது' என்று பகிரங்கமாகவே சொல்லியிருக்கிறார். உண்மையிலேயே, இப்போதிருந்து நாம் கடும் சிக்கன வாழ்வு வாழ வேண்டிய காலம் என்பதைத்தான் இது காட்டுகிறது. அதற்கு நமது மக்கள் தயார் செய்து கொள்ள வேண்டும். இந்த நிலைமைக்கு நம்மை உட்படுத்திக் கொள்ளும்போது, அரசாங்கமும் இப்போது செய்து கொண்டு வரும் அளவிலேயே அவர்கள் செலவைச் செய்யலாமா என்பதைக் கவனிக்க வேண்டும். இந்த அம்சத்தில் ஒரு சிரமம் என்னவென்றால், நிதி இலாகாவிலாகட்டும், இதர இலாகாவிலாகட்டும், அரசியல் தலைவர்கள் மக்களிடையே எல்லையற்ற நம்பிக்கையை ஊட்டி வளர்த்து விட்டு, உடனடியாக அந்த நிலையிலிருந்து பிறழ வேண்டியிருப்பதுதான். இப்படிச் செய்வதால் பொதுஜன அபிப்பிராயம் தெளிவாக உருவாவதில்லை. எரிச்சல்தான் உண்டாகிறது. இதைத் தவிர்க்க வேண்டும்.

இவ்வளவையும் சொன்ன பிறகு, இந்தப் பிரச்னைக்கு முடிவான தீர்வு காணவேண்டுமானால், நமது உணவு உற்பத்திப் பெருக்கில்தான் அதைக் காணவேண்டும் என்பதையும் கூற வேண்டும். விவசாயப் பண்டங்கள் அதிகமாக உற்பத்தியாக வேண்டும். அதற்கு நிலங்களில் உச்சவரம்பு, சமுதாய முறைப் பண்ணை, கூட்டுமுறை விவசாயம் முதலிய விஷயங்களில் காரியசித்தியாகக் கூடிய மாதிரி கொள்கைகளை வகுத்துக் கொள்ள வேண்டும். இந்தப் பிரச்னைகளையெல்லாம் காரிய சாதனைக்கேற்றவாறுதான் கவனிக்க வேண்டும்.

நிலைமை கவலை தரும் அளவுக்கு முற்றிவிட்டபடியால் இதுவரையில் கடைப்பிடிக்கப்பட்ட பிடிவாதமான கொள்கைகளையும் பாரபட்சமற்ற மனப்பான்மையுடன் உண்மையை அறிந்து கொள்ளும் நோக்குடன், மீண்டும் பரிசீலனை செய்ய வேண்டியது அவசியம். ஏனெனில், நம்முடைய அயல் செலாவணி

நிதி கரைந்து கொண்டே வருகிறது என்ற பிரச்னை நம் முன்னே நிற்கிறது. அதுமட்டு மல்ல; பலர் பயப்படுவதைப் போல் அமெரிக்காவில் வியாபார மந்தம் ஏற்பட்டு, கிழக்கு ஐரோப்பா நாடுகளிலும் இதர நாடுகளிலும் வெளிநாட்டுப் பொருள்களை இறக்குமதிசெய்யும் சக்தியும் குன்றிவிட்டால், இவற்றினால் உலக நிதி நாணயப்போக்கில் ஏற்படும் விளைவுகளையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். இவையும் நம் முன்னே தான் நிற்கின்றன.

நமது ஏற்றுமதியைப் பெருக்கத் தீவிர நடவடிக்கையும், ஐந்து வருஷத் திட்டங்களை நீண்டகால வரம்புக்கு மாற்றி வமைப்பதும், பிடிவாதக் கோட்பாடுகளைப் புறக்கணித்து விவசாய உற்பத்தியை அதிகரிப்பதும் நம்முடைய தற்போதையத் தேவைகள். இந்தப் பிரச்னைகள் கூடச் சமீபத்தில் உலக ஏற்றுமதி மார்க்கெட்டில் கவலைப்படும் அளவுக்கு ஜப்பான் நமக்குப் போட்டியாகத் தலைதூக்கி விட்டபடியால் சிக்கல் மிகுந்ததாக ஆகி விட்டன. ஆலை ஜவுளியும் சர்க்கரை ஏற்றுமதியும் நமக்குக் கைகொடுக்கும் என்ற நம்பிக்கை பூராவாகப் பலனளிக்கவில்லை. எனவே, நம்நாட்டின் தற்போதைய நிலையைச் சமாளிக்க வேண்டுமானால் நேர்மையான ஆராய்ச்சியும், தைரியத்துடன் தொடர்ந்து செயலாற்றும் நடவடிக்கையும்தான் தேவை.

---

# பாராட்டுவிழா வைபவம்!

"இந்தப் பூமியிலே எதற்காகப் பிறந்தோம்? அதிலும் பொதுநலத் தொண்டையும், பத்திரிகைத் தொழிலையும், தமிழ் அபிமானத்தையும் ஏன் மேற்கொண்டோம்?" என்று பெரும்பாலானபொதுநலத் தொண்டர்களும் பத்திரிகை ஆசிரியர்களும், தமிழ் அபிமானிகளும் நாடெங்கும் குறைப்பட்டுக்கொண் டிருக்கும் சமயத்தில் ஒரு மனிதர் "மறுபடியும் இந்தப் பூமியில் பிறந்தால் பொதுநலத் தொண்டையே விரும்புவேன். பத்திரிகைத் தொழிலைத்தான் மேற்கொள்வேன். தமிழ் ஆராய்ச்சியில்தான் ஈடுபடுவேன்" என்று சொன்னால் அது அதிசயமான சம்பவம் அல்லவா? சென்றமாதம் 19உ மதுராமித்திரன் திரு த. சுப்பிரமணியம் அவர்கள் தான் அவ்வாறு சொன்னார்.



திரு த. சுப்பிரமணியம் அவர்கள் சுமார் முப்பது ஆண்டுகளாகத் தமிழ் மக்களுக்கும், தமிழ் நாட்டுக்கும் சேவை செய்து வருகிறார். அவருடைய சேவையைப் பாராட்டச் சென்ற மாதம் 19உ ஜனநாயகச் சேவா சங்கத்தாரும் அவருடைய நண்பர்கள் பலரும் சேர்ந்து ஒரு பாராட்டு விழா நடத்தினார்கள். பொன்னாடை போர்த்தினார்கள். தங்கக் கணையாழி சூட்டினார்கள். கேடயம் வழங்கினார்கள். இன்னும் பட்டாடைகளும், தங்கப் பதக்கங்களும் பாராட்டுப் பத்திரங்களும் பரிசுகளும் வழங்கப்பட்டன. விழாவுக்குச் சென்னை தருமபுர ஆதீன மடாலயப் பிரசார நிலையத்தின் தலைவர் வித்வான் சோமசுந்திரத் தம்பிரான் அவர்கள் தலைமை தாங்கினார். மராமத்து இலாகா மந்திரி திரு கக்கன், தமிழரசுக் கட்சித் தலைவர் திரு ம.பொ.சி., திரு கி. வா. ஜகந்நாதன், திரு பொ. திருகூடசுந்தரம் பிள்ளை, திரு வெங்கடாசலபதி, குமாரி எஸ். பாரதி, கவிஞர் கு. சா. கிருஷ்ணமூர்த்தி முதலிய அறிஞர்கள் விழாவில் கலந்து கொண்டு மதுராமித்திரன் திரு சுப்பிரமணியம் அவர்களின் சேவையைப் பாராட்டினார்கள். மேற்படி பாராட்டு விழாக் காட்சிகள் சிலவற்றை இந்தப் பக்கத்தில் இருக்கும் படங்களில் காணலாம்.

டாக்டர் பி. ஜே. தாமஸ் கேரள ராஜ்யத்திலிருந்து ராஜ்ய சபைக்கு அங்கத்தினராகச் சமீபத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டவர். முன்னாட்களில் சென்னை பல்கலைக் கழகத்தில் பொருளாதார ஆசிரியராக இருந்தவர். பங்கு மார்க்கெட் கமிஷனுக்கு யுத்த கால இறுதியில் தலைமை வகித்துப் பங்கு மார்க்கெட்டுகளைப் பற்றியும் அவை செயல்படும் முறைகளைப் பற்றியும் அற்புதமான யாதாஸ்தை வழங்கியுள்ளார். மத்திய அரசாங்கத்தின் நிதி இலாகாவுக்கும் தொழில் இலாகாவுக்கும் ஆலோசகராக இருந்தவர். சென்னை மேல் சட்டசபையில் அங்கம் வகித்தவர். வேலையில்லாத் திண்டாட்டத்தைப்பற்றி விரிவாக ஆராய்ச்சி செய்தவர். சமூகப் பணியில் பற்று கொண்டவர். பாரத நாட்டுப்பொருளாதாரத்தின் பல அம்சங்களைத் திறனுடன் ஆராய்ந்து அனுபவப்பட்டவர். அன்னியச் செலாவணிப் பிரச்னையைப்பற்றி அவர் கூறியுள்ள கருத்துக்கள் ஆணித்தரமாக அமைந்துள்ளன. — ஆசிரியர்

# பேச்சைக் குறைத்துச் செயலைப் பெருக்குவோம்!

**டாக்டர் பி. ஜே. தாமஸ்**

*(ராஜ்ய சபை அங்கத்தினர்)*

**பா**ரதத்தின் தற்போதையப் பொருளாதார நிலை எல்லோருக்கும் மிகுந்த கவலைதரும் படியாக உள்ளது. பார்லிமெண்ட் சபையில் சொற்பொழிவுகள் நிகழ்த்தி விடுவது சுலபம். அச்சம் தரும் அம்சங்களையும் திருப்தியளிக்காத நிலவரங்களையும் மேலெழுந்த வாரியாக மழுப்பி மூடிவிடலாம். அதுவும் சுலபம் தான். ஆனால் பொது மக்கள் சம்பந்தப்பட்ட வரையில் தங்கள் வாழ்க்கைத்தரத்தில் உயர்வு காண அவர்கள் நீண்ட காலமாகவே காத்துக் கொண்டிருக்கின்றனர். அவர்களைப் பார்லிமெண்டில் நிகழ்த்தப்படும் சொற்பொழிவுகளால் ஏமாற்றிவிட முடியாது.

கட்டுப்பாடுடன் இயங்கும் சில தொழிலாளர் கூட்டத்தினர் தங்கள் வருமானத்தில் உயர்வு கண்டிருக்கிறார்கள் என்பது உண்மையே. ஆனால் இந்த உயர்வு எதிர்பாராத மற்றொரு பலனையே உண்டாக்கி யிருக்கிறது. கட்டுப்பாட்டுடன் செயலாற்ற முடியாத பெரும்பான்மை ஆலைத் தொழிலாளர் கூட்டத்தினிடையேயும், விவசாயத் தொழிலாளர்களிடையேயும் ஏற்கனவே நிலவிவந்த ஏமாற்றத்தை இது அதிகப்படுத்தி விட்டது. அதிகமாகவும் கடுமையாகவும் உழைக்கும் தொழிலாளிகளுக்குக் கிடைக்கும் ஊதியம் மிக மிகக் குறைவு. அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கைகளால் எவருக்கு அதிக நன்மை கிடைக்க வேண்டுமோ, அவர்களுக்குக் குறைந்த நலனே கிட்டியிருக்கிறது.



டாக்டர் பி. ஜே. தாமஸ்

இரண்டு வருஷங்களுக்கு முன்பு நமது நாடு மிக்க பேராசையுடன் கூடிய இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை வகுத்து அதை அங்கீகரித்தது. இதை நிறைவேற்றி வைப்பதற்குத் தேவையான பொருள் வசதிகள் அனைத்தும் அந்தந்தச் சமயத்தில் கடினமில்லாமலே கிடைத்துவிடும் என்றும் சொல்லப்பட்டது. நிதி சம்பந்தப்பட்ட தேவைகளைத் தவிர, பொருள் தேவைகளுக்கும் தட்டு ஏற்படாதென்றும் சொன்னார்கள். ஆனால் இந்த இரண்டு அம்சங்களிலும் அனுபவம் எதிர்பார்த்ததற்கு மாறாகவே இருக்கிறது. ஏமாற்றத்தையே உண்டாக்கி யிருக்கிறது.

நிதி சம்பந்தப்பட்ட தேவைகளைப் பற்றி முக்கியமாக முதலில் கவனிக்கலாம். இவற்றில் மிகுந்த கவலையைக் கொடுக்கும் அம்சம் அன்னிய நாட்டுச் செலாவணி சம்பந்தப்பட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பித்த போதும், அதற்குச் சற்று முன்பும் நமது இருப்பில் கணிசமான தொகை அன்னியச் செலாவணி சேமித்து வைக்கப்பட்டிருந்தது. இது திருப்திகரமாகவே இருந்தது. இவற்றில் பெரும் பகுதி இப்போது செலவு செய்தாகி விட்டது. இனி இச்சேமிப்பு நிதியிலிருந்து செலவு செய்ய முடியாதபடி நெருக்கடி நிலைமை ஏற்பட்டிருக்கிறது. மிகத் தாராளமாக அயல் நாடுகளிலிருந்து உதவி கிடைத்தாலுங்கூட நம்மால் இந்த நெருக்கடியைச் சமாளிப்பது மிகவும் கஷ்டமாகவே இருக்கும்.

இந்த நிலைமை எப்படி உருவாயிற்று? எப்படி நெருக்கடி உண்டாயிற்று? முதலாவதாக அரசாங்கத் தொழில்கள் அபிவிருத்தித் திட்டத்தின் கீழ்த் தேவைப்படும் என்று உத்தேச மதிப்பீடு செய்யப்பட்ட அன்னியச் செலாவணித் தொகை அனைத்தும் உத்தேசத்துக்கு மிகவும் அதிகமாக உயர்ந்து விட்டது. இரண்டாவதாக, உணவுப் பொருள்கள், பாதுகாப்புத் தேவைகள் என்ற இரண்டு இனங்களில் ஏற்பட்ட செலவுகள் உத்தேசித்திருந்ததைக் காட்டிலும் அதிகமாகி விட்டன. மூன்றாவதாக, நம் நாட்டு ஏற்றுமதி வர்த்தகம் கடந்த சில வருஷங்களாகவே மிகவும் ஏமாற்றத்தையே அளித்திருக்கிறது.

நமது நாட்டில் ஆலைத் தொழில் உற்பத்தி 1938ம் ஆண்டு இருந்ததைக் கொண்டு ஒப்பிட்டுப் பார்த்தால், 90 சதவிகிதம் அதிகரித்திருக்கிறது. விவசாயப் பண்டங்களின் உற்பத்தி 30 சதம் உயர்ந்திருக்கிறது. ஆனால் நமது ஏற்றுமதி வியாபாரம் 1951-53 ஆகிய ஐந்தாண்டுகளில் யுத்த காலத்துக்கு முன்னிருந்த எண்ணிக்கை அளவில் 72 சதவிகிதமே இருந்தது. அதாவது மதிப்பை எடுத்துக் கொள்ளாமல், பண்டங்களின் எடை, எண்ணிக்கைக் கணக்குப்படி 28 சதவிகிதம் குறைந்து போயிற்று. உலகத்தில் இதர பாகங்களில் ஏற்றுமதி வியாபாரத்தின் போக்கு பொதுவாக யுத்த காலத்துக்குமுன் இருந்ததைவிட 71 சதவிகிதம் அதிகரித்து வந்திருக்கிறது. எனவே நம் நாட்டு ஏற்றுமதி வியாபாரம் உலக ஏற்றுமதி வியாபாரப் போக்குக்கு எதிரிடையாக இருந்து வருகிறது. இந்தச் சாதனையைக் குறித்து நாம் எப்படிப் பெருமை கொள்ள முடியும்?

**பா**துகாப்பு சம்பந்தமாக ஏற்பட்ட அதிகச் செலவுகளைப் பற்றி நான் இங்கே குறிப்பிட விரும்பவில்லை. ஆனால் உணவுப் பண்டங்கள் அதிக அளவில் இறக்குமதி செய்யப்பட வேண்டிய அவசியம் ஏற்பட்டதைக் குறித்து ஏமாற்றம்தான் அடைய வேண்டும். நாட்டில் உணவு உற்பத்தி வெகு வேகமாகப் பெருகிக் கொண்டு வருகிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இந்தியா உற்பத்தி விஷயத்தில் தன் தேவைகளைத் தானே பூர்த்தி செய்து கொள்ளும் நிலைமையில் இருப்பதுடன் ஏற்றுமதி செய்வதற்குக் கூட உபரியாகப் பண்டங்கள் மிச்சப்படும் என்றெல்லாம் சொன்னார்கள். ஆனால் நடைமுறை நடவடிக்கைகள் எவ்வாறு இருக்கின்றன? மத்திய அரசாங்கத்தில் உணவு விவசாய மந்திரி காரியாலயத்தின் மூலம் நாம் ஏராளமான பணத்தைச் செலவு செய்துவருகிறோம். இதற்காக இந்த ஒரு இலாகாவில் மட்டும் விரிவடைந்து ஓயாது வளர்ந்து கொண்டேயிருக்கும் சிப்பந்திகளின் எண்ணிக்கை சுயராஜ்யத்துக்கு முன் மத்திய அரசாங்கம் முழுவதிலும் இருந்த எண்ணிக்கை அவ்வளவு இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இவ்வளவுக்கும் எதிர்பார்த்த உணவு உற்பத்தி கிடைத்தபாடில்லை. மாறாக, அடுத்த மூன்று ஆண்டுகளுக்கு, அதாவது திட்டத்தில் பாக்கியுள்ள காலத்தில், வருஷத்துக்கு 20 அல்லது 30 லக்ஷம் டன் வீதம் உணவுப் பண்டங்கள் சுமார் ரூ. 150 கோடி அன்னியச் செலாவணி செலவு செய்து இறக்குமதி செய்ய வேண்டிய நிலைமையே ஏற்பட்டிருக்கிறது. நம்முடைய அன்னியச் செலாவணி நெருக்கடியை இது மிகவும் தீவிரமாகப் பாதிக்கப் போகிறதென்பதில் சந்தேகமே இல்லை. அந்த அளவுக்கு நம்முடைய நம்பிக்கை அனைத்தையும் ஒருங்கே குவித்து வைத்திருக்கும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பூர்த்தி செய்து நிறைவேற்றி வைப்பதில் தடை ஏற்படும்.

உணவு உற்பத்தி பெருகாததற்கு ஒரு முக்கிய காரணம் நிலச் சீர்திருத்தம் எப்படியும் மேற்கொள்ள வேண்டும் என்று முன்பின் யோசனையின்றி அரசாங்கங்கள் காட்டும் அறிவீனமான ஆர்வம். சொந்தக்காரருக்கும் வேலையாட்களுக்குமிடையே உள்ள இடை நிலை உரிமைக்காரர்களை ஒழித்து, பண்ணையாட்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதில் எவருக்கும் ஆட்சேபமிருக்காது. ஆனால் உச்சபக்ஷ வரம்பு முதலியவை சம்பந்தமாக எழுப்பப்படும் கோஷங்களும், இவற்றால் விவசாயத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள் மனத்தில் உதிக்கும் நிச்சயமற்ற தன்மையும் குழப்பமும், முதலீடு செய்து சுறுசுறுப்புடன் பண்ணை நடத்தும் பலரை அத் தொழிலினின்று விரட்டி விட்டன. இம்மாதிரி நிலச் சீர்திருத்த முறைகளினின்று உணவு உற்பத்தி பெருகும் என்று எதிர்பார்ப்பது மதியீனமே ஆகும். ஆனால் இம்மாதிரி விசித்திரமான கொள்கைகள், தேர்தலில் வோட்டுப் பெறவேண்டும் என்ற தீவிர எண்ணத்துடன் கலந்து விட்டால் அதனால் பொது நலனுக்கு எவ்வளவு தீமைவிளையும் என்பதை இப்போது நாம் பார்த்துக் கொண்டே இருக்கிறோம்.

அதிகமாகப் பேசுவதைக் குறைத்துக் கொண்டு செயலில் அதிகமாக ஈடுபட வேண்டும். இதுதான் இந்தியாவில் இப்போது தேவை. நம்மை ஆளுபவர்கள் உண்மை நிலையை நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும். தொடர்ந்து கொண்டே போகின்ற பொருளாதாரச் சீரழிவைத் தடுக்க வேண்டுமானால், இப்போதாவது நிலைமையைப் புரிந்துகொள்ள வேண்டும். பாரதம் ஒரு ஏழை நாடு. நமது பிரதமர் அடிக்கடி சொல்லி ஞாபகமூட்டுவதுபோல் ஏழைமையைப் பகிர்ந்தளிப்பதன் மூலம் 'சோஷலிஸம்' உருவாகி விடாது. பொது மக்களின் பொருளாதார நிலைமையில் வளர்ச்சி, அல்லது முன்னேற்றம் ஏற்பட வேண்டுமானால், நாட்டின் தேசிய வருமானம் மிகுந்த அளவில் பெருக வேண்டும். உற்பத்திப் பெருக்கினால் மட்டுமே தேசிய வருமானம் விரிவடையும். உற்பத்திப்பெருக்கு கணிசமான அளவுக்கு இன்னமும் தனியார் வசத்தில்தான் இருக்கிறது என்பதை மறக்கவாகாது. எல்லோரும் கடும் உழைப்பு உழைக்க வேண்டும். அதுதான் இப்போது நாட்டுக்கு முக்கியமான தேவை. கடந்த பத்து ஆண்டுகளாகப் பேசப்பட்டு வந்த லட்சியப் பேச்சுகள் தொடர்ந்து பேசப்படுவது நிற்க வேண்டும். தேவைகளைக் குறைத்துக் கொண்டு வாழ வேண்டுவது அவசியம் என்று சமீப காலத்தில் அடிக்கடி கூறப்படுகிறது. இதை நடைமுறையில் உடனடியாக மேற்கொள்ளுவது நல்லது. இதை மேலிடங்களிலிருந்து தான் பிடிவாதமாக முதன் முதலில் ஆரம்பிக்க வேண்டும்.

ஆகஸ்ட் 1 முதல்



# இல்லறமே நல்லறம்

குமாரி கமலாவின்
கலர் நடனங்கள்

டைரக்ஷன்
P. புல்லையா B.A.

நாராயணன் கம்பெனி தயாரிப்பு

"அன்னியச் செலாவணி நெருக்கடி என்று தனியாக இல்லை. சமூகப் பொருளாதாரத்திலே தோன்றிய வியாதியின் ஒரு சின்னம்தான் இது. இதற்குப் பரிகாரமும் சமூக வியாதியை நிவர்த்தி செய்யும் வகையிலேதான் தேட வேண்டும்" என்கிறார் திரு எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமி. இந்திய சிவில் சர்வீஸிலே பணியாற்றிய இவ்வறிஞர் உணவு உற்பத்தி விஷயங்களில் ஆராய்ச்சிகள் நடத்தியிருக்கிறார். —ஆசிரியர்

# தலைவலி மருந்தால் வயிற்றுவலி தீருமா?

எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமி ஐ. ஸி. எஸ். (ரிடையர்ட்)

பழங்காலத்தில் வேதாந்த விசாரம் செய்தவர்கள் அதற்கென்று ஒரு 'பரிபாஷை'யைக் கையாண்டனர். அது போலவே இப்பொழுது பொருளாதாரத்தைப் பற்றி எழுதுவோர் ஒருவிதமான புதுத் தமிழைக் கற்பித்திருக்கிறார்கள். ஆங்கிலத்தில் பொருளாதார நூல்களில் 'தெருவில் போகும் ஆள்' என்று ஒரு புனைமனிதன் உண்டு. அதாவது நான், நீங்கள், அடுத்த வீட்டுக்காரர் போன்ற சாதாரணப் பேர்வழிகள்—பண்டிதரில்லை. ஆனால் படிக்கத் தெரியாத பாமரனும் இல்லை;—ஏதோ எளிய நடையில் விளங்க வைத்தால் தெரிந்து கொள்ளும் வன்மை வாய்ந்தவர்கள்.

இன்று இந்தியாவில் அனைவருக்கும் பொருளாதார விசாரங்களில் ஒரு ருசி ஏற்பட்டிருக்கிறது. 'தெருவில் போகும் ஆளு'க்குத்தான் நாம் எழுத வேண்டும். ஆகவே, இச்சமயம் நம் நாட்டில் நாணய விஷயத்தில் என்ன நெருக்கடி, அதற்கு என்ன மருந்து என்ற ஆராய்ச்சியை ஒரு ரூபாய்க்கு வாங்கின பொருளை இரண்டு ரூபாய்க்கு வாங்கும் பொது மனிதருக்கு எடுத்துரைக்க, நாம் கடமைப்பட்டிருக்கிறோம்.

இந்தியா வெளிநாடுகளிலிருந்து அநேகப் பொருள்களை வாங்குகிறது. அவற்றின் ஜாபிதா பெரிது. முக்கியமாக ஆலைகளுக்கும், மின்சார உற்பத்திச் சாலைகளுக்கும் வேண்டிய இயந்திரங்கள், உணவு தானியங்கள், மருந்து, சினிமா 'பிலிம்', தினசரி உபயோகத்துக்கான பொருள்கள் முதலியன இறக்குமதி செய்கிறோம். நம் நாட்டிலிருந்து தேயிலை, துணி, சணல் முதலிய சாமான்களை ஏற்றுமதி செய்கிறோம்.

வெளி நாடுகளிலிருந்து நாம் வாங்கும் பண்டங்களுக்குப் பணம் எப்படிக் கொடுப்பது? நாம் இங்கிருந்து வெளிநாடுகளுக்கு அனுப்பும் சாமான்களுக்கு அவர்கள் நமக்கு எவ்வாறு பணம் கொடுக்கின்றனர்? இந்த ஏற்பாட்டை முதலில் தெரிந்துகொள்ள வேண்டும்.

இங்கிலாந்தில் வாங்கும் பொருளுக்குப் "பவுன்" என்ற ஆங்கிலேய நாணயத்தில் விலை கொடுக்க வேண்டும். அமெரிக்காவில் வாங்கும் பொருள்களுக்கு "டாலர்" என்ற நாணயத்தில் விலை கொடுக்க வேண்டும். இதற்குப் பவுனும் டாலரும் தேவை. அவைகளைச் சம்பாதிப்பது எப்படி? நாம் செய்யும் பொருள்களை அவர்களுக்கு விற்றால் அவர்களுடைய நாணயம் நமக்குக் கிடைக்கும். ஆகையால் ஒரு நாடு மற்றொரு நாட்டின் பொருளை இறக்குமதி செய்தால், அதற்கேற்ப அந்த நாட்டுக்கு நம்முடைய பொருளை ஏற்றுமதி செய்ய வேண்டும்.

ஆகையால் இறக்குமதிச் சாமான்களுக்கு விலை கொடுக்க ஏற்றுமதி செய்ய வேண்டி வருகிறது. இன்று நம் நாட்டில் இறக்குமதி அதிகம்; ஏற்றுமதி குறைவு. ஆகையால் வெளிநாட்டு நாணயம் நமக்கு அதிகமாகத் தேவைப்படுகிறது. ஏற்றுமதி அதிகம் என்றால், வெளிநாடுகளில் நம் நாணயத்துக்கு ஒரு "மவுசு" ஏற்படுகிறது.

இதனால்தான் வெளிநாடுகளுக்கு அதிகமாக ஏற்றுமதி செய்யும் அமெரிக்கா தேசத்து 'டாலருக்கு' எல்லாத் தேசத்தினரும் பறக்கின்றனர். அதற்குக் "கடின" நாணயம் என்ற கௌரவமான பெயரும் வழங்கி வருகிறோம்.

இந்தச் சிக்கலை எப்படித் தீர்ப்பது? (1) போதாததற்குக் கடன் வாங்கலாம். (2) இல்லாவிட்டால் இறக்குமதியைக் குறைக்கலாம். (3) ஏற்றுமதியை அதிகப்படுத்தலாம். பொருளாதாரப் பண்டிதர்களெல்லாம் திரும்பத் திரும்ப இம் மூன்று மருந்துகளைத்தான் சொல்லுகிறார்கள்.

ஐந்தாண்டுத் திட்டத்துக்கென்று ஏராளமான இயந்திரங்களையும் வேறு பண்டங்களையும் இறக்குமதி செய்கிறோம். நாட்டில் விளைவு போதாததினால் உணவு தானியங்கள் வெளிநாடுகளிலிருந்து வரவழைக்க வேண்டியிருக்கிறது. இந்த இரண்டு இனங்களையும் நாம் தீர்த்துக் கொள்ளாத வரையில் நம்முடைய நாணய நெருக்கடியும் தீராது. வேறு எந்த நெருக்கடியும் தீராது. என்னுடைய அடிப்படையான அபிப்பிராயம் இதுவே.

மூன்று எஃகு ஆலைகள், பெருமளவுக்கு மின்சார உற்பத்தி எல்லாம் தேவைதான். ஆனால் துயில் எழுந்ததும் ஆண்டி அரசன் ஆகவேண்டும் என்பது என்ன ஆசை? ஆயிரம் ஆண்டு அனுபவித்த வறுமையைக் கண்ணிமைப் பொழுதிலே போக்க முயன்று வெளிநாட்டுச் சாமானுக்கு விலை கொடுக்க முடியாமல் திண்டாடித் திடீரென்று பேய் பிடித்தவன்போல் இங்கும் அங்கும் கடன் வாங்குவதும், முக்கியமான வெளிநாட்டு ஔஷதங்களையும், இக் காலத்திய வாழ்க்கைக்கு வேண்டிய சாமான்களையும் வாங்க முடியாமல் செய்வதும் என்ன பேதைமை!

'ஒரு வயது முதிர்ந்த குருட்டுப் பிச்சைக்காரன் தவம் செய்து, கடவுள் அவன் முன் தோன்றி, "ஒரு வரம் கேள்" என்று கட்டளையிட்டதற்கு, "என் வீட்டின் ஏழாவது மாடியிலிருந்து தெருத் திண்ணையில் என்னுடைய

பேரன் தங்கத் தட்டில் பால் சாதம் சாப்பிடுவதை நான் கண்கொண்டு காண வேண்டும்'' என்று ஓரே அடியாகக் கண்ணும், பணமும், வீடும், மக்களும் கேட்டதுபோல இருக்கிறது நம்முடைய அரசாங்கத்தின் அவசரம்.

வெளிநாடுகளில் கடன் வாங்குவது இன்றைய நெருக்கடியை ஒத்தி வைப்பதேயாகும். இப்பொழுது நாம் வாங்கியிருக்கும் கடனுக்கு 1961 ஆண்டிலிருந்து ஆண்டுக்குச் சராசரி 100 கோடி வீதம் வெளியூர் நாணயத்தில் திருப்பிக் கொடுக்க வேண்டும். மேலும் கடன் வாங்கின நாட்டினிடம் வணக்கத்துடன் நட்புறவும் கொள்ள வேண்டும். இன்று அமெரிக்கா ''மத்திய ஆசியா'' நாடுகளில் அநியாயமாகத் தன் சேனையை 'இறக்குமதி' செய்திருக்கிறது. ஏராளமாகக் கடன் வாங்கி விட்டதனால் நாம் அமெரிக்காவை இதற்காக மனமாரக் கண்டிக்க முடியுமா?

இந்தியாவில் உணவு உற்பத்திக்கென்று, 1942 வருஷத்திலிருந்து அதாவது பதினைந்து ஆண்டுகளாக அரசாங்கம் பெரும் முயற்சி செய்து வருகிறது. இன்றைக்கும் அன்றுபோல் உணவை இறக்குமதி செய்வதால் உள்நாட்டு உற்பத்தி முயற்சியில் எங்கேயோ தவறு நடந்து வருகிறது என்பதற்கு என்ன சந்தேகம்? க்ஷயரோகம் வந்தவன் ''இன்றைய தினம் காய்ச்சல் கொஞ்சம் குறைவு'' என்பது போல் மழை பொழியும் ஆண்டுகளில் மட்டும் நாம் மார் தட்டிக் கொண்டு, மழை குறைந்த மற்ற ஆண்டுகளில் உணவு உற்பத்திக்கென்று ஊக்கத்தை மந்திரிக் கூட்டத்தாலும் பிரசாரத்தாலும் வளர்க்க முடியுமா? அமைதியாக நிரந்தரமான வழிகளைத் தேட வேண்டாமா?

உணவுப் பொருள்களை எப்படி அதிகரிப்பது என்பது பெரிய கேள்வி! அதற்கு விடை இங்கு விவரிக்க முடியாது. ஆனால் நம் நாட்டில் வேண்டுமளவு உற்பத்தி செய்வதற்கு எத்தனையோ வழிகள் உண்டு. அவைகள் திடீர்த் திட்டங்கள் அல்ல. மந்திரவாதிதான் மாங்கனியை நம் முன் வரவழைப்பான். இயற்கையில் தடபுடலே கிடையாது. ஐந்தாண்டு, பத்தாண்டு என்று காலத்தில் கோடு கிழிக்காமல், செய்வதைச் சரியாகச் செய்தால் நாளடைவில் நாம் உண்ணும் உணவை நாமே பயிராக்கிக் கொள்ளலாம்.

ஆகவே, முதலாவதாக நாம் செய்ய வேண்டியது ஐந்தாண்டுத் திட்டத்தில் வகுத்துள்ள புது ஆலைகளையும், மற்றும் ''அணை— மின்சாரம்'' போன்ற புது பிரேரணைகளையும் கொஞ்சம் கொஞ்சமாகச் சக்திக்குத் தகுந்தவாறு ''இத்தனை ஆண்டுத் திட்டம்'' என்று அவசரப்படாமல் பொதுவாக அமுலுக்குக் கொண்டு வர வேண்டும்.



திரு என். எம். கிருஷ்ணசாமி

அதுபோலவே, முதலில் கஷ்டங்கள் வந்தாலும், நீடித்து நிற்கும் விவசாய முன்னேற்றங்களையே கடைப்பிடித்து உணவு உற்பத்தியை நாளடைவில் பெருக்க வேண்டும்.

இறக்குமதி யந்திரங்களுக்கு அடிமையான திட்டங்களைக் குறைக்க வேண்டும் என்பது சரியே. ஆனால் எவ்வளவு குறைப்பது? என்று தெருவில்போகும் மனிதன் கேட்கலாம். அதற்கு விடை எளிது: நம்முடைய ஏற்றுமதி எவ்வளவோ அவ்வளவுக்குச் சுமாராகக் குறைக்க வேண்டும். இதற்கிடையே ஏற்றுமதியை அதிகரிப்பதற்கான முயற்சிகளெல்லாம் செய்ய வேண்டும்.

நமது ஏற்றுமதி ஏன் பெருகவில்லை? உதாரணமாக ஆலை ஜவுளியை எடுத்துக் கொள்வோம். பர்மா, மலேயா, இலங்கை, ஆஸ்திரேலியா, ஆப்கானிஸ்தான், மத்திய அராபியநாடுகள் — இந் நாடுகளில் இந்தியத் துணிகள் ஏராளமாகச் செலவாக வேண்டாமா? சென்னையில் ''ரட்டன் பஜாரில்'' சிந்து தேசத்தவர்களின் துணிக் கடைகளை நாம் பார்க்கிறோம். அவர்கள் இவ்வுலகில் பல தேசங்களில் கடை வைத்து வியாபாரம் செய்து வருகிறார்கள். அவர்களிடம் ஏற்றுமதி செய்தால் எளிதில் வெளி நாட்டு வியாபாரம் ஓங்கும். இதற்குப் பதிலாக, அரசாங்கக் காரியதரிசிகள் ''வியாபாரக் குழு'', ''துணிப்பொருள் காட்சி'', ''ஏற்றுமதிப் பெருக்கு விழா!'' (Export Promotion Drive) என்று பூப்பிரதட்சணம் செய்வது வெறும் கையினால் போடும் முழமாக முடியும். அந்தந்தத் தொழிலில் அனுபவம் உள்ளவரைக் கொண்டு தான் நாம் வெளிநாடுகளுக்கு இந்தியச் சரக்குகளை விற்பனை செய்ய முடியும். இதற்கேற்ற விளம்பரங்கள் நாம் சரிவரச் செய்வதில்லை.

இவையெல்லாம் ஒரு பக்கம் இருக்க, நம் நாட்டுச் சரக்குகள் விலை ஏறிக்கொண்டு வருகின்றன என்பதை நாம் பயத்துடன் கவனிக்க வேண்டும். சமீபத்தில் சர்க்கரை ஏற்றுமதியைக் குறித்து ஆலோசனை செய்கையில் இந்திய சர்க்கரையின் விலை வெளிநாட்டுச் சரக்கின் விலையைவிட அதிகம் என்று நாம் அறிந்தோம். ஆனால் இதற்கு என்ன காரணம் என்று துப்பறியும் வேலையில் ஒருவரும் ஈடுபடவில்லை. ஆலைகள் நூலை விற்க முடியாமல் தவிக்கின்றன; துணியும் விலை போகவில்லை. நூல் விலையும், துணி விலையும் நாளுக்கு நாள் ஏற்றத்தில் நிற்கின்றன. ஏன்?

எல்லா ஆலைகளிலும் இப்பொழுது தொழிலாளி ராஜ்யம் நடைபெறுகிறது. நாட்டில் ஒவ்வொரு பகுதியாரும் தியாகம் செய்ய வேண்டும் என்று அரசாங்கத்தார் அதட்டிப் பேசிப் பணம் பிடுங்குவது ஒரு சார்பில்;






மற்றொன்றில், நாளொரு அளவாக ஆலைத் தொழிலாளிகளின் கூலி ஏற்றம். நம் நாட்டில் நூற்றுக்கு எழுபத்தைந்து பேர்கள் கிராம வாசிகள்; விவசாயிகள். நாளுக்கு ஒன்று அல்லது ஒன்றரை ரூபாய் சம்பாதிப்பவர்கள். சர்க்கரையும், துணியையும் இவர்கள்தான் பெரும்பாலும் வாங்குகின்றனர். அவர்களுடைய சக்தியைத் தாண்டி விலைவாசிகள் ஏறினால் சரக்கு ஆலையில் குவிந்து கிடக்க வேண்டியதுதான். குவிந்துதான் வருகிறது.

செங்கற்பட்டில் ஒரு ரூபாய் சம்பாதிக்கும் குடியானவன், பஸ் ஏறிச் சென்னை வந்ததும், துறைமுகத்தில் வேலை ஏற்றுக் கொண்டு பத்து ரூபாய் கூலி போதாதென்று வேலை நிறுத்தம் செய்கிறான். இதென்ன திடீர் மாற்றம்? இத்தகைய தொழிலாளர் கிளர்ச்சிகளையெல்லாம் அரசாங்கத்தார் மிகுந்த பக்தியுடன் பாதுகாத்து வருகின்றனர்.

நம்முடைய சமுதாயத்தில், துணியை வாங்குபவர் வருமானத்துக்கும், உற்பத்தி செய்பவர் வருமானத்துக்கும் சம்பந்தமே இல்லாமல் இருக்கிறது. வாங்குபவர் நூற்றுக்கு 75 பேர்கள். செய்பவர் நூற்றுக்குப் பத்துப் பேர்கள். இன்று முதலாளி தொழிலாளியை வருத்தவில்லை; நகரத்துத் தொழிலாளி நாட்டுப்புறத்துத் தொழிலாளியை ஏமாற்றிக் கொண்டு வருகிறான்.

மேற்கூறிய மூன்று விஷயங்களை வைத்துத்தான் நாணய நெருக்கடியை ஆராய வேண்டும். 1. முதலில் ஐந்தாண்டுத் திட்டத்தை நீட்டி, பல ஆண்டுகளில் 'திட்டம்' என்ற கொள்கையை விட்டு, நற்செயல் செய்ய வேண்டும் என்றுஎண்ணி நம் சக்திக்கு ஏற்றவாறு செய்து கொண்டே வரவேண்டும். 2. அதே போல் நாட்டு விவசாயத்தை அவசரமின்றி நீடித்த காலத்துக்கு நிலைத்து நிற்கும் சீர்திருத்தங்களைக் கொண்டு பெருக்க வேண்டும். 3. வியாபாரிகள் மூலம் ஏற்றுமதியைப் பெருக்க வேண்டும். அதற்கு இந்தியாவில் தயார் செய்யும் சாமான்கள் விலையைக் குறைக்க வேண்டும். குறைப்பதற்கு வழியின்றிக் குறுக்கிடுவது தொழிலாளர்களின் பிடிவாதம். தங்களுடைய எதிர்கால முன்னேற்றத்தையும் பாராமல், தங்கமுட்டை இட்ட வாத்தைக் கொன்றவன் போல், அன்னியர் பேச்சில் மயங்கி நிற்கின்றனர். தொழிலாளருடைய தலைவர் தொழிலாளிகளாகவே இருக்க வேண்டும். அப்பொழுது அரசியல் முறையில் உழலாத நல்ல தொழிலாளர் தலைவர்கள் தோன்றுவார்கள்.

இதெல்லாம் நடக்குமா? என்று கேட்கிறார் 'தெருவில் போகும் மனிதர்.' நடக்காவிட்டால் நாம்தான் கஷ்டப்படுவோம். நாணய நெருக்கடி என்று தனியாகக் கிடையாது. வயிற்றுக்கோளாறு வந்தவனுக்குத் தலைவலிப்பது போல், நாணய நெருக்கடி சமூகத்தைப் பிடித்த ரோகத்துக்கு ஒரு அடையாளம். தலைவலி மருந்தால் வயிற்றுவலி சரியாகுமா? அது போலவே நமது இறக்குமதி, ஏற்றுமதி அவசரத் திட்டம், உணவு உற்பத்தி, உள்ளூர் விலைவாசி இவைதான் உண்மையான வியாதிகள். இவைகளை நாம் கவனிக்க வேண்டும்.

இந்தக் கட்டுரை ஆசிரியர் திரு மின்னு ஆர். ஷராப் பம்பாயில் ஒரு வர்த்தக ஸ்தாபனத்தின் நிர்வாகஸ்தராகச் செயல் புரிகிறார். கணக்கியல் நிபுணர். பொருளாதாரத் துறையின் பல்வேறு அம்சங்களில் தீவிரமாக ஆராய்ச்சி நடத்தி வருகிறார். பல பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதியிருக்கிறார். சிறு வயதினராக இருந்தாலும் ஆராய்ச்சித் திறனுள்ளவர். ஏற்றுமதியைப் பெருக்குவது எவ்வளவு அவசியம் என்பதை இங்கே விளக்குகிறார். —ஆசிரியர்

# ஸ்டர்லிங் நிதிக் குறைவும் அதன் விளைவும்

**எம். ஆர். ஷராப்**

நமது அயல்நாட்டு வியாபார வரவு செலவுக் கணக்கில் துண்டு விழுந்ததை ஈடு செய்ய நமது அன்னியச் செலாவணிக் கையிருப்பிலிருந்து 1956-57 ஆண்டுகளில் வாரத்துக்குச் சராசரி 5.4 கோடி ரூபாய் செலவு செய்தோம். 1958-ம் ஆண்டு ஆரம்பத்தில் இந்த வகையில் வாரத்துக்கு 1.4 கோடி தான் செலவு செய்யப்பட்டது. ஆனால் இந்த அபிவிருத்தி நீடித்து நிற்கவில்லை. இந்த வருஷம் மே மாதத்தில் மறுபடியும் வாரத்துக்குச் சுமார் 5 கோடி வரையில் அன்னியச் செலாவணிக் கையிருப்பிலிருந்து செலவு செய்யும்படி ஆகிவிட்டது. இதிலிருந்து வருஷ ஆரம்பத்தில் காணப்பட்ட அபிவிருத்தி நிரந்தரமானதல்ல, அதைக் கண்டு ஏமாறக்கூடாது என்பது நன்கு தெரிகிறது. இதைப் பலர் அப்போதே சொன்னார்கள். அவர்கள் கூற்று ஊர்ஜிதமாகி விட்டது. நமது அன்னியச் செலாவணி நிலைமை நெருக்கடியாகவே இருக்கிறது.

இதற்கு என்ன காரணம்? இந்த நெருக்கடி இரண்டாவது திட்ட காலத்தில் இவ்வளவு கடுமையாக ஏன் உருவாயிற்று என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? இதற்கு விடை காண 1956-57-ம் ஆண்டுகளில் வழங்கப்பட்ட இறக்குமதி லைசென்சுக் கணக்கைப் பார்க்கவேண்டும். 1956ம் ஆண்டில் 1333 கோடிக்கும் 1957-ம் ஆண்டு முற்பாதியில் 425 கோடிக்கும் லைசென்சுகள் வழங்கப்பட்டன. அதாவது 18 மாத காலத்தில் 1758 கோடிக்கு இறக்குமதி அனுமதிக்கப் பட்டது. நமது ஏற்றுமதி, சராசரி வருஷத்துக்கு 630 கோடி தான். எனவே இதே 18 மாத காலத்தில் ஏற்றுமதி 950 கோடியாகவும் இறக்குமதி 1758 கோடியாகவும் இருந்ததால், அதிகப்படியான 808 கோடி ரூபாய் இறக்குமதிக்கு நாம் அன்னியச் செலாவணி வழங்க வேண்டி வந்தது. இது திட்டத்தில் கண்ட ஒரு குறைபாடு. இதன் விளைவால் நமது அன்னியக் கடன் பொறுப்புக்களை நிறைவேற்ற முடியாமல், நமது நாட்டு நாணயத்துக்கும் கௌரவத்துக்கும் இழுக்கு ஏற்படுமோ என்று பயப்பட வேண்டியிருக்கிறது.



திரு எம். ஆர். ஷராப்

இவ்வாறு இறக்குமதி லைசென்சுகள் பெருவாரியாக வழங்கப்பட்டதால் 1956-ம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் 746 கோடியாக இருந்த நமது ஸ்டர்லிங் கையிருப்பு 1958 மே மாதக் கடைசியில் 242 கோடிக்குக் குறைந்துவிட்டது. இதைத் தவிர அதிகப்படியாக சர்வதேச நாணய நிதியிலிருந்து கிடைத்த 95 கோடி உதவியையும் பயன்படுத்திக் கொண்டு விட்டோம். எனவே, கடந்த 26 மாதங்களில் நமது அன்னியச் செலாவணி 800 கோடி வரையில் செலவழிந்துபோயிற்று. இதை முதல் ஐந்தாண்டுத் திட்ட கால அனுபவத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

முதல் திட்ட காலத்தில் முதல் நான்கு வருஷங்களில் அயல் நாட்டு வர்த்தக வரவு செலவுக் கணக்கில் நமக்குச் சாதகமான நிலை ஏற்பட்டிருந்ததால் அன்னியச் செலாவணிக் கையிருப்பு 30 கோடி மட்டுமே செலவாயிற்று. மேலும் நம்முடைய உள்நாட்டு நோட்டு நாணயத்துக்குப் பாதுகாப்பாக அயல்நாட்டுப் பத்திரங்கள் சட்டப்படி எப்போதும் நாம் வைத்துக் கொள்ள வேண்டும். சமீபத்தில் ரிஸர்வ் பாங்கிச் சட்டத்தில் செய்த மாறுதல்படி இது 63 கோடி அளவுக்குக் குறையக் கூடாது. இத்துடன் தங்கமாக 117 கோடி இருக்க வேண்டும். இரண்டும் சேர்ந்து குறைந்த பட்சம் 180 கோடி இருக்க வேண்டியது சட்டப்படி அவசியம். சென்ற மே மாதம் 30-ஆம் தேதியன்று நமது நாணயப் பாதுகாப்பு நிதியில் இந்தக் குறைந்த பட்ச அளவுக்கு அதிகமாக ரூபாய் 159 கோடி தான் நமது கையிருப்பில் இருந்தது. நாம் அன்னியச் செலவுப் பற்றுக் குறையைச் சமாளிக்க வேண்டுமானால் இந்த அளவுக்குத்தான் கையிருப்பிலிருந்து வழங்க முடியும். இரண்டாவது யுத்தத்துக்குப் பின், அதாவது பாகிஸ்தான் பிரிவினைக்குப் பின் நமது ஸ்டர்லிங் நிதியில் 1769 கோடி ரூபாய் இருந்தது. அதாவது மொத்த நோட்டு

நாணயத்தின் அளவைக் காட்டிலும் 45 சதம் அதிகமாக இருந்தது. இப்போதோ ஸ்டர்லிங் நிதிக் கையிருப்பு நமது நோட்டுச் செலாவணியில் ஏழில் ஒரு பங்குதான் இருக்கிறது.

அன்னியச் செலாவணிக் கையிருப்பு இப்படி அதிகமாகச் செலவழிந்ததற்கு ஒரு காரணம் நமது உணவுப் பொருள்களின் இறக்குமதி. இது எல்லோருக்கும் தெரிந்தது தான். மக்களில் 70 சதவிகிதம் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும் நமது தேசம் உணவுப் பொருள் வருஷந்தோறும் இறக்குமதி செய்ய வேண்டிய நிலைமையிலிருப்பது ஆச்சரியமே. அப்படிச் செய்தும் மக்களுக்கு என்னமோ குறைந்த அளவில்தான் உணவு அளிக்க முடிகிறது.

தொழில் வளர்ச்சி நாட்டில் சர்க்காரத் தொழிலிலும் தனியார் தொழிலிலும் அபிவிருத்தி அடைந்திருந்த போதிலும், அவற்றுக்குத் தேவைப்பட்ட யந்திரச் சாமான்களும் யந்திரத் தளவாடங்களும், முதலில் திட்டக் கமிஷன் அதிகாரிகள் எதிர்பார்த்ததைவிடப் பெருவாரியாக அதிகரித்துவிட்டன. இவையெல்லாம் சேர்ந்து இரண்டாவது திட்டத்தில் அன்னியச் செலாவணி 1100 கோடிதான் துண்டு விழக்கூடும் என்று எதிர்பார்த்தது; இப்போது 1700 கோடியாக அது உயர்ந்து விட்டது.

இந்தக் குறைவைப் பூர்த்திசெய்யச் சர்க்கார் பெரு முயற்சிகள் செய்து அன்னிய உதவி சம்பாதித்திருக்கின்றனர். அவர்கள் எடுத்துக் கொண்ட முயற்சிகள் பலனளித்துள்ளன என்பது குறித்துச் சந்தோஷப்பட வேண்டியதே. அன்னிய உதவி 800 கோடி வரையில் தேவைப்படும் என்று முதலில் திட்டக் கமிஷன் மதிப்பிட்டிருந்தது. ஆனால் மறுபடியும் பரிசீலனை செய்தபோது இது 1038 கோடி அளவுக்கு வேண்டும் என்று கணக்கிடப்பட்டுள்ளது. நாம் சென்ற வருஷம் எடுத்துக் கொண்ட மாதிரி தீவிர முயற்சிகள் இனிமேலும் எடுத்துக் கொண்டு தற்போது அமுலிலிருக்கும் வரி விகிதங்களும் நீடித்தால், இந்த அளவுக்கு அன்னியக் கடன் உதவி கிடைக்கக்கூடும். எனினும், இதுவரையில் கிடைத்த உதவியும் இனி கிடைக்கக்கூடிய உதவியும் நன்கொடைகள் அல்ல, கடன்கள் என்பதை மறக்க முடியாது. கடன்கள் எல்லாம் அந்தந்தக் காலத்துக்குள் திருப்பிக் கொடுக்க வேண்டும்.

அன்னியச் செலாவணி நிலைமை இவ்வாறு கவலை தரும்படியிருக்க நமது திட்ட அதிகாரிகளின் பிரச்னைகளும் சுலபமாகத் தீர்த்துவிடக் கூடியன அல்ல என்பதையும் ஒப்புக்கொள்ள வேண்டும். முன்னேற்றமடையாத இதர நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், கடந்த சில ஆண்டுகளில் இந்தியா பொருளாதாரத் துறையில் பெருமளவுக்கு அபிவிருத்தியடைந்துதான் இருக்கிறது. கடுமையான பல கட்டுப்பாடுகள் இருந்தாலும், வரிகளின் பளு அதிகமாக இருந்தாலும், தனியார் தொழில் தொழிலதிபர்கள் மிகுந்த ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் தொழில் அபிவிருத்தி ஏற்படுத்தி விட்டனர். பல புதுத் தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டன. ஏற்கனவேயுள்ள தொழில்களும் விஸ்தரிக்கப்பட்டன. இந்த அபிவிருத்திகளின் பலன்களை நமது பொதுமக்கள் அதிகமாக அடையவில்லை. பணப் பெருக்கம் காரணமாக விலைவாசிகள் உயர்ந்துவிட்டதாலும், உணவுப் பண்டங்களில் வருஷா வருஷம் காணப்படும் பற்றாக்குறைக்காக இறக்குமதி செய்ய நேர்ந்ததாலும் பொருள் நிலையின் முன்னேற்றத்தை பூராவாக நாம் அடையவில்லை. வருஷத்துக்கு 50 லக்ஷம் என்று பெருகிக்கொண்டே போகும் ஜனத்தொகை, அபிவிருத்திகளின் பலன்களை நாம் அடையாமலிருப்பதற்கு மற்றொரு காரணம். ஜனப் பெருக்கத்தின் விளைவுகளைப்பற்றி நாம் இன்னமும் முழுதும் உணர்ந்து கொள்ளவில்லை. இப்போது நாம் உட்கொள்ளும் குறைந்தபட்ச அளவிலேயே நாம் இனியும் உணவு உட்கொண்டாலும் இந்த அதிகமான ஜனசங்கியைக்கு வருஷத்துக்கு 10 லட்சம் டன் உணவு தானியங்கள் தேவைப்படும். நமது நாட்டு விவசாயமே ஒரு தேக்க நிலையை அடைந்திருக்கிறது. அதிகமாக விஸ்தரிப்புக்கு இடமில்லை. மேலும் மேலும் முதலீடு செய்து விவசாயம் நடத்தினால் அதற்குத் தகுந்த வருமானம் கிடைப்பதில்லை. செலவுக்கும் வருமானத்துக்கும் சரிக்கட்டும் நிலையில் விவசாயம் எப்போதுமே இருந்து வந்திருக்கிறது. இந்த நிலையில் மக்களின் உணவுத் தேவைகளை இறக்குமதியைக் கொண்டுதான் பூர்த்தி செய்து வருகிறோம். இப்போதுள்ள விலைவாசிகளின்படி 10 லட்சம் டன் உணவுப் பொருள்கள் இறக்குமதிக்கு 40 அல்லது 50 கோடி ரூபாய் செலவாகிறது. அன்னியச் செலாவணி நெருக்கடி காரணமாகக் கிடைக்கக் கூடிய ஒவ்வொரு பவுனையும் டாலரையும் நாம் சுரண்டிக் கொண்டிருக்கும்போது இவ்வளவு பெருவாரியான தொகை உணவுப் பண்டங்களுக்காகச் செலவழிப்பது எவ்வளவு கடினம் என்பது விளங்கும். ஆகையால் நமது ஜனப் பெருக்கத்தைக் குறைக்க எல்லாவித நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ள வேண்டியது அவசியம். உணவுப் பொருள் பற்றாக்குறையைச் சமாளிப்பதற்காக மட்டும் இதைச் சொல்லவில்லை. மற்றத் தேவைப் பொருள்களாகிய ஜவுளி வகைகள், சர்க்கரை, எண்ணெய், எண்ணெய் விதைகள் முதலிய பல இனங்களுக்கும் உள்நாட்டுத் தேவையே அதிகரித்து, வெளிநாடுகளுக்கு இப்பொருள்களை அனுப்ப முடியாமல் போய் விடுகின்றன. அதனால் கிடைக்கக்கூடிய அன்னியச் செலாவணியும் நமக்குக் கிடைக்காமல் போகிறது.

ஆகவே, இந்தச் செலாவணி நெருக்கடியை எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும், இந்தப் பிரச்னைகளுக்கு ஒரு வகையில்தான் தீர்வு காண முடியும்—உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டும்; ஜனப்பெருக்கத்தைக் குறைக்க வேண்டும். உற்பத்தியை விரிவாக்கி, பெருக்கி உள்நாட்டுத் தொழில் அபிவிருத்திக்கு வகை செய்து உதவியளிக்க வேண்டும். அவசியமில்லாத பொருள்களை இறக்குமதி செய்யலாகாது. ஆனால் ஆலைகளுக்கு அவசியமான பொருள்களையும் நாட்டில் கிடைக்காத பொருள்களையும் போதிய அளவு இறக்குமதி செய்து வெளிநாடுகளுக்கு அனுப்பச் சாமான்கள் தயாரித்து, அன்னியச் செலாவணி சம்பாதிக்க வேண்டும். எப்பொழுதும் ''ஏற்றுமதி செய்; இல்லையேல், அழிந்து போ'' என்பதுதான் நமது லட்சியமாக இருக்க வேண்டும்.

# வாழ்க



டாக்டர் டி. எஸ். துரைசாமி அவர்களின் புதல்வி சௌ. பவானி பி. ஏ.க்கும், திரு சுந்தரத்துக்கும் திருச்சானூரில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தது.



மெட்ராஸ் ஆட்டோ சர்விஸ் மானேஜர் திரு வி. ஆர். சிவராமன் அவர்களின் புதல்வர் திரு எஸ். ராமகிருஷ்ணன் சௌ. ஜயலக்ஷ்மியை மணந்து கொண்டார்.



தி. கல்லுப்பட்டி பிரின்ஸிபால் திரு வெங்கடசுப்பிரமணியம் புதல்வி சௌ. பத்மாவதிக்கும் திரு வெங்கடேசனுக்கும் விழுப்புரத்தில் விவாகம் நடைபெற்றது.



நல்லி திரு வி. நாராயணசாமி அவர்களின் புதல்வர் திரு குப்புசாமிக்கும் சௌபாக்கியவதி அலமேலுவுக்கும் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தது.



ஏ. வி. தாமஸ் கம்பெனியின் மானேஜர் திரு கே. சீனிவாசன் அவர்களின் புதல்வி சௌ. மாலதிக்கும் திரு என். கே. பத்மநாபனுக்கும் திருமணம் நடந்தேறியது.



எர்ணாகுளம் பர்மாஷெல்லைச் சேர்ந்த திரு எம். வி. ராமசாமி அவர்களின் புதல்வி சௌ. வசந்தாவுக்கும் ஸ்ரீகிருஷ்ணனுக்கும் திருமணம் நடைபெற்றது.

# மணமக்கள்



கணேஷ் அண்ட் கம்பெனி ஸ்ரீ சுப்பய்யர் அவர்களின் சகோதரர் புதல்வி சௌ. பானுமதிக்கும் திரு பாஸ்கரனுக்கும் விவாகம் வெகு சிறப்பாக நடந்தேறியது.



திரு கே. வி. சம்பத் அவர்களின் சகோதரர் திரு கே. வி. சந்தானம் பி. ஏ.க்கும் சௌ. பங்கஜவல்லி பி. ஏ.க்கும் சென்னையில் திருமணம் நடந்தேறியது.



திரு ராமச்சந்திரய்யர் புதல்வி சௌ. ஜயலக்ஷ்மிக்கும் கும்பகோணம் சேஷய்யர் குமாரர் திரு ராஜாராமனுக்கும் சிதம்பரத்தில் விவாகம் நடைபெற்றது.



பேராசிரியர் திரு வி. ஆர். மயிலேறு அவர்களின் புதல்வர் திரு எம். சிவகுமாருக்கும் சௌ. சந்திராவதி பி. ஏ.க்கும் கோவையில் திருமணம் நடந்தது.



திரு ஜயராமனுக்கும் சௌபாக்கியவதி லக்ஷ்மிக்கும் ஆவணி பதினெட்டாம் தேதி நாகப்பட்டணத்தில் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.



சிதம்பரம் சர்க்கார் டெலிபோன் இலாகாவைச் சேர்ந்த திரு ஜி. ஆர். ராமமூர்த்திக்கும் சௌ. விமலாவுக்கும் மாயூரத்தில் விவாகம் விமரிசையாக நடைபெற்றது.



விலை ரூ. 225/- நிகரம்

இனிய நாதம் என்றும் கேட்க!

# ரீஸா ரேடியோக்கள்

மத்திய - ராஜ்ய - அரசாங்கங்களுக்கு
விநியோகிக்கப்படுபவை

வியாபார விபரங்களுக்கு:

**ரீஸா ரேடியோ ஷோ-ரூம்**

"மியூஸிக் மியூஸிகல்"

3/16, மவுண்ட் ரோடு போன்: 84380 மதராஸ்-2

---

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டி வியாதிகளுக்கு

மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும், சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார். அப்பொழுது அவரை நேரில் கண்டு ஆலோசிக்கலாம்.

ஆலோசனை நேரம்: குறிப்பு:—காலை 9 to 11 மணி வரை; மாலை 3 to 5 மணி வரை

| இடம் | தேதி | | விலாசம் |
|---|---|---|---|
| கரூர் | 1 | காலை | சென்ட்ரல் மெடிகல் ஸ்டோர்ஸ் |
| சேலம் | 2 | காலை & மாலை | சேலம் மெடிகல் சப்ளைஸ் & பார்மஸி லிட். |
| ஈரோடு | 3 | காலை | ஸ்ரீ கிருஷ்ணா & கோ., |
| திருப்பூர் | 3 | மாலை | ஆர். எஸ். வாசன் & கோ., |
| கோயமுத்தூர் | 4 | காலை & மாலை | சுல்வர் & கோ., (நாடார் மான்ஷன்) 189, ரங்கை கவுடர் தெரு |
| பாலக்காடு | 5 | காலை | நாதம் & கோ., |
| பொள்ளாச்சி | 5 | (2 to 3 மாலை) | எல். எஸ். மணி & கோ., |
| உடுமலைப்பேட்டை | 5 | (4 to 5 மாலை) | ராஜேந்திரா & கோ., |
| பழனி | 5 | (6 to 7 மாலை) | ஷண்முகானந்தா பவன், ரெயில்வே ஸ்டேஷன் ரோடு |
| திண்டுக்கல் | 6 | காலை | வி. ஆறுமுகம் பிள்ளை & சன்ஸ் |
| பெரியகுளம் | 6 | மாலை | யுனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், மூவிளக்கு ரோடு |
| மதுரை | 7 & 8 | காலை & மாலை | டி. என். வி. நாகலிங்கம் பிள்ளை & சன்ஸ், கெமிஸ்ட்ஸ் |
| விருதுநகர் | 9 | (8 to 9 காலை) | சரவணமுத்து பிள்ளை சத்திரம், மதுரை ரோடு |
| கோயில்பட்டி | 9 | (10 to 12 பகல்) | தனலக்ஷ்மி மெடிகல் மார்ட் |
| தூத்துக்குடி | 9 | மாலை | தூத்துக்குடி மெடிகல் ஸ்டோர்ஸ் |
| திருநெல்வேலி | 10 | காலை & மாலை | சந்திரவிலாஸ் ஹோட்டல் |
| „ | 11 | காலை | „ |
| ஸ்ரீவைகுண்டம் | 11 | மாலை | கோமதிநாயகம் பிள்ளை, மெடிகல் ஷாப் |
| அம்பாசமுத்திரம் | 12 | காலை | கோமதி மெடிகல் ஸ்டோர்ஸ் |
| தென்காசி | 12 | மாலை | எஸ். கிருஷ்ணா & கோ., மெடிகல் ஸ்டோர்ஸ் |
| திருவனந்தபுரம் | 13 | காலை & மாலை | எம். வி. கணபதி ஐயர் & சன்ஸ், அட்டகுளங்கரை |
| ராஜபாளையம் | 14 | காலை | வி. எஸ். திருப்பதி ராஜா, ஜெனரல் மெர்ச்சண்ட் |
| சிவகங்கை | 14 | மாலை | மீனாக்ஷி & கம்பெனி |
| காரைக்குடி | 15 | காலை & மாலை | ஏ. வி. & சன்ஸ் டிராவலர்ஸ், ரெஸ்ட் ஹவுஸ் |
| தேவகோட்டை | 16 | காலை | ஸ்ரீ மீனாக்ஷி ஸ்டோர்ஸ் |
| புதுக்கோட்டை | 16 | மாலை | வசந்தா வாட்ச் |

**ஜம்மி வெங்கடரமணய்யா அண்டு சன்ஸ்**

சென்னை • திருச்சிராப்பள்ளி • கும்பகோணம்

அத்தியாயம் 9

## ஓலையின் மர்மம்

# பாண்டிமாதேவி

நா. பார்த்தசாரதி

தானும் மகாமண்டலேசுவரரான இடையாற்று மங்கலம் நம்பியும், அந்தரங்க அறையில் அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தபோது வெளிப்புறம் யாரோ கதவைத் தட்டும் மணியோசை கேட்டவுடன் தளபதி வல்லாளதேவனால் அது யாராயிருக்கக் கூடுமென்று நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை.

ஆனால் மகாமண்டலேசுவரரான இடையாற்று மங்கலம் நம்பியோ, கதவு திறக்கப்படுவதற்குமுன்பே மெதுவாகச் சிரித்துக்கொண்டு வெளியே நிற்பவனை அவனுடைய பெயரைச் சொல்லிக் கூப்பிட்டார்.

"யார்? நாராயணன் சேந்தன்தானே? வா, அப்பா! கதவைத் திறந்துகொண்டு உள்ளே வா! உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்" என்று அவர் கூறிய போது தளபதி அடைந்த வியப்புக்கு அளவே இல்லை.

மணிகள் ஒலிக்குமாறு கதவைத் திறந்துகொண்டு நாராயணன் சேந்தன் உள்ளே பிரவேசித்தான். அவன் அணிந்திருந்த ஆடைகள் நனைந்திருந்தன. உடம்பில் சேறும், சகதியுமாக இருந்தது. தலை முடியில் இரண்

டொரு பழுப்படைந்த மகிழ இலைகளும் பூக்களும் செருகிக் கொண்டு கிடந்தன.

இந்தக் கோலத்தோடு உள்ளே வந்து நின்ற அவனை ஏற இறங்கப் பார்த்தார் இடையாற்றுமங்கலம் நம்பி. "இது என்னப்பா தோற்றம்? உன்னுடைய அழகான கேசத்துக்கு மகிழம் பூச் சூட்டிக் கொள்ளவில்லை என்றால் அடிக்கிறதோ?" என்று அவர் கேட்டபோது அவனுக்கே ஆச்சரியமாகி விட்டது.

"என்னது? மகிழம் பூவா? என் தலையிலா?" என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே தலையைத் தடவி உதறினான். இலைகளும் பூக்களும் கீழே உதிர்ந்தன.

"சேந்தா! நீ சுசீந்திரம் தாணுமாலய விண்ணகரத்தில் என்னைச் சந்தித்துக் கூறியதெல்லாம் உண்மைதானே? இதோ உட்கார்ந்திருக்கும் தளபதி ஒரே ஒரு உண்மையை மட்டும் ஏனோ மறைப்பதற்கு முயற்சி செய்கிறார். நீ அந்த மூன்று ஒற்றர்களிடம் ஏதோ ஒரு ஓலை இருந்ததென்றும், அந்த ஓலையைத் தளபதி அவர்களோடு போரிட்டுக் கைப்பற்றி வைத்துக் கொண்டிருப்பதாகவும் கூறினாய். இவர் எல்லாவற்றையும் சொல்லி விட்டார். அதை மட்டும் சொல்லவில்லை. நானாகவே இப்போதுதான் வலுவில் அவரிடம் அதைப் பற்றிக் கேட்டுக் கொண்டிருந்தேன். நல்ல சமயத்தில்தான் நீயும் வந்திருக்கிறாய்!"

"சுவாமி! என் கண்களால் கண்ட உண்மையைத்தான் அடியேன் சுசீந்திரத்தில் தங்களிடம் தெரிவித்தேன். புலி இலச்சினையும், பனை இலச்சினையும் ஆகிய அரசாங்க முத்திரைகள் அந்த ஓலையில் அடுத்தடுத்து வரிசையாகப் பொறிக்கப்பட்டிருந்தன. என் கையாலேயே அதை எடுத்துப் பார்க்கும் வாய்ப்புக் கூட எனக்குக் கிட்டியது. துரதிர்ஷ்டவசமாக என்னால் அதைப் படித்துப் பார்க்க முடியாமல் சந்தர்ப்பம் கெடுத்து விட்டது. ஆனால் கடற்கரைப் பாறைகளுக்கு நடுவே தளபதி எதிரிகளோடு வாட்போர் செய்ததையும், ஓலையை வைத்துக் கொண்டிருந்தவன் அதைக் கடலில் எறிவதற்குப் போனபோது அவன் கையை மறித்துப் பறித்துக் கொண்டதையும் என் கண்களால் கண்டேன்."

"நீ இவ்வளவு உறுதியாகச் சொல்கிறாய். இவர் அதைப் பற்றி வாய் திறக்கவே பயப்படுகிறாரே!" என்று புன்னகையோடு அருகில் அமர்ந்திருந்த வல்லாளதேவனைச் சுட்டிக் காட்டினார்.

"ஒருவேளை அந்த ஓலையில் அடங்கியிருக்கும் செய்தி இவரை இப்படி மௌனம் சாதிக்கச் செய்கிறதோ, என்னவோ?" என்றான் நாராயணன் சேந்தன். தளபதி வல்லாளதேவன் திக்பிரமை யடைந்து போய்ப் பேசாமல் உட்கார்ந்திருந்தான். அவன் மனத்தில் கீழ்க்கண்ட எண்ணங்கள் ஓடின.



"ஆகா! இந்த இடையாற்று மங்கலம் நம்பி யாருக்கும் தெரியாமல் எவ்வளவு அந்தரங்க ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்? நாட்டில் நடப்பதை யெல்லாம் ஒன்று விடாமல் அறிந்து கொண்டு வந்து கூற இவரைப் போலவே இவருக்கு ஒரு தந்திரசாலியான ஒற்றன். இவருக்குத் தெரியாது என்றோ, தெரியவிடக் கூடாது என்றோ, எதையும் எவராலும் மறைத்து வைக்க முடியாது போலிருக்கிறதே! எவ்வளவு முன் யோசனை? எவ்வளவு சாமர்த்தியம்?" என்று அவரைப்பற்றிய வியப்பான நினைவுகளில் ஆழ்ந்து போய் உட்கார்ந்திருந்தான்!

"வல்லாளதேவா! இதோ நிற்கிறானே நாராயணன் சேந்தன், இவனை உனக்குத் தெரியுமல்லவா? இவன் யாரிடம் பொய் சொன்னாலும் என்னிடம் பொய் சொல்ல மாட்டான்."

இடையாற்றுமங்கலம் நம்பி சொற்களை ஒவ்வொன்றாக நிறுத்திச் சொன்னார். இனியும் அவருக்கு அந்த ஓலையை எடுத்துக் காட்டாமல் மறைத்து வைத்துக்கொண்டிருப்பதில் பயனில்லை என்று உணர்ந்துகொண்ட வல்லாளதேவன், இடுப்புக் கச்சையில் மறைத்து வைத்திருந்த ஓலையை வெளியே எடுத்தான்.

"மகாமண்டலேசுவரர் என்னை மன்னிக்க வேண்டும். ஒரு காரணத்துக்காக நான் இந்த ஓலையைக் கைப்பற்றிய விவரம் யாருக்கும் தெரியாமலிருப்பது நல்லதென்று மறைத்தேன். வேறு விதத்தில் தவருக நினைத்துக் கொள்ளக் கூடாது" என்று பவ்யமான குரலில் சொல்லிக் கொண்டே மடங்கிச் சுருண்டிருந்த அந்த ஓலையை எடுத்து அவர் கையில் கொடுத்தான்.

"ஆ! இந்த ஓலைதான்..." என்று அதைப் பார்த்ததும் அருகில் அடக்கமாக நின்று கொண்டிருந்த நாராயணன் சேந்தன் வியத்து கூவினான்.



அந்த ஓலை, அதில் இடப் பட்டிருந்த புலி, பனை ஆகிய முத்திரைகள் இவற்றை யெல்லாம் பார்த்த பின்பும் வியப்போ, அதிர்ச்சியோ அடையாத நிதானமான முகக் குறிப்புடன் அதைப் படித்தார் இடையாற்றுமங்கலம் நம்பி. அந்த ஓலை அவர் பெயருக்குத்தான் எழுதப்பட்டிருந்தது. அதில் அடங்கியிருந்த செய்தியும் சாதாரணமான செய்தியல்ல!

"மகாமண்டலேசுவரரான புறத்தாய நாட்டு நாஞ்சில் மருங்கூர்க் கூற்றத்து இடையாற்றுமங்கலம் நம்பி அவர்கள் திருச்சமூகத்துக்கு வடதிசைப் பெருமன்னரான சோழன் கோப்பரகேசரி பராந்தகனும், கொடும்பாளூர்க் குறுநில மன்னனும், அரசூருடையானும் ஆகிய மூவரும் எழுதிக் கொண்ட திருமுகம். இந்தத் திருமுக ஓலை தங்கள் கையை அடைவதற்கு முன் தங்களால் புறத்தாயநாட்டுக் கோட்டையில் பாதுகாக்கப்பட்டு வருபவரும், நாஞ்சில் நாட்டு மகாராணியாருமாகிய, காலஞ்சென்ற திரிபுவனச் சக்கரவர்த்திகளான பராந்தக பாண்டிய தேவரின் திருத்தேவி வானவன்மாதேவியார் விண்ணுலகபதவி அடைந்திருப்பார்; அல்லது நாங்கள் செய்திருக்கும் ஏற்பாடு அவருக்கு அந்தப் பதவியை அளித்திருக்கும்.

எனவே, மகாமண்டலேசுவரராகிய தங்களையும், தங்களுடன் இருக்கும் நாஞ்சில் நாட்டுக் கூட்டத் தலைவர்களையும் உடனே வடதிசைப் [illegible]ரசுக்கு அடிபணியுமாறு வேண்டிக் கொள்கிறோம். நாளை மறு நாள் சோழநாட்டுத் திருப்புறம்பியத்தில் நாங்கள் மூவரும் உங்களை எதிர்பார்க்கிறோம்.

இந்த ஏற்பாட்டுக்கு இணங்காவிட்டால் உடனே வடதிசை மும்மன்னர்கள் பெரும் படையோடு நாஞ்சில் நாட்டைத் தாக்குவதற்கு நேரிடும்.

1. பராந்தக சோழன்.
2. கொடும்பாளூர்க் குறுநில மன்னன்.
3. அரசூருடையான் சென்னிப் பேரரையன்."

இந்தச் செய்தியைப் படித்து முடித்த போது, மகாமண்டலேசுவரரின் இதழ்களில் அலட்சிய பாவம் நிறைந்ததோர் புன்னகை மிளிர்ந்தது. அவர் தலையை நிமிர்த்தித் தளபதி வல்லாளதேவனை உற்றுப் பார்த்தார். அருகிலிருந்த நாராயணன் சேந்தனை ஒரு தடவை பார்த்தார்.

"சுவாமீ! இந்த விநாடி வரை மகாராணியாருக்கு ஒரு துன்பமும் இல்லை. அடியேன் இப்போது கூட அங்கே கோட்டையிலிருந்து தான் நேரே வருகிறேன்" என்று அவருடைய பார்வையில் பொதிந்திருந்த கேள்வியைக் குறிப்பினால் புரிந்து கொண்டு பதில் கூறினான் சேந்தன்.

"தளபதி! இந்த ஓலையை நீ என்னிடம் காட்டத் தயங்கியதற்குச் சிறப்பாக வேறு காரணம் ஏதோ இருக்குமென்று எனக்குத் தோன்றுகிறது! அதை எனக்குச் சொல்லலாம் அல்லவா? தெரிந்துகொள்ள ஆவலாயிருக்கிறேன்" என்றார் மகாமண்டலேசுவரர். தன் மனத்தில் யாருக்கும் வெளிப்படுத்திச் சொல்ல இயலாத அந்தரங்கமான இடத்தில் மறைந்திருந்த ஓர் உண்மையை அவருடைய கேள்விக்குப் பதிலாகச் சொல்ல வேண்டியிருந்ததால் தளபதி வல்லாள தேவன் தயங்கினான்.

ஒரு வேளை நாராயணன் சேந்தன் அருகில் இருப்பதால்தான் தளபதி சொல்லத் தயங்குகிறானோ என்று நினைத்தார் மகாமண்டலேசுவரர்.

"சேந்தா! ஆற்று நீரிலும் சேற்றிலும் சகதியிலும் புரண்டுவிட்டு ஈர உடையோடு நின்றுகொண்டிருக்கிறாயே. போய் உடை மாற்றிக் கொண்டு வா!" என்று சொல்லி நாராயணன் சேந்தனை அங்கிருந்து அனுப்பி வைத்தார்.

ஆனால் அதன் பின்பும் தளபதி வாய் திறக்கவில்லை. "வல்லாள தேவா! உன் மனத்தில் இருப்பதை நீ என்னிடம் சொல்வதற்குத் தயங்குகிறாய். பரவாயில்லை. நீ சொல்லவே வேண்டாம். பல நூறு காதத் தொலைவிலிருக்கும் வட திசையும் மன்னரும் இந்தக் கணத்தில் என்ன எண்ணிக் கொண்டிருக்கிறார்கள் என்பதைக் கூட என்னால் இங்கிருந்தே சொல்லிவிட முடியும். நீ நினைப்பதைத் தெரிந்து கொள்வது பெரிய காரியமில்லை. இதோ சொல்கிறேன் கேள்:— இந்த ஓலையைப் படித்ததும் உன் மனத்தில் என்ன தோன்றியது, தெரியுமா? 'மகாமண்டலேசுவரரே வட திசை மூவேந்தர்களுக்கு உள்கையாக இருப்பார் போலிருக்கிறது. இல்லையானால் இந்த ஓலை அவர் பெயருக்கு எழுதப்படுமா? ஆகா! இது எவ்வளவு பெரிய அநியாயம்! வானவன்மாதேவியைக் கொலை செய்வதற்கு ஒற்றர்களை அனுப்புமாறு இவரே வடதிசைப் பேரரசருக்குத் தெரிவித்திருக்க வேண்டும். திருப்புறம்பியத்தில் அவர்களை வந்து சந்திப்பதாக இவரே சொல்லியிருப்பார். மகாமண்டலேசுவரரே இப்படிச் சதி செய்தால் இந்த நாடு எங்கே உருப்படப் போகிறது?' என்றெல்லாம் உன் மனத்தில் தோன்றியது உண்டா, இல்லையா?" என்று கேட்டு விட்டு நகைத்தார் அவர்.

தளபதி வல்லாள தேவன் திடுக்கிட்டுப் போனான். 'இந்த மனிதர் என்ன மந்திரவாதியா? இவருக்கு ஏதாவது குறளி வித்தை தெரியுமா? என்னுடைய மனத்தில் ஏற்பட்டிருக்கும் சந்தேகத்தை அப்படியே கண்டு பிடித்துச் சொல்லி விட்டாரே!' என்று வியந்தான் அவன்.

"என்ன தளபதி! உண்மைதானா?" தன் நினைவில்லாமலே அவருடைய கேள்விக்கு 'ஆம்' என்று பதில் சொல்வது போல அவன் தலை அசைந்தது.

"நீ இப்படி நினைத்ததை நான் ஒரு பிழையாகக் கருதவில்லை. சந்தர்ப்பத்தின் கோளாறு உன்னை இப்படி நினைக்கச் செய்திருக்கிறது. ஆனால் வல்லாள தேவா! இந்த ஓலையையும் இது கிடைத்த நிகழ்ச்சியையும் தொடர்ந்து எண்ணி மனத்தைக் குழப்பிக் கொள்ளாதே. இப்போதே மறந்து விடு!" இது வரையில் அமைதியாகத் தலை குனிந்து அவர் கூறியதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த தளபதி தலை நிமிர்ந்து ஒரு கேள்வி கேட்டான்.

"மகா மண்டலேசுவரர் சொல்வதை நான் அப்படியே ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் மகாராணி வானவன்மாதேவியாரைக் கொலை செய்வதற்காகப் பயங்கரமான சதி முயற்சிகள் என் கண் காணவே நடக்கும்போது கடமையும் பொறுப்புமுள்ள நான் அதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியுமா? அது நீதியல்லவே?"

"தளபதி! உன்னுடைய பதவிக்கு இந்தப் பொறுப்புணர்ச்சி அவசியமானதுதான். ஆனால் மகாராணியாரைக் கொலை செய்வதும், புறத்தாய நாட்டைக் கைப்பற்றிவிட முயல்வதும் யாராலும் எளிதில் முடியாத காரியங்கள். அப்படியே முடிவதாக இருந்தாலும் அதனை நீயும் உன்னைச் சேர்ந்த படை வீரர்களும் மட்டும் தடுத்துவிட முடிய



மென்று எண்ணுவது பேதைமை! உன்னைக் காட்டிலும், உன் சாமர்த்தியம், பொறுப்பு ஆகியவற்றைக் காட்டிலும், பலமடங்கு வலிமைவாய்ந்த சக்தி ஒன்று மகாராணி வானவன்மாதேவியை அல்லும், பகலும், அனவரதமும் இடைவிடாமல் காத்து வருகிறதென்பது உனக்குத் தெரியுமா?''

அவருடைய இந்தச் சொற்களிலிருந்து ஏதோ ஒரு கூர்மையான முள் தன் மனத்தில் தைத்து விட்டது போலிருந்தது வல்லாளதேவனுக்கு. அவர் தன்னையும் தன் சக்தியையும் ஏளனம் செய்ய வேண்டும் என்பதற்காக அப்படிப் பேசுகிறாரா? அல்லது மறைமுகமாகக் குத்திக் காட்டுகிறாரா? என்று தெளிவாகப் புரிந்து கொள்ள முடியாமல் திணறினான் அவன். குப்ரென்று அவன் மனத்தில் ஆத்திரம் புகைந்தது. ஒரே ஒரு விநாடிக்குள் உணர்ச்சி வசப்பட்டு, அவரை எதிர்த்துப் பேசிவிடத் தயாராகி விட்டான் வல்லாளதேவன்.

அவன் நிலையைப் பார்த்துப் புரிந்து கொண்ட அவர் உள்ளூறச் சிரித்துக் கொண்டே, ''வல்லாளதேவா! உனக்கு வருகிற கோபத்தைப் பார்த்தால் இப்போதே வாளை உருவிக் கொண்டு என் மேல் பாய்ந்துவிடுவாய் என்று தோன்றுகிறது. பொறு! ஆத்திரப்படாதே. மகாராணியாரின் நலத்திலும் நாஞ்சில் நாட்டின் அமைதியிலும் மிக அதிகமான பொறுப்பு எனக்கும் இருக்கிறது'' என்று நிதானமாகக் கூறினார்.

''மகாமண்டலேசுவரரின் ஆற்றலையோ, ஆணைகளையோ அடியேன் எப்போதும் குறைவாக மதிப்பிட்டதில்லை. ஆனாலும் அடியேனிடம் அவர் 'இவ்வளவு கடுமையாக நடந்து கொள்வார்' என்றும் எதிர்பார்க்கவில்லை. நானே நாஞ்சில் நாட்டு மகாசபையைக் கூட்ட வேண்டுமென்று மகாராணியார் தெரிவிக்கச் சொன்னதனால்தான் இங்கு வந்தேன். இல்லையானால் இங்கு வந்து தங்களுக்கு இவ்வளவு சிரமம் கொடுத்திருக்க மாட்டேன்.'' தளபதி அமைதியாகப் பேச முயன்றாலும் வேகமாக வந்த கோபத்தை வலுவில் அடக்கிய சாயல் அவன் சொற்கள் ஒவ்வொன்றிலும் பிரதிபலிக்கவே செய்தன.



அவன் கூறியதைக் கேட்டு விட்டு, ஏதோ பதில் கூறுவதற்காக இடையாற்றுமங்கலம் நம்பி வாய் திறந்தார். அதே நேரத்துக்கு ஈர உடைகளை மாற்றிக் கொண்டு திரும்பிய நாராயணன் சேந்தன் அந்தரங்க அறைக்குள் நுழைந்து விட்டான்.

இரவுப் போது நடுச் சாமத்துக்கும் மேலாகி விட்டது. மகாமண்டலேசுவரரின் அழகிய பெரிய மாளிகையில் அந்த ஒரே ஒரு அறையைத் தவிர மற்றெல்லாப் பகுதியும் நிலா ஒளியின் அமைதியில் அடங்கிக் கிடந்தன. பறளியாற்றில் 'குடுகுடு'வென்று தண்ணீர் பாயும் ஒலி, மரப் பொந்துகளிலுள்ள ஆந்தைகளின் குரல். இவை தவிர இடையாற்றுமங்கலம் தீவு நிசப்தமாகிவிட்டது.

தளபதி வல்லாளதேவனின் அப்போதைய மனநிலை எவ்வளவு நேரமானாலும் இந்தத் தீவை விட்டு அக்கரைக்குப் போய் அரண்மனைக்குச் சென்று விட வேண்டும் என்று உறுதியாக இருந்தது. அன்றைக்கு மட்டுமே அதற்கு முன் அவனுடைய மனத்தில் ஏற்பட்டிராத சில பயம்

நிறைந்த உணர்வுகள் ஏற்பட்டன. அந்தத் தீவு அந்த மாளிகை, அவனெதிரே ஊடுருவும் விழிப் பார்வையோடு பொதியமலைச் சிகரமெனக் கம்பீரமாக வீற்றிருக்கும் மகா மண்டலேசுவரர், அவர் அருகில் நிற்கும் நாராயணன் சேந்தன் என்ற அந்தக் குள்ளன், எல்லோரும், எல்லாப் பொருளும், ஏதோ ஒரு பெரிய மர்மத்தின் சின்னஞ்சிறு பிரிவுகளைப் போல் தோன்றினார்கள்.

"படகு விடும் அம்பலவன் வேளான் மட்டும் உறங்காமல் துறையில் விழித்திருப்பானானால் எப்படியும் இவரிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டு விடலாம். இவர் என்னிடமிருந்து எல்லாச் செய்திகளையும் தெரிந்துகொண்டு விட்டார். ஆனால் இவரிடமிருந்து நான் ஒன்றும் தெரிந்துகொள்ள முடியவில்லை. இன்று மாலை கன்னியாகுமரியில் நடந்த



எல்லாச் சம்பவங்களையும் எனக்குத் தெரியாமலே இவருடைய ஒற்றனை இந்தக் குட்டையன் மறைந்திருந்து கண்காணித்திருக்கிறான். நானோ மகா மண்டலேசுவரருக்கு ஒன்றும் தெரிந்திருக்கக் காரணமில்லை என்று பகற்கனவு கண்டு கொண்டிருக்கிறேன். ஒரு கோடியிலுள்ள இந்தத் தீவின் மாளிகையில் இருந்துகொண்டு நாஞ்சில் நாட்டு மூலை முடுக்குகளில் நடப்பதைக் கூட ஒன்று விடாமல் பார்த்துக் கொண்டிருக்கிறார் இந்த மனிதர்!" பயமும், மலைப்பும் கலந்த இதுபோன்ற திகைப்பூட்டும் நினைவுகள் தான் வல்லாளதேவனின் மனத்தில் கிளர்ந்தன.

"சரி! அப்படியானால் நாளைக்கு மகா சபை கூட்டுவதைப் பற்றிக் கூறுங்கள். அதைத் தெரிந்துகொண்டு நான் இங்கிருந்து விடைபெற்றுக் கொள்ளுகிறேன். அரண்மனையில் மகாராணி யார் என்னை எதிர்பார்த்துக் காத்திருந்தாலும் காத்திருப்பார்" - அவன் இப்படிக் கேட்டதும் அவர் மறுபடியும் அவனை நோக்கிச் சிரித்தார். அவருடைய அந்தச் சிரிப்புக்களில் அப்படி என்னதான் மறைந்து கொண்டிருக்கின்றன? ஒவ்வொரு சிரிப்புக்கும் ஒரு உள்ளர்த்தம் இருப்பது போல் அல்லவா அவனுக்குத் தோன்றியது.

"சேந்தா! தளபதி திரும்பிப் போவதற்கு எவ்வளவு அவசரப்படுகிறார், பார்த்தாயா? அவருக்கு இங்கே இருப்பதற்கே பயமாக இருக்கிறது. நாமெல்லாம் சிங்கம், புலி, கரடிகள் என்று நினைக்கிறார் போலும்" என்று தளபதிக்குப் பதில் சொல்லாமல் சேந்தனை நோக்கிக் கூறுபவர் போலக் கூறினார்.

"சுவாமீ! இவர் போக வேண்டுமென்றாலும், இப்போது போக முடியாது. என்னை இக்கரைக்குக் கொண்டு வந்து விட்டபின் அம்பலவன் வேளான் தோணியைத் துறையில் கட்டி விட்டு, உறங்கப் போய் விட்டான். இனி நாளைக்கு வைகறையில்தான் தோணி போகும்" என்று சேந்தன் கூறினான்.

"கேட்டுக் கொண்டாயா, தளபதீ! உன்னை இங்கே யாரும் விழுங்கி விடமாட்டார்கள். இன்றிரவு இங்கே தங்கி விட்டுக் காலையில் போகலாம். மகா சபைக் கூட்டத்துக்காக நானும் அரண்மனைக்கு வரவேண்டியிருக்கிறது. நாம் இருவரும் சேர்ந்தே போகலாம். மற்றக் கூற்றத் தலைவர்களையெல்லாம் நேரே அரண்மனைக்குப் புறப்பட்டு வரும்படி தானே சொல்லி அனுப்பியிருக்கிறாய்?"

"ஆம்! அவர்கள் யாவரும் நாளைக் காலையில் நேரே அரண்மனைக்குத்தான் புறப்பட்டு வருவார்கள்."

"நல்லது! இப்போது உன்னிடம் ஒரு முக்கியமான வேண்டுகோள் விடுக்கப் போகிறேன். இந்த வேண்டுகோள் என்னுடைய சொந்த நன்மைக்காக மட்டும் அல்ல. எத்தனையோ வகையில் இந்தத் தேசத்தின் நன்மைகள் இந்த வேண்டுகோளுக்குள்ளே பொதிந்திருக்கலாம். அவற்றையெல்லாம் விளக்கவோ, விவரித்துச் சொல்லவோ, இது நேரமில்லை" என்றார் நம்பி.

"மகாமண்டலேசுவரரின் பலமான அடிப்படையைப் பார்த்தால் அது எத்தகைய வேண்டுகோளாக இருக்குமோ என்று அடியேனுக்கு உண்மையிலேயே பயமாகத்தான் இருக்கிறது" என்று தளபதி இடைமறித்துக் கூறினான்.

"பயப்படுவதற்கு இதில் அப்படி ஒன்றும் இல்லை. இந்த ஓலையை இப்போது நான் உன்னிடம் திருப்பிக்

# 18-வது அகில இந்திய காதி, கைத்தறி, சுதேசி அண்டு கைத்தொழில் பொருட்காட்சி, சேலம் 1958

சேலம் நகரசபையால் நடத்தப்படும்

## இசை, நடன, நாடக, நிகழ்ச்சிகள் – கலை அரங்கில் தினசரி மாலை 6-30 மணிக்கு

ஆகஸ்டு 58

| தேதி | நாள் | விபரம் | நிகழ்ச்சி |
|---|---|---|---|
| 3 | ஞாயிறு | திருவெண்காடு டி. பி. சுப்ரமணிய பிள்ளை | நாதஸ்வர பஞ்சரத்ன கச்சேரி |
| 4 | திங்கள் | பாரத் சகோதரிகள் ஜெயா உமா ... | நடனம் |
| 5 | செவ்வாய் மாலை 6-30 | குமாரி உஷா (பின்னணி: சுசீலா, சுந்தரம்) ... | நடனம் |
| | இரவு 9-30 | சேலம் முனிசிபல் ஆபீஸர்ஸ் டிராமாடிக் அசோசியேஷன் | ஔரங்கசீப்-நாடகம் |
| 6 | புதன் | டி. கே. இராமச்சந்திரன் அண்டு பார்ட்டி ... | நல்ல பிள்ளை-நாடகம் |
| 7 | வியாழன் | எம். என். திரௌபதி நாடக மன்றம் ... | திலகம் - நாடகம் |
| 8 | வெள்ளி | ஷை ஷை ... | வரவேற்பு - நாடகம் |
| 9 | சனி | குமாரி சாயி அண்டு சுப்புலட்சுமி ... | நடனம் |
| 10 | ஞாயிறு | பிரபல சங்கீத டைரக்டர் கே. வி. மகாதேவன் & பார்ட்டி (பிரபல சினிமா பின்னணி பாடகர்களும் பாடகிகளும்) | இசை விழா |
| 11 | திங்கள் | திருச்சி லோகநாதன், சி. ஆர். ராஜகுமாரி அண்டு பார்ட்டி (சீர்காழி கோவிந்தராசன்-பின்னணி) ... | அனார்கலி - நாடகம் |
| 12 | செவ்வாய் | ஷை ஷை ... | ஷை |
| 13 | புதன் | என். எல். கானசரஸ்வதி அண்டு பார்ட்டி ... | பாட்டு |
| 14 | வியாழன் | பொன்வயல் சுசீலா ... | நடனம் |
| 15 | வெள்ளி | கே. பி. சுந்தராம்பாள், எம். எல். சி. & பார்ட்டி ... | இசைக்கச்சேரி |
| 16 | சனி | நேஷனல் தியேட்டர்ஸ் (மனோகர், பி.ஏ. மற்றும் பலர்) | இலங்கேஸ்வரன்-நாடகம் |
| 17 | ஞாயிறு | ஷை ஷை ... | ஷை |
| 18 | திங்கள் | ஷை ஷை ... | ஷை |
| 19 | செவ்வாய் | கே. பி. சுந்தராம்பாள், எம். எல். சி., வேலன், வேடன், விருத்தன்—டி. ஆர். மகாலிங்கம், நாரதர் பி. எஸ். சிவபாக்கியம் - வள்ளி, எல். நாராயண ராவ்-நாயிக. ... | வள்ளித் திருமணம் நாடகம் |
| 20 | புதன் | எழிசை மன்னர் எம். கே. தியாகராஜ பாகவதர் என். டி. சுப்புலக்ஷ்மி அண்டு பார்ட்டி ... | அசோக்குமார் நாடகம் |
| 21 | வியாழன் | சேவா ஸ்டேஜ் சர்வீஸ், சென்னை (எஸ். வி. சகஸ்ரநாமம், குலதெய்வம் புகழ் இராஜகோபால், முதலாளி புகழ் தேவிகா) ... | மல்லியம் மங்களம் நாடகம் |
| 22 | வெள்ளி | ஷை ஷை | தேரோட்டி மகன்-நாடகம் |
| 23 | சனி | ஷை ஷை ... | ஷை |
| 24 | ஞாயிறு | பத்மினி, ராகினி பார்ட்டி ... | நடனம் |
| 25 | திங்கள் | கே. ஏ. தங்கவேலு அண்டு பார்ட்டி ... | மனைவியின் பாக்கியம் |
| 26 | செவ்வாய் | ஷை ஷை ... | துப்பறியும் சிங்கம் |
| 27 | புதன் | பிரண்ட் ராமசாமி அண்டு பார்ட்டி | அன்பின் ஜோதி-நாடகம் |
| 28 | வியாழன் | ஷை ஷை ... | ஷை |
| 29 | வெள்ளி | சிவாஜி நாடக மன்றம், சென்னை ... | வீரபாண்டியக் கட்ட |
| 30 | சனி | ஷை ஷை ... | பொம்மன் - நாடகம் |
| 31 | ஞாயிறு | ஷை ஷை ... | ஷை |

24-7-58
சேலம்

பொருட்காட்சிக் கமிட்டியார்

குறிப்பு: விவரம் அன்றாடம் வெளிவரும் நோட்டீஸில் காண்க. நிகழ்ச்சிகளுக்கு முதலிரண்டு வகுப்புகளுக்கும் பொருட்காட்சி கமிட்டி ஆபீஸில் ரிசர்வேஷன் செய்யப்படும்.

கொடுக்கப் போவதில்லை. நான் பத்தி ரப்படுத்தி வைத்துக் கொள்வேனே என்று நினைக்கிறாய் அல்லவா? அப்படியும் செய்யப் போவதில்லை. பின், என்ன செய்யப் போகிறேன்.தெரியுமா? இதோ நீயே பார்த்துத் தெரிந்து கொள்'' என்று சொல்லி விட்டுப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த நாராயணன் சேந்தனைச் சமிக்ஞை செய்து கூப்பிட்டு ஏதோ மெல்லக் கூறினார்.

அவன் உடனே அந்த அறைக்குள்ளே எரிந்து கொண்டிருந்த தீபங்களில் ஒன்றை எடுத்து வந்து அவருக்கு முன்னால் ஏந்திப் பிடித்துக் கொண்டு நின்றான். தளபதி வல்லாள தேவனுக்குப் பகீரென்றது. ''ஐயா! இதென்ன காரியம் செய்கிறீர்கள்?'' என்று மகா மண்டலேசுவரரின் கையைப் பிடித்துத் தடுக்க எழுந்தான் அவன்.

''நில், அப்படியே! செய்ய வேண்டியதைத்தான் செய்கிறேன்'' என்று சொல்லிக் கொண்டே ஓலையைச் சுடரில் காட்டினார் இடையாற்றுமங்கலம் நம்பி. அந்த ஓலையில் தீப்பற்றியது.

## பத்தாம் அத்தியாயம்

# உறையூர்க்கோட்டையில் மந்திராலோசனை

இந்தக் கதையின் ஆரம்பத்தில் கன்னியாகுமரிக் கடற்கரையில் சந்தித்த பயங்கர ஒற்றர்களைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல் நேயர்களுக்கு இருக்கும் அல்லவா? அந்த ஒற்றர்கள் வந்த நோக்கம், அனுப்பப் பட்ட விதம், இவை பற்றி இதற்குள்ளேயே ஒரு மாதிரி அனுமானித்துக் கொள்ள முடிந்தாலும் இங்கே அதைப் பற்றிச் சற்று விரிவாகக் கூறிவிட வேண்டியது அவசியம்தான்.

மன்னாதி மன்னரும், தென்திசைப் பேரரசருமாகிய பராந்தக பாண்டியர் காலமான பின் வடதிசை மன்னர் பாண்டி நாட்டின் மேல் படையெடுத்ததும், குமார பாண்டியனாகிய இராச சிம்மன், ஈழத் தீவுக்கு ஓடிப்போனதும், வடபாண்டி நாடு எதிரிகளின் வசப் பட்டதும் ஏற்கனவே நேயர்கள் அறிந்துகொண்ட நிகழ்ச்சிகள்.

வடதிசை வேந்தர்களின் ஆசை வட பாண்டி நாட்டை வென்றதோடு அடங்கி விடவில்லை. அவர்கள் தென் பாண்டி நாட்டையும் கைப்பற்ற விரும்பினார்கள். முக்கியமாக அந்த விருப்பத்துக்கு மூன்று காரணங்கள் இருந்தன.

முதல் காரணம் பராந்தகனின் கோப் பெருந்தேவி உயிருடன் தப்பிச் சென்று தென் பாண்டி நாட்டு மகாமண்டலேசுவரரின் பாதுகாப்பில் வாழ்கிறாள் என்று அவர்கள் தெரிந்து கொண்டது. அவள் உயிருடன் இருக்கிறவரை என்றாவது எப்படியாவது தன் புதல்வன் இராச சிம்மனைத் தேடிக் கொண்டு வந்து மீண்டும் பாண்டியர் ஆட்சியை நிலைநிறுத்துவதற்கு முயன்று விடுவாளோ என்ற பயம் அவர்களுக்கு இருந்தது. இடையாற்றுமங்கலம் நம்பியும், தென்புறத்தாய நாட்டுப் பெரும் படையும், வானவன்மாதேவியோடு ஒத்துழைத்து அப்படிச் செய்ய முற்படுவதற்குள் சில சதித் திட்டங்களின் மூலம் தங்களுடைய ஆசையை முடித்துக் கொள்ளத் திட்டமிட்டனர் வடதிசை மும்மன்னர். அதற்காகச் சோழன் கோப்பரகேசரி பராந்தகனும் கொடும்பாளூர் மன்னனும் அரசூருடையானும் உறையூர்க் கோட்டையில் ஒரு இரகசிய மந்திராலோசனைக் கூட்டம் நடத்தினார்கள். வடதிசை மும்மன்னர்களும் தங்களுடைய முக்கியமான இராஜாங்க அதிகாரிகளோடு உறையூருக்கு வந்திருந்தனர்.

சோழன் கோப்பரகேசரி பராந்தகனின் உறையூர் அரண்மனை மந்திராலோசனை சபையில் கூட்டம் பரம இரகசியமாகக் கூடியது. அழகும், இளமையும், வீரமும், ஒன்றோடொன்று போட்டி போட்டுக் கொண்டு ஒன்று பட்ட உருவம்போல் சோழனும், பிடரி மயிரோடு கூடிய சிங்கத்தைப் போன்ற கம்பீரமான தோற்றத்தையுடைய அரசூருடையானும், காண்பவர்களைப் பயமுறுத்தும் வளமான அடர்ந்த மீசையும், நெருப்பு வட்டங்களைப் போல் சுழலும் கண்களும் யானை போல் பருத்த தோற்றத்தையுமுடைய கொடும்பாளூர் மன்னனும், அருகருகே மூன்று சிம்மாசனங்களில் வீற்றிருந்தனர். திருமந்திர ஓலை நாயகர்களும், அமைச்சர் பிரதானிகளும், சுற்றிலும் இடப்பட்டிருந்த மற்ற ஆசனங்களில் அமர்ந்திருந்தனர்.

''இந்த மந்திராலோசனைக் கூட்டம் வடபால் நாட்டுப் பெரு மன்னர்களாகிய நமக்குள் ஒரு அவசியமான தீர்மானத்தை ஏற்படுத்தி முடிவுசெய்து கொள்வதற்காகக்கூட்டப்பட்டிருக்கிறது. நாம் மூவரும், நம்முடைய படைகளுமாகச் சேர்ந்து சமீபத்தில் பாண்டிய நாட்டின்

# விவசாய ஆராய்ச்சி


இந்த வெண்டைக்காய் ஒன்றில் எட்டு அவுன்ஸ் கொள்ளும். ஒன்பது கோர்த்து பாட்டில்களை நிரப்பும் அளவுக்குப் பிசின் இருக்கிறது!
நவீன வெண்டைக்காய்


நாலு கால் முள்ளங்கியை வேக வைத்து நீர் ஏழு மைல் ஐந்து பர்லாங் பிரதேசத்தைத் தன் 'மணத்தில்' ஆழ்த்துகிறது!
நவீன முள்ளங்கி


மூணு ஏக்கர் நிலத்தில் தென்- -ஆப்பிரிக்க முறைப்படி விளையும் இவ்வகை வெங்காயத்தின் தோலைக் கொண்டு பூமியின் பரப்பை இரண்டு சுற்று போர்த்தலாம்! ஒரு வெங்காயத்தை அரிவதற்குள் ஆண் பதினேழு அவுன்ஸும், பெண் ஒன்றரை 'காலனும்' கண்ணீர் வடிக்கிறார்கள்
நவீன வெங்காயம்


இவ்வகை முருங்கைக் காயைக் கொண்டு பாய், நாற்காலிகள் செய்கிறார்கள். உபாத்தியாயர்களும் தமிழ் வித்வான்களும் இதை விரும்பி வாங்கக் காரணம் என்ன என்பதை ஆராய அரசாங்கம் ஒரு கமிட்டியை நியமித்திருக்கிறது!
நவீன முருங்கைக்காய்


முந்நூறு ஏக்கர் நிலத்தில் விளையும் இம்மாதிரி புடலங்காய்களை ஒன்றுசேர்த்தால் சந்திர மண்டலத்தையே எட்டி விடலாம்!
நவீன புடலங்காய்


இந்த வகை மாம்பழத்தில் உள்ள நாரைக் கொண்டு கயிறு திரிக்கிறார்கள். இதில் கிடைக்கும் திரவத்தைக் கொண்டு செயற்கை முறையில் புளி தயாரிக்கிறார்கள்!
நவீன மாம்பழம்


எல்லாம் சரிதான்... இவைகளில் ஏதாவது சாப்பிட உபயோகப்படுமோ?

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

# கால்கேட் டூத் பிரஷ்

DCG/24 R2

---

# மிக அழகிய...

## அடர்ந்த நீண்ட ஒளியுள்ள கூந்தல்!

பிரதிதினமும் கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவி வந்தால், கூந்தலானது அடர்த்தியாகவும், நீளமாகவும் வளருவதுடன் இளமையின் ஒளியுடனும், அற்புத ஜ்வலிப்புடன் விளங்குவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள். அது உங்கள் கூந்தலின் இயற்கை அழகை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்கச்செய்யும்.

மகிழ்ச்சியூட்டும் நறுமணம்—
உங்கள் குடும்பம்
முழுவதும் விரும்புவது!




# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

**எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்!**

ECHO/C/3




**கா**ரியாலயத்தில் வாசுதேவன் வேலையே ஒன்றும் செய்யவில்லை. மனதில சரியாக இருந்தால் அல்லவா வேலையில் கவனம் செல்லும்? வீட்டின் நினைவே அவன் மனத்தில் சுழன்று சுழன்று வட்டமிட்ட வண்ணம் இருந்தது.

"என்ன, வாசுதேவன்? பிரமைபிடித்தவர்போல் உட்கார்ந்திருக்கிறீர்களே!" என்றார் மேஜைப் பக்கம் தற்செயலாக வந்த மேலதிகாரி.

திடுக்கிட்டு எழுந்த வாசுதேவன், "ஸார்! மனம் சரியில்லை. என் தந்தை ஒரு வாரமாக ஜுரத்துடன் படுத்திருக்கிறார். இன்று காலையில் நிலைமை மோசமாகி விட்டது. இருந்தாலும் ஆபீசில் வருஷக் கடைசியல்லவா? வேலை அதிகமாக இருக்கிறது. லீவு எழுதியனுப்புவது நன்றாக இராது என்று தோன்றி, என் தம்பியை என் தந்தையின் அருகில் இருக்கச் சொல்லி விட்டு வந்தேன்" என்றான். அநுதாபத்துடன் அதிகாரி, "அடடா! ஒரு நாளில் என்ன ஐயா குடி முழுகிப் போய் விடும்? நீங்கள் உடனே வீட்டுக்குச் செல்லுங்கள். கவலைப்பட வேண்டாம். தந்தையைக் கவனித்துக் கொள்ளுங்கள். போங்கள், சீக்கிரம்!" என்று விடை கொடுத்து அனுப்பினார்.

★

**வா**சுவின் தந்தைக்கு வயது அறுபத்து நான்கு. ஒரு பாங்கியில் உத்தியோகம் பார்த்து விட்டுச் சில வருஷங்களுக்கு முன்பு ஓய்வு பெற்றார். பிராவிடெண்ட் பண்ட் தொகை சில ஆயிரம் ரூபாய்கள் கிடைத்தன. அதைக் கொண்டு, இரண்டு பெண்களுக்குக் கல்யாணம் செய்ததால் ஏற்பட்டிருக்கிற கடன்களை ஒருவாறு தீர்த்தார். இன்னும் இரண்டு பெண்கள் — ஒருத்தி பதினாறு வயதிலும் மற்றவள் பன்னிரண்டு வயதிலும்—இருக்கிறார்கள். அவர்களுடைய கல்யாணமும் நடந்தாக வேண்டும் தக்க வயதில். நல்ல வேளையாக, மூத்த பிள்ளை வாசுவும், இளையவன் கிருஷ்ணனும் சம்பாதிக்கிறார்கள். குடும்ப நிர்வாகத்தை அவ்விருவரும் பார்த்துக் கொள்கிறார்கள். என்றாலும், இந்த இரண்டு பெண்களின் கல்யாணமும் நடந்தாக வேண்டுமே!

வாசு, கிருஷ்ணன் இருவருக்கும் கல்யாணம் ஆகிவிட்டது. மனைவிமார்களும் வந்து விட்டார்கள். வாசுவுக்கு ஒரு யந்திரத் தொழிற்சாலையில் உத்தியோகம். நூற்றைம்பது ரூபாய் வருமானம் கிடைக்கிறது. கிருஷ்ணன் ஓர் பள்ளிக்கூட ஆசிரியர். அவனும் நூற்றிருபதுக்குக் குறையாமல் சம்பாதிக்கிறான். என்றாலும், குடும்பத்துக்கென்று மாதா மாதம் எழுபது ரூபாய் எண்ணி அண்ணாவிடம் கொடுத்து விடுகிறான். வாசு தம்பியைக் கணக்கு வழக்கு விசாரிப்பது கிடையாது. பெரிய புத்தியுடன் பொறுப்புணர்ச்சி கொண்டு குடும்பத்தை நிர்வகித்து வந்தான்.

தந்தை ஓய்வுபெற்ற நாள்முதல் குடும்பப் பொறுப்பு முழுமையும் அவன்தான் ஏற்று நடத்தி வருகிறான். மூத்த மகனின் பொறுப்புணர்ச்சியைக் கண்ட தந்தை பரமேசுவரன் அகமகிழ்ந்தார். வருபவர்களிடமெல்லாம் அவனைப் பற்றிப் பாராட்டினார். "மூத்தவன் மகா உத்தமன். இந்தக் குடும்ப பாரம் முழுமையும் அவன் தலையில் சுமந்து விட்டது. திறமையுடனும் பொறுமையுடனும் நிர்வகிக்கிறான். இளையவன் வயதுக்குத் தக்கபடி, விளையாட்டுத்தனமாய் இருக்கிறான். ஏதோ கணக்காய்க் கொடுக்கிறான் குடும்பத்துக்கு. அதிகமாய்க் கேட்கவும் பெரியவன் பயப்படுகிறான். ஒரு வேளை மனஸ்தாபப்பட்டுக் கொண்டு, தனியே போய் விட்டால், ஊர் அல்லவா கைகொட்டி நகைக்கும்?" யார் காதிலும் படாமல் ரகசியமாய்த்தான் இப்படிக் கூறுவார் பரமேசுவரன்.

தந்தை ஓய்வு பெற்று, குடும்பப் பொறுப்பு முழுமையையும் வாசு ஏற்றுக் கொண்டது முதல், தம்பி கிருஷ்ணனின்

மனோபாவத்தில் குறிப்பிடத்தக்க முறையில் மாறுதல் காணப்பட்டது.

"என்ன வாசு! அப்பாவுக்கு வயசாகி விட்டது. இனி எல்லாப் பொறுப்பும் உன்னுடையதுதான். இரண்டு தங்கைகளை நல்ல இடங்களில் கல்யாணம் செய்து கொடுக்கவேண்டிய பெரும் பொறுப்பு உன்னுடையது" என்று வீட்டுக்கு வருபவர்கள் கூறுவது சகஜம்.

"ஏதோ ஆண்டவன் இருக்கிறான். மரம் வைத்தவன் தண்ணீர்விட மறந்து விடுவானா?" என்று அடக்கமாய்ப் பதில் கூறுவான் வாசு.

ஆனால் இளையவன் கிருஷ்ணன் என்ன நினைக்கிறான்? 'அண்ணா மட்டுந்தானா குடும்பப் பொறுப்புள்ளவன்? நான் இல்லாதவனா? அண்ணாவின் வருமானத்திலா மட்டுமா குடும்பம் நடைபெறுகிறது? நான் ஒன்றும் கொடுக்கவில்லையா? என் தங்கைகளின் கல்யாணம் என்றால் நான் சும்மா விட்டு விடுவேனா? சே! சே! நம் குடும்பங்களிலே இந்தப் பாரபட்சம் அதிகம் தான். என்னதான் தம்பி உழைத்தாலும் பணமாய் அள்ளி விட்டாலும், பெருமை, கௌரவம் எல்லாம் மூத்தவனுக்குத்தான். நான் ஒருவன் இருக்கிறேன் என்று என்னை யாராவது மதித்து நடக்கிறார்களா?'



அன்றொரு நாள் பரமேசுவரனின் உறவினர் ஒருவர், கல்யாணத்துக்காக அவர்களை அழைக்க வந்தார். பரமேசுவரன் அவரிடம், "நான் தள்ளாதவன். உடல் நிலை சரியாய் இல்லை. நான் எங்கும் வரச் சாத்தியமில்லை. உள்ளே நம் வாசு இருக்கிறான். அவனிடம் எல்லாரையும் அழைத்துக் கொண்டு வரும்படி சொல்லி விட்டால் சரி!" என்றார்.

இதைக்கேட்ட கிருஷ்ணனின் உள்ளம் புழுவெனத் துடித்தது. ரத்தம் கொதித்தது. ஒரு குடும்பத்திலே இளையவனாய்ப் பிறப்பதில் உள்ள கொடுமையை எண்ணி எண்ணி ஏங்கினான்.

வாசுவின் மனநிலை எப்படி இருந்தது? தன் தந்தை இன்னும் சிறிது காலம் சம்பாதித்துக் கொண்டிருந்தால், இந்தப் பொறுப்பு தனக்கு ஏற்பட்டிராதே என்று தாபப்பட்டான். "எத்தனை குடும்பங்களிலே வயதானவர்கள் எழுபது வயது கடந்தும், இன்னும் சம்பாத்திய புருஷர்களாய் இருக்கிறார்கள்! நான் துரதிர்ஷ்டம் பிடித்தவன். இல்லையேல், குடும்பத்தில் மூத்த பிள்ளையாய்த் தோன்றி யிருப்பேனா? என் தம்பி எவ்வளவு நிம்மதியாய் இருக்கிறான்! ஏதோ ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுத்து விட்டு ஹாய்யென்று இருக்கிறான். வரும் கடன்காரர்களுக்கு நான் சமாதானம் சொல்லி யனுப்புகிறேன். அவன் வேடிக்கை பார்த்துக் கொண்டு போகிறான். யாராவது நான் இல்லாத சமயம் வந்தால், "பெரிய ஐயாவைக் கேட்டுக் கொள்" என்று கேலியாய்ச் சொல்லியனுப்புகிறான்.

அப்பா சம்பாதிக்கா விட்டாலும், உடல் நிலை சரியாக இருந்தால், எனக்குத் தெம்பாயும் நிம்மதியாயும் இருக்கும். அவர்போய் விசாரிக்க வேண்டிய நல்லது. அல்லாதது இவைகளுக்கு இப்போது நான் அல்லவா போக வேண்டி யிருக்கிறது? "அப்பா வாசு! எனக்கு அடுத்தபடியாகக் குடும்பத்தில் பெரியவன் நீதான். போய்விட்டு வா" என்று அப்பாவின் அன்புக் கட்டளை வேறு. 'உண்மையில் என் தம்பி கொடுத்து வைத்தவன். அவன் மீது பொறாமை கூட ஏற்படுகிறது' என்று அவன் சிற்சில சமயங்களில் எண்ணுவான்.

★

**கா**ரியாலயத்திலிருந்து வீடு திரும்பிய வாசு தந்தையின் படுக்கையருகில் போய் அமர்ந்தான். அபாய எல்லையிலேதான் இன்னும் இருந்தார் அவர். மூடிய கண்களைத் திறக்கவே இல்லை. அன்று மாலை டாக்டர் வந்து பார்த்து விட்டு, முகத்தைச் சுளித்தவாறு, "நிலைமை மோசம்தான். இரவு விழிப்புடன் இருந்து மணிக்கணக்குப்படி, இந்த மருந்தைக் கொடுங்கள். இரவுப் பொழுது கழிந்து விட்டால், பிறகு பயமில்லை" என்று கூறிவிட்டு மருந்தை எழுதிக் கொடுத்து விட்டுச் சென்றார்.

இரவு தந்தையின் அருகிலே அமர்ந்தவண்ணமிருந்தான் வாசு. கிருஷ்ணன் சிறிது நேரம் இருந்து விட்டுத் தன் அறைக்குச் சென்று விட்டான்.

"அப்பா!" என்று மெதுவாக அழைத்தான் வாசு.

மெல்லத் தம் கண்களைத் திறந்தார் தந்தை. "வாசு! நீ இந்தக் குடும்பத்துக்காகப் படும் பாடு கொஞ்சம் அல்ல,

## வத்னியால் குளுமையுடன் விளங்குங்கள்



### என மதுபாலா கூறுகிறார்

இந்த உஷ்ண காலத்தில், நீங்கள் சோர்வடைந்தவுடன் வத்னி சோப்பால் அலம்பிக்கொள்ளுங்கள், நீங்கள் தெம்புடன் திகழ்வீர்கள்—இது சுதேசி சோப்.

கீர்த்திவாய்ந்த சினிமா நக்ஷத்திரம் மதுபாலா உபயோகிப்பதும்; சிபார்சு செய்வதும், புஷ்பங்களின் புதுமை நிறைந்த வத்னி சோப்பே.




கடைசி செதில் வரை புதுமையும் நறுமணமும் உள்ளது.

மற்றும் வத்னி பேபி


100% சுதேசி

சோப்புகளில் புகழ்பெற்ற பெயர்.



இந்தியாவில் ஏராளமான

# சீட்டுக் கட்டுகள்

தயாரிப்பாளர்கள். அனைவருக்கும் ஏற்ற பற்பல ரகங்கள் வசீகரமான அனேகவித டிசைன்களில் கிடைக்கும்

விற்பனை விவரங்களுக்கு எழுதவும்

**THE POPULAR FINE ART LITHO WORKS, Tardeo Road, BOMBAY-7**

ஏஜண்டுகள் : வி. க. ராமலிங்கம் அண்டு சன்ஸ், 2/422, தம்புசெட்டித் தெரு, சென்னை - 1

---

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்

**சென்னை - நாகப்பட்டினம் - பினாங்கு - சிங்கப்பூர்**



# S. S. ரஜுலா

மேற்படி கப்பல் கீழ்க்கண்ட தேதி வாக்கில் புறப்படும்

| சென்னையிலிருந்து | நாகப்பட்டினத்திலிருந்து |
|---|---|
| 1958 ஆகஸ்ட் 12 | 1938 ஆகஸ்ட் 13 |

பிரயாணத்திற்குரிய தஸ்தாவேஜுகளைக் காண்பித்து ''பங்க்'' வசதியுள்ள டிக்கட்டுகளையும் ''பர்த்'' வசதியற்ற டிக்கட்டுகளையும் (''சாப்பாட்டுடனோ'' அல்லது ''சாப்பாடின்றியோ'') எங்கள் கம்பெனியின் ஏஜெண்டிடமிருந்து நேரடியாகப் பெற்றுக் கொள்ளலாம்.

பினாங், போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி பாங்காக்கிற்கு சரக்குகள் அனுப்பவும் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றுமதி விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்

| | |
|---|---|
| பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட்<br>7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1 | மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்<br>முதல் லேன் பீச் ரோடு, நாகப்பட்டினம் |

நான் இனி பிழைக்க மாட்டேன். ஒன்று கேட்டுக் கொள்கிறேன். நான் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. நீயே எல்லாம் அறிந்தவன் தான். என்றாலும் பாழும் அஞ்ஞானம் கேட்கிறதா? நம் குழந்தைகள் பாரு, ருக்கு இவர்களின் கல்யாணத்தை நடத்தும் பொறுப்பு உன்னுடையது தான். குழந்தைகள் கண்ணைக் கசக்காமல் இருக்கக் கூடிய இடங்களில் அவர்களைக் கொடு" என்று கண்களில் நீர் மல்கக் கூறினார்.

வாசுவும் அழுதுவிட்டான். "அப்பா! நீங்கள் அவச்சொல் பேசாதீர்கள். அம்மா கலங்குகிறாள். என் தங்கைகளின் கல்யாணங்களை நான் நடத்துவேன். கவலையே வேண்டாம்" என்று உருக்கத்துடன் கூறினான்.

தந்தையின் உடல்நிலை ஒருபுறம். தான் தாங்கும் குடும்பப் பொறுப்பின் பரிமாணம் ஒருபுறம். இரண்டு தங்கைகளின் கல்யாணம் நடைபெற வேண்டிய நிலை இன்னொருபுறம். வாசுவின் மனம் தட்டாமாலையாடிக் கொண்டிருந்தது. கண்கள் சொருகிக் கொண்டன. "வாசு!" என்று தட்டி எழுப்பினாள் தாயார். அலறியடித்துக் கொண்டு எழுந்தான் வாசு. பதறும் சத்தம் கேட்டுக் கிருஷ்ணனும் ஓடி வந்தான்.

"அப்பாவைப் பாருங்களடா!" என்று ஓலமிட்டாள் தாயார்.

தனயன்மார்கள் தந்தையின் உடலைத் தொட்டுப் பார்த்தார்கள். பட்சி கூண்டிலிருந்து பறந்தோடி விட்டதை உணர்ந்தார்கள். அழுதென்ன? புரண்டென்ன? இவ்வுலகில் மாண்டவர் மீண்டும் வருவாரோ?

பிறப்பவர் இறப்பது உலக இயல்பு. இந்தத் தத்துவம் வாசுவுக்குப் புரிந்து நாளடைவில் மனம் தேறி விட்டான்.

*

அன்று காலை எட்டுமணி இருக்கும். ஒருவர் வாசலில் தயங்கியபடியே வந்து நின்று, "பெரியவர் இருக்கிறாரா?" என்று கேட்டார்.

"பெரியவர் காலமாகி மாதங்கள் மூன்றாகின்றன" என்றான் கிருஷ்ணன்.

"அது தெரியும். வாசுதேவனைக் கேட்டேன். அவர்தானே இப்போது

## முள் நடனம்!






வீட்டுக்குப் பெரியவர்? ஓ! நீங்கள் தான் அவர் தம்பியோ?'' என்றார் வந்தவர் திகைப்புடன்.

ஆத்திரமாக வந்தது கிருஷ்ணனுக்கு. ''அவர் இன்னும் வரவில்லை'' என்று அலட்சியமாய்க் கூறிவிட்டு உள்ளே போய் விட்டான். வந்த மனிதர் அவனுடைய பதிலைக் கேட்டுத் திகைத்துப் போய்த் திரும்பி விட்டார்.

அன்றொரு நாள் மாலை பள்ளியிலிருந்து வீடு திரும்பிய கிருஷ்ணன் மேசையின் மீது ஒரு திருமண அழைப்பைக் கண்டான். தன் தமையனின் பெயர் அதில் எழுதப்பட்டிருந்தது. எரிச்சலுடன் அதை வீசியெறிந்தான். ''சே! வீட்டுக்குப் பெரியவர் அல்லவா!'' என்று கேலியாய் முணுமுணுத்தது அவனுடைய வாய். தன் அண்ணன் மீதுள்ள ஆத்திரமும் கோபமும் வார்த்தைகளாக வெளிவந்தன.

தந்தைக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றும் பணியில் முனைந்தான் வாசு. தன் முதல் தங்கை பாருவுக்குக் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்தான். கல்யாணமும் நடந்தேறியது. வந்திருந்தவர்கள் எல்லாரும் அவனைப் பாராட்டினார்கள். ''வாசு! உன்னைப் போல் பிள்ளையைப் பெற உன் பெற்றோர் பாக்கியம் செய்திருக்க வேண்டும். உன் சொந்தப் பெண்ணின் கல்யாணத்தைப் போல, 'ஜாம் ஜாம்' என்று விமரிசையாக நடத்தி விட்டாயே!'' என்று வியக்காதவர்கள் இல்லை.

கேட்டுக் கொண்டு அருகில் நின்ற கிருஷ்ணன் வெறுப்புடன் வெளியேறினான். ''குழந்தை! உன் மூத்த அண்ணா, அப்பாவுக்குச் சமானம். அவருக்கு முதலில் நமஸ்காரம் செய்'' என்றார் புரோகிதர். கிருஷ்ணன் காதிலும் இந்தச் சொற்கள் விழுந்தன. முன்னைப் போல உள்ளத்தைத் தைத்தன அவை.

''என் அண்ணாவுக்குக் கிடைக்கும் இத்தனை கௌரவமும் பாராட்டும் எனக்கு ஏன் கிடைக்கவில்லை? நான் தம்பியாய்ப் பிறந்து விட்ட காரணத்தால்தான். ஆண்டவனே! என்னை ஏன் தம்பியாய்ப் பிறப்பித்தாய்?'' என்று குமுறியது அவன் உள்ளம்.

திடீரென்று உள்ளே பரபரப்பு ஏற்பட்டது. ''ஆ! என்ன? என்ன? வாசுவா?'' என்று பல குரல்கள் கிளம்பின. எல்லோரும் ஓடினார்கள். கிருஷ்ணனும் பாய்ந்து சென்றான் உள்ளே. வாசு தரையில் பேச்சுமூச்சற்றுக் கிடந்தான்.

''அண்ணா!'' என்று கதறியபடியே மணப்பெண், அண்ணாவைத் தூக்கித் தன் மடியில் இருத்திக் கொண்டாள்.

கிருஷ்ணனின் உள்ளத்திலே ஓர் குரல் எழுந்தது. ''இனி உன் குடும்பத்துக்குப் பெரியவன் நீதான். எல்லாக் கௌரவங்களையும் நீயே அடையலாம். ஆம்! உன் அண்ணாவின் ஆவி பிரிந்து கொண்டிருக்கிறது. சந்தோஷமா?''

★

''ஐயோ; அண்ணா! எனக்குக் கௌரவம் வேண்டாமே! நான் தம்பியாகவே இருக்கிறேனே'' என்று பேய் பிடித்தவன்போலக் கூவிக் கொண்டு படுக்கையிலிருந்து அலறியடித்துக் கொண்டு, வெளியே ஓடி வந்தான் கிருஷ்ணன். கிருஷ்ணனின் அலறல் அந்த வீடு முழுதும் ஒலித்தது. எதற்காக அவன் இப்படிக் கூச்சலிட்டான் என்று தெரிந்து கொள்ள ஓடிவந்தான் வாசு. கிருஷ்ணனைத் தாங்கியபடியே வாசு, ''என்னடா, கிருஷ்ணா? ஏன் என்னமோ பிதற்றிக் கொண்டு ஓடி வருகிறாய்? ஏதாவது கனவு கண்டாயா?'' என்றான்.

இதற்குள் தந்தையும் விழித்துக் கொண்டார். ''என்ன கூச்சல் இது? கிருஷ்ணா கூச்சலிட்டான்?'' என்றார். அவர் உடலில் எங்கும் வியர்வை விட்டிருந்தது. தந்தை அபாய எல்லையைக் கடந்து விட்டார் என்று அறிந்து கொண்டான். வாசு மனம் நிம்மதியடைந்தான். தவிர, தம்பியினுடைய சொற்களைக் கேட்டு, அவன் மனம் மாறி விட்டது என்று உணர்ந்துகொண்டான்.

சிற்சில சமயங்களில் தன் நிலைமையை எண்ணித் தாபப்பட்டது முட்டாள் தனம் என்று வாசுவுக்குத் தெளிவாகியது. இந்தமட்டில் தந்தை உயிர் பிழைத்தாரே! அவர் தன்னுடன் வீட்டுக்குப் பெரியவராக இருந்தாலே போதும் என்று அவனுடைய விவேகம் தெளிவாக அவனுக்கு எடுத்துக் கூறியது.

# ஆகஸ்ட் ரிலீஸ்

ஸ்ரீ சத்தியநாராயண் பிக்சர்ஸ் அளிக்கும்

## ஸ்ரீசங்கர் பிக்சர்ஸாரின்

... லட்சிய சித்திரம் ...



பண்டரிபாயின் பாசவலையிலே
மஞ்ஜுளாவின் வாஞ்சை அலையிலே
சாரங்கபாணியின் சாகஸச் சிரிப்பிலே
செல்வத்தின் வெல்லப்பேச்சிலே
கூடிக்குலவும் குஞ்சுகளின் பிஞ்சு மொழியிலே
சுழன்று ஒளிவீசும்....

# மங்கையர் உலகம்

உரிமையாளர்கள்:

மதுரை, ராமனுதபுரம், திருநெல்வேலி, திருச்சி, தஞ்சாவூர்
ஸ்ரீ சத்யநாராயண் பிக்சர்ஸ், சென்னை-18

இதர எல்லா இடங்களுக்கும்
பிக்சர் பைனான்ஸியர்ஸ், சென்னை-10

மதுரை, ராமனுதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி ஜில்லாக்களுக்கு விநியோகஸ்தர்கள்:
மகாத்மா பிக்சர்ஸ், 45-ஏ, மேற்கு ஆவணி மூல வீதி, மதுரை

தேவைக்கு விண்ணப்பிக்கவும்

ஸ்ரீ சத்யநாராயண் பிக்சர்ஸ், 33, அபிராமபுரம் 4வது தெரு, சென்னை-18




## முட்டுக்கட்டை !

திருச்சி நகரில் நெருக்கடி மிகுந்த பட்டர்வர்த் ரோடில் வெளியூர் பஸ்ஸ்டாண்டு நீண்ட காலமாக இருந்து வருகிறது. இந்த பஸ் ஸ்டாண்டு ரோடின் மீதே இருப்பதால் வண்டிகள் போக்குவரத்துக்கு இடையூறாக இருந்து அடிக்கடி விபத்துக்கள் ஏற்படுகின்றன.

பொது மக்களுக்கு ஏற்பட்டிருக்கும் இந்த நெருக்கடியைத் தீர்ப்பதற்குத் திருச்சி நகரசபை மூன்று ஆண்டுகளுக்கு முன் போக்குவரத்து அதிகமில்லாத கீழப்புலிவார்டு ரோடில் உள்ள நகரசபைக்குச் சொந்தமான ஒரு மைதானத்தில் பஸ் ஸ்டாண்டை மாற்றுவது என்று தீர்மானித்து அதற்கான தொகையும் ஒதுக்கியுள்ளது. மேலப்புலிவார்டு ரோடில் ஏற்கனவே போக்குவரத்து மிகவும் அதிகமாக இருப்பதாலும், டவுன் பஸ் ஸ்டாண்டு அங்கே இருப்பதாலும், பஸ் ஸ்டாண்டைக் கீழப்புலிவார்டு ரோடுக்கு மாற்றுவதென்று நகரசபை முன்வந்தது.

இந்த நிலையில் நகரத்தில் உள்ள காங்கிரஸ் சர்வாதிகாரி ஒருவரால், அதிகார வர்க்கத்திடமும், ஆளவந்தாரிடமும் முட்டுக்கட்டை போடப்பட்டு அரசாங்கத்தாரும் "ஸ்டே" உத்தரவு கொடுத்துள்ளனர். காரணம் அவர் வசித்து வரும் இடம் மேலப்புலிவார்டு ரோடு என்பதுதான். இதனால் பொதுமக்கள் மிகவும் பாதிக்கப்படுகிறார்கள்.

திருச்சி
16—6—58 — ஆர். நாகசுந்தரம்

## போற்றுதும்

மானத்தை வீரத்தைக் காத்து, மக்கள்
மன்றத்தில் நற்புகழும் சேர்த்து, ஒப்பு
தானற்ற தமிழுக்குத் தொண்டு செய்த,
தார்வேந்தர் பாண்டியர்கள் வழியில் வந்த,
வானவன்மா தேவிகதை தனை வளர்த்து
வாசகர்கள் மனத்தையெல்லாம் வசித்த
'நா. பா'
ஞானத்தைக் 'கல்கி'செயும் நல்லதொண்டை
நாவாரப் போற்றுதும்போற் றுதுமே நாமே!

அழகாபுரி
11-7-58 — கா. குருசாமி

## ராஜாஜியின் பெயர் எங்கே?

பம்பாய் அரசாங்கம் ஏழு தலைவர்களின் பெயரைக் குறிப்பிட்டு இவர்களுடைய படங்களைத்தான் இனி சர்க்கார் காரியாலயங்களில் மாட்ட வேண்டும் என்று உத்தரவு பிறப்பித்துள்ளதாகப் பத்திரிகைகளில் கண்டேன். ராஜன் பாபு, காந்திஜி, படேல், வினோபாஜி முதலியவர்கள் இடம் பெற்றிருக்கிறார்கள். அகில இந்தியத் தலைவர்களில், தலைசிறந்தவர்களுள் ராஜாஜியும் ஒருவர் என்பதை பம்பாய் அரசாங்கம் மறந்து விட்டது என்பதை அறிய மனம் பெரிதும் வேதனைப்படுகிறது. சுதந்திரப் போராட்ட காலத்தில் காந்திஜி, ராஜன் பாபு, நேருஜி முதலியவர்களுடன் சம அந்தஸ்துடன் வெற்றி முழக்கம் செய்த விடுதலை வீரர் ராஜாஜிதான் என்பதை யாரும் மறக்க முடியாது. உப்பு சத்தியாக்கிரகப் போரில் காந்திஜி "தண்டி" யாத்திரையும் ராஜாஜி வேதாரண்யம் யாத்திரையும் செய்து, பிரிட்டிஷ்காரர்களின் ஆணவத்தை அடக்கி மகத்தான வெற்றி பெற்றார்கள். உலக மேதைகளால் போற்றப்படுகிறவர் ராஜாஜி. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கடைசி கவர்னர் ஜெனரலாகத் திகழ்ந்து, வாழ்கின்ற உத்தம வீரர். இவரை ஏன் பம்பாய் மறந்ததோ, தெரியவில்லை. இவரை உடனே தேசத் தலைவர்களின் பட்டியலில் சேர்த்துக் கௌரவிக்கப் பம்பாய் சர்க்கார் முன் வர வேண்டும்.

திருச்சி
14—7—58 — அருணா நமசிவாயம்

## சம்பளம் இல்லாத சேவகம்

இராமநாதபுரம் ஜில்லா திருப்பத்தூர் தாலூக்கா மிதிலைப்பட்டி ஓராசிரியர் பள்ளி அதன் தலைமை ஆசிரியரால் மிக்க முற்போக்குடன் நடத்தப்பட்டு வருகிறது. ஓராசிரியர் பள்ளி ஈராசிரியர் பள்ளியாய்ப் பரிணமித்ததற்கும் பள்ளிக்கு ஒரு நிரந்தர நிலையம் நிறுவும் முயற்சிக்கும் மூலகாரணம் பள்ளி ஆசிரியர்களேயாகும். தன்னலங் கருதாது கல்வித் தொண்டு புரியும் இந்த ஆசிரியர்களுக்கு அரசினர் தரும் ஆதரவு ஏப்ரல் மாதம் முதல் மூன்று மாதங்கள் சம்பளம் இல்லாமைதான்! மாவட்டக் கழகம் தலைவரால் இயக்கப்பட்டு வந்தவரை சம்பளம் ஒழுங்காக வந்தது. பின் கழகம் அதிகாரிகளின் நேரடி ஆட்சிக்கு வந்த பின் இந்த அவதி ஏற்பட்டுள்ளது. "ஞானமும் கல்வியும் நாழி அரிசிக்குள்" என்பதை அறியாதோர் ஆட்சிக்கு வந்தென்ன பலன்? ஐந்தாண்டுத் திட்டம் வகுத்தென்ன பலன்?

மிதிலைப்பட்டி
5—7—58 — மீ. இராமநாதன்

## ஷெனாய்நகர் வீடுகள்

நான் இருக்கும் இடம் ஷெனாய்நகரம். இங்கு ஷெனாய்நகர், ஷெனாய்நகர் எக்ஸ்டென்ஷன், வி. ஐ. டி. காலனி என்று மூன்று பிரிவுகள் உள்ளன. இருப்பினும் பெரும்பாலான வெளி மனிதர்களுக்கு இவை மூன்றும் தனித்தனியான இடம் என்று தெரியாது. வீடுகளின் நம்பர் போட்டிருக்கும் விதமும் விசித்திரமானது. ஒரு வரிசையில் ஒன்று முதல் பத்துவரையில் எண்கள் இடப்பட்டிருக்கும். அடுத்த வரிசையில் 45லிருந்து ஆரம்பிக்கப்பட்டிருக்கும். 11-ம் எண் எங்கேயாவது வேறு ஒரு மூலையில் ஆரம்பிக்கப்பட்டிருக்கும். இந்த வீடுகள் எல்லாம் ஏ-டைப்,

# மேஜை



பி-டைப், சி-டைப் என்று வகையாகப் பிரிக்கப்பட்டுக் கட்டப்பட்டிருந்த போதிலும் ஒரு ஒழுங்கு கிடையாது. இந்த விஷயம் தெரியாமல் வந்துவிட்டால் ஷெனாய்நகரைச் சுற்றிச் சுற்றிக் கால் ஓய்ந்து போக வேண்டியதுதான்.

சென்னை-30
28-6-58 ரா. கிருஷ்ணமூர்த்தி

## வழிகாட்டி தேவை

தமிழர்களின் பக்தி, கலை இவைகளின் சின்னமாகக் கம்பீரத்துடன் நிற்கும் நிழல் சாயாத கோபுரம், மிகவும் பெரியதான சிவலிங்கம், புகழ் பெற்ற நந்தி, சோழர், நாயக்கர், மராட்டியர் காலச் சித்திரங்கள், சிற்பங்கள், சமீபத்தில் கண்டு பிடிக்கப்பட்டதாகச் சொல்லப்படும் சோழர்கள் காலத்து உயர்வகைச் சித்திரங்கள், முருகன், கருவூர் தேவர் கோவில்களின் முக்கியத்துவம் முதலியவை கொண்டது தஞ்சை. இந்தத் தஞ்சைக் கோயிலுக்கு வரும் யாத்ரீகர்களுக்கு மேற்படி விஷயங்களை விளக்க விஷயமறிந்த வழிகாட்டிகளை அமர்த்த வேண்டும்.

கானநாடு
8-7-58 கே. சுந்தரராமன்

## வைத்தியசாலை!

உடையார்பாளையம் சுமார் 8000 ஜனத் தொகை கொண்ட ஒரு மேஜர் பஞ்சாயத்து. அது ஜமீன்தாரின் வாசஸ்தலமாக இருப்பதோடு அவர்களாலேயே பராமரித்து வரப்பட்ட ஆஸ்பத்திரி மிகவும் சிறப்போடு இருந்து வந்தது. ஆனால் தற்பொழுது, ஜமீன் ஒழிப்புக்குப் பிறகு அது மூடப்பட்டுக்கிடப்பதோடு, ஆஸ்பத்திரி கட்டடத்துக்கே அழிவு ஏற்படும் நிலைமையில் இருக்கிறது.

உடையார்பாளையம்
3-7-58 கலிய பெருமாள்

## ஐயாயிரம் மக்களுக்கு ஒரு கிணறு!

மதுரை மாவட்டம் பெரியகுளம் வட்டத்தைச் சேர்ந்த சில்வார்பட்டி கிராமம் ஐயாயிரத்துக்கு மேற்கொண்ட ஜனத் தொகை கொண்டது. போர்டு உயர்தர ஆரம்பப்பள்ளியில் பத்து ஆசிரியர்கள் வேலை பார்த்துவரும் அளவுக்குப் பெரிய கிராமமாகும். இங்குள்ளவர்கள் அனைவருக்கும் குடி தண்ணீர்க் கிணறு ஒன்று தான். இக்கிணறு தனிப்பட்ட ஒரு குடும்பத்தாரால் வெட்டப்பட்ட கிணறு. மழையில்லாத காலங்களில் கிணற்றில் தண்ணீர் இல்லாமல் பாறை தான் கண்ணுக்குத் தெரிகிறது. மணிக்கு மணி ஊறும் தண்ணீரை நூற்றுக் கணக்கான பெண்கள் காத்திருந்து அனைவரும் ஒன்று சேர்ந்தாற் போல் தங்கள் தங்கள் வாளிகளைக் கிணற்றில் விட்டு ஒவ்வொரு வாளியில் வரும் சில சொட்டு நீரை இறைக்கும் காட்சி பரிதாபமாயிருக்கிறது. கிராமப் பொதுவில் குடி தண்ணீர் வசதி செய்ய மக்கள் முன் வர வேண்டும். அல்லது சம்பந்தப்பட்ட அரசாங்க அதிகாரிகளாவது இக்குறையை நீக்க விரைவில் ஆவன செய்ய வேண்டும்.

சில்வார்பட்டி
13-7-58 ஏ. திருமலை

## நற்பணி

காலத்துக்கேற்ற நற்பணி பாரதத்தின் பொருளாதார "ஆராய்ச்சி அரங்கம்." வளர்ந்து வரும் சுதந்திர இந்தியாவின் வரும் சந்ததிகளுக்கு இன்றைய நாட்டுப் பொருளாதார நிலை பற்றித் தெரிந்திருக்க வேண்டியது மிக மிக அவசியம். கல்கி 13-7-58 இதழில் தொடங்கும் ஆராய்ச்சி அரங்கம் பொருளாதார இந்தியாவை நல்ல முறையில் அறிமுகப்படுத்துகிறது.

சென்னை-4
11-7-58 "கலைஞன்"

## சுங்க அதிகாரிகள் தர்பார்

சென்ற பிப்ரவரி மாதத்தில் ஆறு மாவு டின்கள் பார்சலில் இந்தியாவுக்கு அனுப்பினேன். அதன் பிறகு வீட்டிலிருந்து வந்த கடிதத்தில் சென்னை சுங்க அதிகாரிகள் மேற்படி டின் மாவை வைத்துக் கொண்டு, 'பர்மிட் இல்லாமல் மாவை வரவழைத்ததற்காக ஏன் வழக்கு தொடரக் கூடாது?' என்று கேட்டார்களாம்.

உடனே நான் சென்னை சுங்க அதிகாரிக்கு, "தாங்கள் மாவு டின்களைத் தடைப்படுத்தியிருப்பது தெரியாது. இங்கு இந்தத் தபாலாபீஸிலும் அதைப் பற்றிச் சொல்லவில்லை. தெரியாமல் ஏற்பட்டதால் அந்தக் குழந்தையின் நன்மையைக் கருதி அதை அவர்களிடமே சேர்க்க வேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொண்டேன். பிறகு கடிதம் வந்தது. அதில் அபராதம் போட்டிருப்பதாகத் தெரிவித்திருந்தார்கள். அபராதத் தொகையைக் கட்டி ஐந்து மாதங்களாகியும் பிறகும் மாவு என் வீட்டார் கைக்குப் போய்ச் சேரவில்லை.

கிள்ளான்
1-6-58 வி. எம். ஜெய்னூர்தீன்

## நோய்களால் அவதி

எங்கள் கிராமத்தில் மூவாயிரம் மக்களுக்கு அதிகமாக வசிக்கின்றனர். மலேரியா போன்ற கொடிய நோய்கள் அடிக்கடி வந்து மக்களை வாட்டுகின்றன. இவ்வியாதிகளுக்குப் பரிகாரம் காணவேண்டுமானால் எங்களது கிராமத்திலிருந்து சில மைல்களுக்கு அப்பாலுள்ள ஆஸ்பத்திரிக்குத்தான் செல்ல வேண்டும். நோய்நொடியால் ஏழை மக்கள் படும் பாடு கொஞ்சமல்ல. எனவே, எங்கள் கிராமத்துக்கு ஒரு இலவச வைத்தியசாலை கூடிய விரைவில் நிறுவுவார்களா?

காங்கேயம்
29-6-58 வி. துரைசாமி


TSR


GOKUL
SPECIAL Thick
MALA BATHI
T.S.R & Co., PERFUMERS, KUMBAKONAM


தயாரிப்பாளர்கள்
டி.எஸ்.ஆர். & கோ.
கும்பகோணம்




## 68. ‘நீங்களே சொல்லுங்கள்!’

கட்டுரை 52 வெளியான நாள் வரை கிடைத்த கடிதங்களை ஒரு வருஷத்திய கடிதங்களெனக் கணக்கிட்டு அதற்குப் பிறகு கிடைத்த கடிதங்களுக்குப் புதிய தொடர் எண் கொடுக்கத் தொடங்கியதை நேயர்கள் அறிவார்கள். புதிய தொடர் எண் கொடுக்கப்பட்ட பின் 462 கடிதங்கள் வந்துள்ளன. இவற்றில் 9-7-58 வரை கிடைத்த 321 கடிதங்களுக்குப் பதில் அளித்தாகி விட்டது. பின் பத்து தினங்களில் கிடைக்கப் பெற்ற 141 கடிதங்களுக்கு இன்னும் பதில் எழுதவில்லை. பத்து தினங்களில் 141 கடிதங்களானல் தினமொன்றுக்குச் சராசரி 14 கடிதங்கள் ஆகின்றன. இப்படித் தமது குறைகளைச் சொல்லி அன்பைப் பொழியும் நண்பர்களைப் போற்றுவதா?.....‘இரண்டே கைகள் தான் உள்ளன. அதில் ஒரு கைக்குத்தான் எழுதிப் பழக்கம். இந்த ஒரு கையால் பதில் எழுதித் தீராத அளவுக்குக் கடிதங்களை எழுதுகிறீர்களே!’ என்று நேயர்களை நோவதா? புரியாமல் கஷ்டப்படுகிறேன். இந்தக் கஷ்டத்துக்கு என்ன செய்யலாம்? நீங்களே சொல்லுங்கள்!

கடிதங்களில் சில கட்டுரையளவிலும், சில சிறுகதை யளவிலும் உள்ளன. இதைப் படித்தாக வேணும். ஒரு வரி விடாமல் படித்தாக வேணும். வேறு சிலவற்றைப் படிக்க முடியாது. எழுத்து இன்னதென்று புரியாது.

“எனக்கு இப்படி உடம்பு. என் குழந்தை...க்கு இப்படி உடம்பு. அவன் அப்பாவுக்கு...இப்படி உடம்பு. இதற்கெல்லாம் என்ன செய்யலாமென்று தயவு செய்து எழுதுங்கள்” என்று எழுதுவார் ஒரு சகோதரி. இவர் கடிதத்துக்கு எவ்வளவு நீண்ட பதில் எழுத வேணும், பாருங்கள்!

திரும்புகால் கடிதத்துக்குத் தபால் கூலி அனுப்பாமலும், அல்லது போதுமான தபால்கூலிஅனுப்பாமலும் விளக்கமான பதிலை எதிர்பார்க்கும் நேயர்கள் சிலர். இதற்கென்ன செய்வேன்?

இலங்கைவாழ் தமிழ்ச் சகோதர சகோதரிகள் எழுதும் கடிதங்களைப் பற்றி ஒரு விஷயம். ‘இன்டர்நேஷனல் போஸ்டல் கூபன்’ மூலம் திரும்புகால் கடிதத்துக்கான கூலியை அனுப்பி வைக்கும்படி ஏற்கெனவே தெரிவித்திருந்தேன். யாரோ ஓரிருவர் தவிர மற்றைய இலங்கைச் சகோதர சகோதரிகள் யாவரும் இதை மறந்தே விட்டனர். இதற்கு என்ன செய்வது?

இவ்வகைக் கடிதங்களோ மொத்தக் கடிதங்களில் ஒரு கணிசமான பாகம். தங்கள் சுகவீனத்துக்கான மருந்துகளை எழுதினல் போதாது. அவை கிடைக்கும்படியும் ஏற்பாடு செய்ய வேண்டுமென்று இவர்களுள் அநேகமாக எல்லோருமே எழுதுகின்றனர். மருந்துகளை விற்போரிடம் அவற்றை அனுப்பும்படி செய்வது கடினமான காரியமாகி விடுகிறது. இலங்கைக்கு வி. பி. மூலம் மருந்தை அனுப்புவதில் பலவிதத் தொந்தரவுகள் இருக்கின்றனவென்று அனுப்ப மறுக்கின்றனர்.

பதில் கடிதத்துக்குப் போதுமான தபால் கூலி அனுப்பியவருக்கெல்லாம் பதில் எழுதியுள்ளேன். அப்படிப் பதில் எழுதுவதிலும் ஒரு முறை வகுத்துக் கொண்டுள்ளேன். கிடைத்தவுடன் கடிதங்களை ஒரு முறை படித்து விடுவது. உடனே பதில் எழுத வேண்டிய விஷயமானல் பதிலை எழுதி விடுவது. அவசரமான வியாதி-நிலைமைகளை எண்ணி இச்சலுகை. இதற்கு மாருக, “எனக்கு ஆறு வருஷ காலமாக ஒருவகை எக்ஸிமா” என்பது போன்ற கடிதங்களுக்குப் பிறகு எழுதலாமென்று தீர்மானிப்பது: கடிதங்கள் கிடைத்த தேதி வாரியாக எண்களைக் கொடுத்துப் பதில் சற்றுச் சாவகாசமாக எழுதுவது என்ற கிரமத்தில்தான் நேயர்களின் கடிதங்களுக்குப் பதில் எழுதி வருகிறேன்.

கடிதங்களில் மிகவும் சாரமானவற்றில் சிலவற்றையும் தெரிவிக்கிறேன்.

சனிநோய்— தொடர்த் தும்மல்களைப்பற்றி 182/2ல் கோம்பூர் நண்பர், 193/2ல் மேட்டூர் நேயர், இன்னும் இவ்விதமே பலர் கேட்டிருக்கின்றனர். இவ்விஷயமாக விளக்கமாக எழுதிய பிறகும் இப்படிக் கேட்டால் என்ன செய்வது? எழுதிய விஷயத்தையே திரும்பத்திரும்ப எழுத எப்படி உற்சாகம் இருக்கும்? இது என்ன ஸ்ரீராமஜெயமா?

இதற்கு மாருக 230/2ல் கரண்டைச் சகோதரி எழுதுவது எவ்வளவு உற்சாகத்தை அளிப்பதாயிருக்கிறதென்பதையும் பாருங்கள். சகோதரியின் கடிதத்தில் சம்பந்தப்பட்ட பாகத்தை அவர் எழுதியபடியே தெரிவிக்கிறேன்.

"தாங்கள் தெரிவித்தபடி அச்வகந்தாதி லேஹியம், ஸுரஸாதி தைலம் இரண்டையும் பயன்படுத்தினேன். அதன் பயனாக ஜலதோஷம் உண்டாவது மிகவும் குறைந்துள்ளது. மூச்சு முட்டலும் இழுப்பும் இதுவரையில் உண்டாகவில்லை....."

இப்படியுள்ள நிலையில் பிற சகோதர சகோதரிகளுக்கு மட்டும் ஏன்—எப்படிச் சந்தேகங்கள் பிறக்கின்றனவோ, எனக்குத் தெரியவில்லை.

கடிதம் 184/2ல் 'வீரசோழகன் கிராமத்தில்' இருக்கும் சகோதரர் தமது 'கம்ப' வாதத்தைப் பற்றி எழுதியிருக்கிறார். எழுதும்போது, கையில் ஒரு நடுக்கம். இதைத்தான் கம்பவாதம் என்றும் உதறுவாதம் என்றும் சொல்வர். இந்த நோய் காரணமாக இந்தச் சகோதரருக்குப் படிப்பைத் தொடர முடியவில்லை. வாழ்க்கையில் வெற்றி பெறவும் இது ஒரு முட்டுக்கட்டையாக நேர்ந்து விட்டதாம். இதற்கு என்ன செய்யலாமென்று மிகவும் உருக்கமாகக் கேட்டிருக்கிறார்.

எனக்குத் தெரிந்த வரையில் இந்தக் கம்பவாதத்துக்குப் பல பேர்கள் பல வகை சிகிச்சை செய்துள்ளதிலிருந்து தெளிவான விஷயம் ஒன்று. நோயாளிக்கு நோய் குறைவதில்லை. வைத்தியருக்குக் கொஞ்சம் — சில நூறு ரூபாய்கள்—சேரும். அவ்வளவுதான். ஆனால் இந்தக் கம்ப வாதத்துக்குச் சிகிச்சையே வேண்டாமென்று விட்டு விட்டவர்களிலும் ஓரிருவரை யறிவேன். வாழ்க்கையில் வெற்றிகள் ஒன்றன்பின் ஒன்ருக அவரைத் தேடி வந்துள்ளன. வந்து கொண்டும் இருக்கின்றன. ஆகவே வாழ்க்கையில் உயர்வு, வெற்றி போன்றவை வருவதற்கு இந்தக் கம்பவாதம் இருப்பதும் ஒரு காரணமோ என்றும் தோன்றுகிறது. இதற்கு மேல் இக்கம்ப வாதத்தைப் பற்றி என்ன எழுதவிருக்கிறது?

கடிதம் 190/2-ல் கோயமுத்தூர் நண்பர் தமது உடல் நிறை ஏற என்ன செய்ய வேண்டுமென்று கேட்டிருக்கிறார்.

நண்பருக்கு வயது 19. உயரம் 5 அடி 7½ அங்குலம். எடை 98 பவுண்டு. இது போதாது. இந்த எடை ஏற வேண்டும். வேறு ஒருவிதக் கோளாறும் உடம்பில் இல்லை. உடல் பருமனாக வேண்டும். இதற்கு என்ன செய்யலாம்?

உடல் அதிகம் பருமனாவதை விட ஓரளவு ஒல்லியாயிருப்பதே விரும்பத்தக்கது. பருமனைப் போக்க மருந்தில்லை என்பது சாஸ்திரம். சகிப்புத் தன்மை ஒல்லியானவருக்கு இருப்பது போல் ஸ்தூல சரீரிகளுக்கு இருப்பதில்லை. சரீரத்தில் வேறு கோளாறுகளில்லாததால் இந்த எடையைப் பற்றி நண்பர் கவலைப்படவேண்டிய அவசியமில்லை. மற்றும் இன்னும் வளரும் பிராயத்திலுள்ள இந்நண்பர் சும்மா இருந்தாலே போதும். காலக்கிரமத்தில், தானே உடல் பருக்கும். ஆனாலும், 'இந்த இயற்கைக்குத் துணையாக ஏதேனும் செய்ய வேண்டாமா?' என்று கேட்டால் இதற்குச் செய்யவேண்டியது தினசரி எண்ணெய்க் குளி ஒன்றுதான். இதனால் சரீரத்துக்குப் புஷ்டியாகுமென்பது ஏற்கெனவே தெரிவித்துள்ள விஷயம். தலைக்கு க்ஷீரபாலா தைலத்தையும் உடம்புக்குப் பலாச்வகந்தாதி தைலத்தையும் தேய்த்துக் குளித்தால், மேலும் அதிக குணமுண்டாகும். இத்துடன் தஞ்சை அரண்மனை முறைப்படி தயாரித்த அச்வகந்தா லேஹியத்தில் அரை தோலாவிதம் காலை மாலை சாப்பிட்டு மேலே சிறிது காப்பி, பால் அல்லது வெந்நீர் போன்ற சூடான பானத்தைப் பருகி வந்தால் வளரும் பிராயத்திலுள்ள இயற்கைக்கு உறு துணைக் காரணமாக நின்று மேலும் உடல் வளர்ச்சி பெறும்.

கீழ்ப் பர்மாவைச் சேர்ந்த மோல்மேனிலிருந்து ஒரு நேயர் 194/2-ல் தனது 'குதப்ரம்சம்' என்னும் வியாதிக்குச் சிகிச்சை கேட்கிறார். மல விஸர்ஜன காலத்தில் மூலம் ஓரளவு வெளிப்படுகிறதாம். இதுதான் வியாதி. தமது வயதைக் குறிப்பிடவில்லை. நெடுநாளையக் குடலின் அழற்சியால் இது ஏற்படலாம். வயது நடுத்தரத்துக்கும் குறைந்ததானால் சஸ்திர சிகிச்சையால் சிகிச்சை செய்வது ஒன்றுதான் வழி. ஆனால், சிலருக்கு ஆபரேஷனுக்குப் பிறகு இதைத் தொடர்ந்து வயிற்றில் காற்று நிரம்பிக் கொண்டு உபாதைகளைத் தரும் ஒரு உபத்திரவம் விளைவதுண்டு. நடுத்தர வயது அல்லது அதையும் கடந்த பிராயத்தினருக்கு இந்த சஸ்திர சிகிச்சையே வேண்டாம். ஏதோ உபத்திரவமில்லாத வரையில் இந்த நோயை அனுபவத்தில் ஹிதமென்று கண்ட ஆஹாரவிஹாரங்களைக் கொண்டு பொறுக்குமளவில் வைத்துச் சகிப்பதே மேல்.

கடிதம் 199/2-ல் சென்னை நேயர்—ஜலதோஷத் தொல்லையால் உள்ளவருக்குத் தலைக்கு எண்ணெய்க் குளி கூடாது என்று மேல்நாட்டு வைத்தியம் படித்தவர்கள் சொல்கிறார்களே! சொல்லப் போனால், 'எவருக்குமே எண்ணெய் ஸ்நானம் அவசியமே இல்லை' என்கிறார்களே! இதில் உங்கள் அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டிருக்கிறார்.

20-4-58-ல் வெளியான கட்டுரை 53-ல் இதற்கு விடையளித்துள்ளேன்.

# புத்துணர்ச்சி பெற
# காவேரி சூபர்

வெப்பம் உங்களை வாட்டுகிறதா? காவேரி சூபர் சோப்பை உபயோகித்து வியர்வை துர்நாற்றத்தை விரட்டுங்கள்! காவேரி சூபர் உங்களுக்கோர் புத்துணர்ச்சியை அளிக்கும். அதன் ஔஷத மணம் உங்கள் மனதைக் கவரும்.

காவேரி சூபர்
ஔஷத குணம்
நிறைந்த சால்முக்ரா
தைலம் கலந்தது






கையடக்க
மானது, விலை
குறைவானது.

தயாரிப்பு:

மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.
மேட்டூர் அணை R.S. சேலம் ஜில்லா
மானேஜிங் ஏஜெண்ட்ஸ்: சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

MC-537

# பரிசு கிடைத்தது

"அண்ணே! சீக்கிரம் ஓடி வா, அண்ணே!" என்று முத்து தன் வயலிலிருந்தபடியே பக்கத்து வயலில் இருந்த மாரியை அழைத்தான்.

"என்ன தம்பி! இப்படி இரைகிறே? என்ன தலை போகிற விசயம்?" என்று கேட்டுக் கொண்டே முத்துவின் வயல் பக்கம் பார்வையைச் செலுத்தினான் மாரி.

"மாரி அண்ணே! வயலை உழுதுட்டு வந்த சமயத்திலே, இந்த இடத்திலே வந்ததும் கலப்பை நகரலே! உடனே நான் கோவிச்சுக்கிட்டு மாட்டை அடிச்சு விரட்டினேன்... மாட்டை அடிச்சதும் கலப்பை சிறிது நகர்ந்து 'டங்'னு ஒலியை எழுப்பிச்சு......"

"அப்படியா? ஏதாவது புதையல் இருக்கும். வா, தம்பி! இரண்டு பேரும் தோண்டிப் பார்க்கலாம். ஏதாவது கிடைச்சதுன்னு எனக்குப் பங்கு கொடுத்துட வேணும்.....!"

"கவலைப்படாதே! புதையல் கிடைச்சால் உனக்கு ஒரு பங்கு தந்துடறேன்" என்றான்.

முத்துவும், மாரியும் கடப்பாரை கொண்டு சத்தம் கேட்ட இடத்தில் தோண்டினார்கள். அவர்கள் தோண்டிய இடத்தில் மண் கெட்டியாக இருந்ததால் சிறிது தோண்டுவதற்குள் அவர்கள் இருவருக்கும் வியர்த்து விட்டது. வெகு நேர உழைப்புக்குப் பிறகு அந்தப் பள்ளத்திலிருந்த பொருள் இலேசாகத் தலைப்பட்டது. ஆவலுடன் அதைத் தோண்டியெடுத்த பொழுது அவர்கள் முகம் சுருங்கி விட்டது; ஆம்! அவர்கள் அதில் கண்டெடுத்தது ஒரு சிதைந்த சிலை.

"முத்து! எனக்குப் பங்கு வேண்டாம். நீயே அப்பொருளை எடுத்துக் கொள்ளலாம்" என்று அலுப்புடன் கூறினான் மாரி.

அவர்கள் கண்டெடுத்த சிலைக்குக் கைகள் மட்டும் இல்லை. ஆனால் அச்சிலையைச் சிருஷ்டித்த சிற்பி தன்னுடைய கைத்திறமை யனைத்தையும் அதில் காட்டி உயிரும் அழகும் ஊட்டியிருந்தான். கலைக் கண்ணோடு நோக்காத அந்த விவசாயிகளுக்கு அது வெறும் கல்லாகக் காட்சியளித்ததில் வியப்பில்லை யல்லவா?

முத்துவின் ஆசை நிராசையாகி விட்டதால் அவனுடைய வெறுப்பு முழுதும் அக் கற்சிலையின் மேல் திரும்பியது. அதை வயல் வெளிக்கு வெளியே கொண்டு போய் விட்டெறிந்தால்தான் அவன் மனம் ஆறும் போலிருந்தது.

அந்தச் சமயத்தில் அந்த வழியாக வந்த பிரமுகர், "ஏன் அப்பா! இந்தக் கற்சிலையை ஏன் விட்டெறிகிறாய்? உனக்கு அது என்ன தீங்கு இழைத்து விட்டது!" என்றார்.

"ஐயா! அரை நாள் வேலையை நாசமாக்கிவிட்டதுங்க இந்தச் சனியன்!" என்றான் முத்து.

"எசமான்! புதையல் கிடைக்குங்கிற ஆசையிலே இவன் பிரயாசைப்பட்டானுங்க. ஆனால் இவன் ஆசை நிராசையாயிடுச்சு. அந்தக் கோபத்தையெல்லாம் அதுமேலே காட்டிட்டானுங்க" என்று சிரித்துக் கொண்டே கூறினான் மாரி. முத்து ஏமாந்ததில் அவனுக்குப் பரம திருப்தி போலும்! வந்த பிரமுகர் அந்தக் கற்சிலையை உற்று நோக்கினார். அதிலுள்ள உயிரும், பாவமும் அவரைத் திகைக்க வைத்தன.

"அப்பா! உனக்கு நிஜமாகவே புதையல் கிடைத்திருக்கிறது. இது விலை மதிக்க முடியாத பொக்கிஷம்" என்றார் அப் பிரமுகர்.



''அப்படியா, ஐயா! என் மனசிலே அது கல்லுதான்னு நினைச்சுத் தூக்கி எறிந்துட்டேனுங்க. ஐயா! இந்தக் கற்சிலைக்குப் பணம் கிடைக்குமா?'' என்று ஆவலுடன் கேட்டான் முத்து.

''ஓ! பேஷாகக் கிடைக்கும். நம் மன்னர் சித்திரவர்மருக்குப் பழங்காலச் சிற்பம், சிலை, சித்திரம் ஆகியவைகளில் அபார மோகம். அதற்காகவே தம்முடைய அரண்மனையில் காட்சிச்சாலை வைத்திருக்கிறார். இந்தச் சிலையைக் கொடுத்தால் உனக்கு வேண்டிய பொருள் தருவார்!'' என்றார்.

* * *

தர்பார் மண்டபத்தில் மந்திரிப் பிரதானிகள் புடைசூழ வீற்றிருந்தார், சித்திரவர்மர். முத்து தூக்க முடியாமல் சிலையைத் தூக்கி வந்து அரசர் முன்னிலையில் வைத்து விட்டு வணங்கினான்.

''ஆகா! அற்புதம்! இந்தச் சிலை ஏது?'' என்று வியப்புடன் வினவினார் மன்னர்.



''அரசே! என் வயலைத் தோண்டினேனுங்க. இந்தப் பொருள் கிடைச்சதுங்க. அதை உங்களுக்கே கொடுக்கணும்னு கொண்டு வந்தேனுங்க'' என்று பணிவுடன் பகர்ந்தான் முத்து.

மன்னர் சித்திரவர்மர் ஆஸ்தான சிற்பியை விளித்து, "இந்தச் சிலை பழங்காலத்தைச் சேர்ந்ததுதானா? இந்தச் சிதைந்த சிலை அரண்மனைப் பொருட்காட்சியில் வைக்கத் தகுந்ததுதானா என்று பாருங்கள்!" என்று கூறினார்.

"அரசர்க்கரசே! இந்தச் சிலை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்தையது. நம் பொருட்காட்சியில் இருக்கத் தகுதியானதுதான்" என்றார்.

"சிதைந்த சிலையானாலும் கண்கள் அபாரமாகப் பேசுகின்றன."

"பழம் பண்பாட்டின் சக்தியனைத்தும் திரட்டி அழகிய உருவமாகச் சிலை செய்திருக்கிறான் சிற்பி."

தர்பார் மண்டபத்திலே சிலையைப் பாராட்டிப் பல குரல்கள் எழுந்தன.

மன்னர் சித்திரவர்மர் சிலையின் அழகில் மயங்கி, "மந்திரி! இதை உடனே நம் பொருட்காட்சிச்சாலையில் கொண்டுபோய் வையுங்கள். இதை எடுத்து வந்த குடியானவனுக்கு ஆயிரம் பொன் பரிசாக அளியுங்கள்" என்று கட்டளை பிறப்பித்தார்.

முத்து சிதைந்த சிலைக்குப் பரிசாக ஆயிரம் பொன் மன்னரிடமிருந்து பெற்று, மகிழ்ச்சியுடன் சென்றான்.

சித்திர வர்மரின் கலைக்கூடத்திலுள்ள சிலையைப் பார்க்க நாட்டிலுள்ள மக்கள் அனைவரும் திரளாக வந்தனர். அயல்நாடுகளிலிருந்துகூட அந்த அற்புதச் சிலையின் அழகைக் காண அநேகர் வந்தார்கள்.

அன்று சித்திர வர்மரின் பொருட்காட்சிச் சாலைக்குத் தாடியும் மீசையும் அடர்ந்துபோக வளர்ந்து அலங்கோலத்துடன் பைத்தியக்காரனைப் போல் ஒருவன் வந்தான். அவன் சிதைந்த சிலையின் அருகில் வந்ததும் அதை வெறிக்க வெறிக்கப் பார்த்தான். சிலையின் அழகை ரசித்துக் கொண்டிருந்தவர்களுக்கு அந்தப் பைத்தியக்காரனின் செய்கை அருவருப்பை அளித்தது. "தள்ளிப் போ! உனக்கு இந்தச் சிலையின் அருமை தெரிந்ததுபோல் நிற்கிறாயே? பைத்தியக்காரனுக்குக் கலைக் கூடத்தில் என்ன வேலை?" என்று கூறினார்கள்.

"என்னுடைய சிலையையே எனக்குப் பார்க்க அநுமதி கிடையாதா? பல இரவுகள், பல பகல்கள் கண் விழித்துச் செதுக்கியதற்கு இந்தத் தண்டனை வேண்டியதுதான். இந்தப் பைத்தியக்காரப் பட்டமும் கிடைக்க வேண்டியதுதான்" என்று கண்கள் கலங்கக் கூறினான் அந்தப் பைத்தியக்காரன்.

"நீயா இந்தச் சிலையைச் செதுக்கினாய்? நம்பக் கூடியதா? பைத்தியம் முற்றிப் போயிருக்கிறது!" என்று கேலி செய்தான் கலைக்கூடத் தலைவன்.

"இதோ பாருங்கள்! நான் செதுக்கிய சிலையென்பதை நிரூபிக்கிறேன்" என்று கூறித் தன் அழுக்குத் துணியிலிருந்து இரு கைகளையெடுத்துச் சிலையில் பொருத்தினான். சிதைந்த சிலை பூரண உருவம் பெற்றுத் திகழ்ந்தது; அங்கிருந்தவர்களைத் திகைப்பில் ஆழ்த்தியது.

இதற்குள் சிதைந்த சிலையை உருவாக்கிய சிற்பி கலைக்கூடத்துக்கு வந்திருக்கிறான் என்ற செய்தி அரசர் சித்திர வர்மருக்கு எட்டியது. அரசர் கலைக்கூடத்துக்கு வந்து சேர்ந்தார் அவரிடம் பைத்தியக்காரனைப் போலுள்ள ஒருவன், "இந்தச் சிலையைப் பதினைந்து வருஷங்களுக்கு முன் நான் தான் உருவாக்கினேன். என்னுடைய கலைத்திறமைக்கு நாட்டில் ஆதரவு இல்லை. ஆகையால் வெறுப்புற்று இச் சிலையின் கைகளைச் சிதைத்து வயல் வரப்பில் விட்டெறிந்து விட்டு, நாட்டை விட்டே சென்று விட்டேன். இன்று என்னுடைய சிலைக்குப் பெயரும் புகழும் ஏற்பட்டிருப்பது எனக்கு வியப்பாயிருக்கிறது" என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

"இந்தச் சிலை உன்னுடையதுதான் என்று தெரிந்து கொண்டேன். உன்னுடைய கலைக்குப் பரிசு கொடுக்க வேண்டியதுதான்" என்று கூறித் தமது மெய்காப்பாளனை நோக்கி, "இவனுக்கு ஆயிரம் பொன் எடுத்து வந்து கொடுங்கள்" என்று கூறினார் சித்திரவர்மர்.

பைத்தியக்காரனைப் போலிருந்த சிற்பிக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. தன் சிற்பத் திறமைக்குப் பரிசு கிடைத்ததில் அவன் ஆனந்தம் அடைந்தான்.

மெய்காப்பாளன் பொன்னைக் கொண்டு வந்து அரசரின் கையில் கொடுத்தான். "இந்தா! உன் சிற்பத் திறமைக்குப் பரிசு!" என்று ஆயிரம் பொன்னைக் கையில் கொடுத்தார் சித்திரவர்மர்.

"தங்கள் அன்புக்கு என் நன்றி!" என்று கூறிப் பொன்னை வாங்கிக் கொண்டான் அந்தச் சிலையை வடித்த சிற்பி.

"காவலர்களே! இந்தச் சிற்பியைக் கைது செய்யுங்கள். இந்த உயிருள்ள சிலையைப் படைத்த சிற்பி அதைக் கொடூரமாகச் சிதைத்து நம்மை வேதனைப்படுத்தினான். இதைப் பழங்காலச் சிலை என்று நம்மை ஏமாறும்படி செய்தான். அவன் சிலையைப் படைத்ததற்கு ஆயிரம் பவுன் பரிசளித்தோம். சிலையைச் சிதைத்ததற்காகச் சிறைத் தண்டனை அளிக்கிறேன்" என்று கூறினார் சித்திரவர்மர்.

காவலர்கள் அரசரின் ஆணையைச் சிரமேற்கொண்டு நிறைவேற்றச் சிதைந்த சிலையின் சிற்பியைக் கைது செய்து சிறைக்கூடத்துக்கு அழைத்துச் சென்றனர். சிலைக்குப் பரிசாகக் கிடைத்த பொன் நாணயங்கள் அவனைப் பார்த்து நகைத்தன!

# பொங்கிவரும் பெருநிலவு



கி. ராஜேந்திரன்

### இரண்டாம் அத்தியாயம்

## நினைவும் நடிப்பும்

கதிர்வேலன் அங்கேயே நின்று சுற்றுமுற்றும் பார்த்தான். யாரையோ அவன் எதிர்பார்ப்பதுபோல் தோன்றியது.

இவ்வளவு நேரம் நடந்ததையெல்லாம் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த டைரக்டர் சுகுமாரன் இப்போது ''கதிர்வேலு!'' என்று அழைத்துக் கொண்டே புலிக்குகையின் மறைவிலிருந்து வெளியே வந்தார்.

''மாமா!'' என்று கூவிக் கொண்டே வந்து அவரை இறுக அணைத்துக் கொண்டான் கதிர்வேலன். தன்னைச் சுற்றியிருந்த இரும்பு போன்ற அவன் கரங்களைப் பற்றி அகற்றினார் சுகுமாரன். ''அப்பா! நீ அன்போடு அணைத்தால் கூட வலிக்கிறதடா! பலம் பொருந்திய இந்தக் கைகளைப் போய்ப் பிடித்தார்களே, மடையர்கள்!''

இடிஇடியென்று சிரித்தான் கதிர்வேலன். ''அதற்குத் தகுந்த சன்மானமும் அவர்கள் பெற்றுக் கொண்டார்களே, மாமா! ஒரு தள்ளுத் தள்ளியதுமே கீழே விழுந்து உருண்டார்களே!''

அவன் வாயைப் பொத்தினார், சுகுமாரன். ''எதற்கு இப்படி உரக்கச் சிரிக்கிறாய்? இரைந்து பேசுகிறாய்?''

''ஏன் மாமா? அதிகாரிகளின் நடமாட்டம் அதிகமாக இருக்கிறதோ?''

''இல்லை, இல்லை! எனக்குத் தெரிந்த வரையில் அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை. எதற்கும் ஜாக்கிரதையாக இருப்பது நல்லதல்லவா? உன் கைகளைப் பிடித்தபோது ஒரு வேளை அவர்கள் சுங்க அதிகாரிகள்தானோ என்று முதலில் பயந்துதான் போனேன்.''

''அப்படி நினைத்துமா என் உதவிக்கு வராமல் இருந்தீர்கள்? நல்ல பயந்தாங்கொள்ளி மாமா நீங்கள்!''

''அப்படியில்லையடா! ஒன்று கிடக்க ஒன்று நடந்து போய் நாளைக்கு என் பெயரும் பத்திரிகைகளில் அடிபட்டால் என் மதிப்பு என்ன ஆவது? மேலும் உனக்குத்தான் உதவியே தேவையிருக்கவில்லையே? தனியாகவே அவர்களைச் சமாளித்து விட்டாயே?''

''சிமைத் தண்ணீரைக் கள்ளத்தனமாக வாங்கிக்கொண்டு போக வந்தவன் திமிராகப் பேசி நடந்து கொண்டால் என்னிடமா பலிக்கும்?''

''கிடக்கிறான்கள் விட்டுத் தள்ளு! கார் கொண்டு வந்திருக்கிறேன். சென்னைக்குப் போகலாம் வா'' என்று அழைத்தார் சுகுமாரன்.

''வேண்டாம், மாமா! நீங்கள் போங்கள். இரவு இங்கேயே படுத்திருந்து விட்டு நாளைக் காலையில் நான் மறுபடியும் புறப்படுகிறேன்.''

"அப்படிச் சொன்னால் நான் விடுவதாக இல்லே. இன்று எப்படியாவது உன்னே அழைத்துக் கொண்டு போவது என்ற தீர்மானத்துடன் வந்திருக்கிறேன். அதோடு காரில் உனக்காக ஒரு அதிசயம் காத்திருக்கிறது!"

"அது என்ன மாமா, நான் பார்த்தறியாத அதிசயம்?"

"பார்த்தறியாத அதிசயத்தைத் தான் பார்க்கப் போகிருய், வா!" என்று சொல்லிக் கொண்டே நடந்தார் சுகுமாரன். ஆவலால் உந்தப்பட்டு அவர் பின்னே நடந்தான் கதிர்வேலன்.

இருளில் உட்கார்ந்திருந்த மல்லிகாவுக்குப் பயமாகவே இருந்தது. சிறுமி சரஸ்வதிகூடத் தூங்கிப்போய்விட்டாள். 'இந்த மனிதர் போனாலும் போனர். திரும்பவே மாட்டார் போலிருக்கிறதே! அர்த்தராத்திரியில் யாரை அழைத்துக் கொண்டு வரப்போகிறுர்?' என்று எண்ணினுள். நிர்மானுஷ்யமான அந்த இடமும், இருளும் சேர்ந்து அவள் மனத்தைக் கலங்க அடித்தன. 'ஏதோ ஒரு சிக்கலில் சுகுமாரன் மாட்டிக் கொண்டிருக்கிறுர். நடக்கக் கூடாத காரியம் ஏதோ நடந்து கொண்டிருக்கிறது. அதன் மத்தியில் நாமும் இருக்கிறேம்' என்று அவளுக்குத் தோன்றிக் கொண்டே யிருந்தது.

அதற்கேற்றுற்போல் சற்று நேரத்தில் அவள் கேட்ட அதிகாரக் குரலும் சண்டையிடும் ஓசையும் 'திபுதிபு' என்று யாரோ ஓடும் சத்தமும் அவளுக்குப் பீதியையே உண்டாக்கி விட்டன.

இப்படி அவள் யோசித்துக் கொண்டிருக்கையில் சுகுமாரனும் கதிர்வேலனும் காரை நெருங்கினர்கள். "மல்லிகா! இவர்தான் கதிர்வேலன். நம்முடன் சென்னேக்கு வருகிறுர்" என்ற சுகுமாரனின் குரலேக் கேட்டபிறகுதான் தைரியம் அடைந்தாள் மல்லிகா. காரை விட்டுக் கீழே இறங்க ஆரம்பித்தாள் அவள்.

கதவைத் திறந்ததுமே, காரின் உள்ளே பொருத்தப்பட்டிருந்த விளக்கு 'பளீர்' என்று ஒளிபரப்பி மல்லிகாவின் எழில் உருவத்தைக் கதிர்வேலனுக்கு எடுத்துக் காட்டியது.

அவளைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டே தனது முகவாயை வலது கைவிரல்களால் ஒரு முறை அழுத்தித் தடவி விட்டுக் கொண்டான் கதிர்வேலன்.

தனது அழகைத்தான் அப்படிக் கண்களால் பரிசோதித்து மனத்துக்குள் எடை போட்டுப் பார்க்கிறுன் என்று சந்தேகத்துக்கு இடமில்லாமல் புரிந்து கொண்டாள் மல்லிகா.



எடைக்கல்லாக அவன் எதை அல்லது யாரை உபயோகித்தான் என்பது அவளுக்குத் தெரியவில்லே. ஆனல் ஒன்றுமட்டும் நிச்சயமாக அவளுக்குத் தெரிந்தது. எழிலே எடை போடும் தராசில் தான் நிற்கும் தட்டுத்தான் கீழே இறங்க வேண்டும். எடைக் கல் இருக்கும் தட்டுத்தான் மேலே போக வேண்டும்.

தன் நெற்றியில் நெளிந்த கூந்தலேப் புறக் கையால் தள்ளிக் கொண்டே கழுத்தை ஒரு சொடுக்குடன் வேறு பக்கமாகத் திரும்பினுள் மல்லிகா.




அடுத்தகணம் தலையைச் சிறிது சாய்த்துக் கடைக்கண்ணால் அவனைப் பார்த்துப் புன்னகை புரிந்தாள். "எவ்வளவு நேரமாக உங்களுக்காகக் காத்திருக்கிறேன், தெரியுமா?" என்று கேட்டாள்.

அந்தக் கேள்வியில் இருந்த குழைவும் நெளிவும் கதிர்வேலனை நெகிழச் செய்துவிடும் என்று நினைத்தாள். ஆனால் கதிர்வேலன் மெல்லச் சிரித்தான்.

"காத்திருந்தால் என்ன? உங்கள் திரு உருவத்தைக் காணத் தினந்தோறும் ஆயிரக் கணக்கான மக்கள் தியேட்டர் வாசல்களில் 'க்யூ' வரிசையில் நின்று மணிக்கணக்காகக் காத்திருக்கிறார்களே? நீங்களும்தான் சிறிது நேரம் காத்திருங்களேன்."

மல்லிகாவுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. கோபத்துக்கு இடம் கொடுத்து விட்டால், சென்னைக்கு வரும்படி இவரை அழைக்க வேண்டும் என்ற சுகுமாரனின் வேண்டுகோள் நிறைவேறாது போய்விடும் என்று எண்ணி ஒருகணம் பயந்தாள் அவள்.

கீழ் உதட்டைப் பற்களால் அழுத்திக் கடித்துக் கொண்டு கோபத்தைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டாள்.

"நேரம் ஆகிறதே, சென்னைக்குத் திரும்பலாமா?" என்று சுகுமாரனைப் பார்த்துக் கேட்டாள். பின்னர் கதிர்வேலன் பக்கமாகத் திரும்பி, "நீங்களும் வருகிறீர்கள் அல்லவா?" என்றாள். கேள்வியாகக் கேட்ட போதிலும் அழைப்பாகவே தொனித்தன அந்த வார்த்தைகள்.

"கண்டிப்பாக வருகிறேன். நீங்கள் பின்னால் சௌகரியமாக உட்கார்ந்து வாருங்கள் மாமா! நான் காரை ஓட்டிக் கொண்டு வருகிறேன்" என்று சொல்லிக் கொண்டே மல்லிகாவுக்கு அருகே டிரைவரின் ஆசனத்தில் அமர்ந்து கொண்டு காரைச் செலுத்த ஆரம்பித்தான் கதிர்வேலன்.

சென்னையை நோக்கிக் கார் விரைந்தது. கதிர்வேலனை வென்று விட்டோம் என்ற எண்ணத்தில் பெருமிதத்துடன் நிமிர்ந்து உட்கார்ந்திருந்தாள் மல்லிகா. ஆனால் அவளுடைய அந்தப் பெருமிதம் அதிக நேரம் நீடித்து நிற்கவில்லை.

"மாமா! ஏதோ அதிசயம் காரில் இருக்கிறது என்றீர்களே! அது என்ன?" என்று கதிர்வேலன் கேட்டான்.



"இதோ உன் அருகிலேயே உட்கார்ந்திருக்கிறாளே, மல்லிகா! இவள்தான் நான் குறிப்பிட்ட அதிசயம்."

"பூ! இவ்வளவு தானா? ஏதோ நான் இதுவரையில் பார்த்தறியாத அதிசயத்தைப் பார்க்கப் போவதாகச் சொன்னீர்களே? இவள் நடித்த திரைப் படத்தைத்தான் நான் பார்த்து விட்டேனே."

"சினிமாவில் படமாகப் பார்ப்பதற்கும் நேரில் இவளைப் பார்ப்பதற்கும் வித்தியாசம் இல்லையா?"

"ஓ! நிறைய வித்தியாசம் இருக்கிறது!" என்றான் கதிர்வேலன்.

"என்ன வித்தியாசம்?" என்று ஆவலுடன் கேட்டாள் மல்லிகா.

"சினிமாவில் நீ இப்போதிருப்பதைவிட இன்னும் அழகாக இருந்தாய்."

"அப்பா! என்னை அவமானப்படுத்தத்தான் இங்கு அழைத்துவந்தீர்களா?" என்று அழமாட்டாத குறையாகக் கேட்டாள் மல்லிகா. ஆத்திரமும் துக்கமும் அவள் கன்னங்களைத் துடிக்கச் செய்தன.

"கதிர்வேலு! குழந்தை மனத்தைக் கலங்க அடிக்காதே!"

கதிர்வேலன் தன் தவற்றை உணர்ந்தான். ஆனால் ஒப்புக் கொள்ளவில்லை. பேச்சை மாற்ற விரும்பி, "அப்பாவாவது? குழந்தையாவது? இது என்ன திடீர் உறவு?" என்று கேட்டான்.

"திடீர் உறவு ஒன்றும் இல்லை. இவளைக் கண்டு பிடித்துத் திரை உலகில் புகுத்தியது முதல் என்னைத் தன் தகப்பனாராகவே தான் பாவித்து வருகிறாள்" என்றார் சுகுமாரன்.

இப்படி ஏதேதோ பேசிக் கொண்டே சென்னையை அடைந்தார்கள். அவர்கள் பேச்சில் மல்லிகா மட்டும் கலந்து கொள்ளவில்லை. கதிர்வேலனின் பரிகாசத்தினால் உண்டான கோபமும் அவமானமும் அவளைப் பேசக்கூட முடியாமல் செய்து விட்டன.

அவளுடைய வீட்டின் வாசலில் கார் நின்றதும், "சிறிது நேரம் உள்ளே வந்து விட்டுப் போங்களேன்" என்று மரியாதைக்காக அழைத்தாள்.

"இல்லை, மல்லிகா! கதிர்வேலனுடன் முக்கியமாகப் பேச வேண்டிய விஷயங்கள் நிறைய இருக்கின்றன. நாளை இந்திப் படத்தின் ஷூட்டிங் வேறு இருக்கிறது. ஞாபகம் இருக்கட்டும். இரவு நன்றாகத் தூங்கி ஓய்வு எடுத்துக் கொள்" என்றார் சுகுமாரன்.

ஆனால் அதற்குள் கதிர்வேலன் கீழே இறங்கிவிட்டான். பின்னால் தூங்கிக் கொண்டிருந்த சரஸ்வதியைத் தூக்கித் தோளில் சாத்திக் கொண்டு மல்லிகாவுடன் வீட்டை நெருங்கினான். காரிலேயே உட்கார்ந்திருந்தசுகுமாரன் தமக்குள்ளே சிரித்துக் கொண்டார்.

சரஸ்வதியை வாசல் அறையில் இருந்த சோபாவில் படுக்க வைத்து விட்டுத் திரும்பினான் கதிர்வேலன். அருகே மல்லிகா நின்று கொண்டிருந்தாள்.

பிரகாசமான மின்சார விளக்கின் ஒளியில் இப்போது ஒருவரை யொருவர் மறுபடியும் பார்த்துக் கொண்டார்கள். மிகப் பெரிய போட்டி ஒன்று அவர்களிடையே அப்போது ஏற்பட்டது. கதிர்வேலனின் கம்பீரமான தோற்றமும் களை பொருந்திய முகமும் தன்னை அடிமை

யாக்க முயல்வதை மல்லிகா உணர்ந்தான். அதற்கு இடம் கொடுக்க அவள் விரும்பவில்லை. அதே சமயத்தில் வெண்பட்டின் சந்தன நிறத்தோடும் மென்மையோடும் இயற்கையின் விளையாட்டில் இளமையின் பூரிப்புடன் விளங்கிய அவளிடம் தன் மனம் கவர்ந்து இழுக்கப்படுவதை உணர்ந்தான் கதிர்வேலன். பெருமுயற்சி செய்து அதிலிருந்து விடுவித்துக் கொள்ள முயன்றான். இருவருமே தோல்வியை ஒப்புக் கொள்ள விரும்பவில்லை. "வெற்றி யாருக்கு?" என்று அவர்களுடைய கண்கள் ஒன்றையொன்று கேட்டுக் கொண்டன!

எவ்வளவு நேரம் இப்படி நின்றார்களோ தெரியாது. வாசலில் சுகுமாரன் காரின் ஹாரனை அழுத்தி ஒலி எழுப்பிய போதுதான் திடுக்கிட்டுச் சுயஉணர்வு பெற்றான் கதிர்வேலன்.

தன் தலையை ஒரு முறை உலுக்கி விட்டுக் கொண்டு சடாரென்று திரும்பி வேகமாக நடந்து சென்று காரில் ஏறிக்கொண்டான்.



"என்ன அப்பனே! அங்கேயே ஐக்கியமாகி விட்டாயே?" என்றார் சுகுமாரன், சிரித்தபடியே. தாம் போட்ட திட்டங்கள் நன்கு நிறைவேறுவதற்கான அறிகுறிகள் தோன்றியது அவருக்குத் திருப்தியை அளித்தன.

பதில் சொல்லாமல் மௌனமாகச் சிந்தனையில் ஆழ்ந்தான் கதிர்வேலன்.

"கதிர்வேலு! நீ அவளிடம் அப்படியெல்லாம் பேசியிருக்கக் கூடாது. பெண் பிள்ளைகளைக் கேலி செய்வதில் நகைச்சுவையில்லை. பாவம்! மல்லிகா ரொம்பத் துக்கப்படுவாள். இனியாவது அவளிடம் அன்புடன் நடந்துகொள்."

"தவறுதான்" என்று இப்போது அவரிடம் தனிமையில் ஒப்புக் கொண்டான் கதிர்வேலன். பின்னர், "இந்திப் படம் வேறு எடுக்கப் போகிறீர்களா, மாமா?" என்று கேட்டான்.

"தமிழில் இப்போது வெளியான படத்தையே ஹிந்தியில் எடுக்கிறேன். 'டப்பிங்' இல்லை. மறுபடியும் முழுவதையும் எடுக்கிறேன். மல்லிகாகூட ரொம்பச் சிரமப்பட்டு இந்தி உச்சரிப்பு மாறாமல் பேசக் கற்றுக் கொண்டு வருகிறாள்."

"அது கிடக்கட்டும் மாமா! என்னை எதற்காக இங்கு வற்புறுத்தி அழைத்து வந்தீர்கள்? அப்போதிலிருந்து யோசனை செய்கிறேன். புரியவேயில்லை."

"அடுத்த மாதம் முதல் வாரத்தில் இலங்கைத் தீவுக்குப் போகிறோம். அங்கே இந்தத் தமிழ்ப்படம் வெளியாகிறது. அங்குள்ள நமது விநியோகஸ்தர் மல்லிகா முதல் நாளன்று மேடையின் மீது தோன்றினால் நன்றாக இருக்கும் என்று வற்புறுத்தி எழுதியிருக்கிறார்."

"ஓஹோ!" என்றான் கதிர்வேலன். தன்னைச் சுகுமாரன் அழைத்து வந்ததன் காரணம் அவனுக்கு ஒருவாறு புரிந்தது.

"அப்படியே உன்னையும் அங்கு அழைத்துப் போய்க் கொஞ்சம் பணம் பண்ணலாம் என்று எண்ணுகிறேன்."

பணம் என்றதுமே கதிர்வேலனுக்கு மஹாபலிபுரத்தில் தான் பெற்றுக் கொண்ட நோட்டுக் கட்டின் ஞாபகம் வந்தது. கால்சட்டைப் பையில் கையை விட்டு அந்தக் கட்டை எடுத்தான். "இந்த மனிதர்களை நம்பவே முடியாது. ஒரு புது நோட்டுக்கட்டு என்று சொல்லிக் கொடுப்பார்கள். எண்ணிப் பார்த்தால் குறையும். நடுவிலிருந்து சில நோட்டுக்களை உருவி எடுத்து விட்டு முன் போலவே முழு நோட்டுக் கட்டாகத் திருப்பிக் கொடுப்பார்கள்" என்று சொல்லிக் கொண்டே அதை எண்ண ஆரம்பித்தான் கதிர்வேலன்.

முதல் நோட்டைத் திருப்பியதுமே தேள் கொட்டியதைப் போல் துள்ளிக் குதித்தான். "அயோக்கியர்கள்! என்னை ஏமாற்றி விட்டார்கள்" என்று கத்தினான்.

"என்ன? என்ன? என்ன நடந்தது?" என்று கேட்டார் சுகுமாரன்.

"மேலே இருப்பதும் அடியில் இருப்பதும் மட்டும்தான் ஐந்து ரூபாய் நோட்டுகள். இடையே இருப்பவை எல்லாம் வெறும் காகிதம். ஐந்து ரூபாய் நோட்டின் அளவுக்கே வெட்டப்பட்ட தொண்ணூற்று எட்டு காகிதங்களைக் கர்ம சிரத்தையாகக் கொடுத்திருக்கிறான். இருட்டில் தெரியவில்லை. ஏமாந்துபோனேன்."

விழுந்துவிழுந்து சிரித்தார் சுகுமாரன்.

"மாமா என் வயிறு பற்றி எரிகிறது—நீங்கள் சிரிக்கிறீர்கள்!"

"இல்லை, அப்பனே! நீ மல்லிகாவை ஒரேயடியாகக் கேலி செய்து கொண்டு வந்தாயே இப்போது பார்! இதுமட்டும் அவளுக்குத் தெரிந்தால் உன்னைச் சும்மா விடமாட்டாள்!"

"நான் மட்டும் அந்தத் தடியன்களைச் சும்மாவா விடப் போகிறேன்? மறுபடி

யும் அவர்கள் என்னிடம் வராமலா போய் விடுவார்கள்?''

''நீ இருக்கும் திசையைக்கூடத் திரும்பிப் பார்க்க மாட்டார்கள்! கிடக்கிறார்கள், விட்டுத் தள்ளு. ஐந்நூறு ரூபாய்க்குப் போய் அழாதே. இலங்கைக்கு என்னுடன் வா. அதைப்போல் பத்து மடங்கு எடுக்கலாம்.''

''எப்படி?''

''திரைப்படம் வெளியிடும் நோக்கத்தோடு போவோம். அதை முடித்துக் கொண்டு திரும்பும்போது சில விலையுயர்ந்த வைரக் கற்களைக் கொண்டு வருவோம். பிரபல திரைப்பட நட்சத்திரம் மல்லிகாவைச் சுங்க அதிகாரிகள் யாரும் சந்தேகிக்கவே மாட்டார்கள்!''

''நான் பிடிபட்டு விட்டால் பரவாயில்லை. ஆனால், மாமா! எக்கச்சக்கமாக நீங்கள் மாட்டிக் கொண்டால்...''

''மாட்டிக் கொள்ளாமல் இருப்பதற்காகத்தானே உன்னையும் மல்லிகாவையும் அழைத்துக்கொண்டு போகிறேன். ஆனால் மல்லிகாவுக்கு இதெல்லாம் ஒன்றும் தெரியாது. நீ ஏதாவது உளறி வைக்காதே! பயந்து போவாள்!''

புரிந்து கொண்டதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டினான் கதிர்வேலன்.

மறுநாள் ஷூட்டிங்குக்கு மல்லிகாவை அழைத்துப் போக வந்தபோது கதிர்வேலனைக் காரிலேயே இருக்கச் சொல்லிவிட்டு, சுகுமாரன்மட்டும் இறங்கிச் சென்றார். இலங்கைப் பிரயாணத்தைப் பற்றி மல்லிகாவிடம் சொன்னார். அவள் அதை வரவேற்கவில்லை. ''இலங்கைக்கு என்னால் வரமுடியாது. அதுவும் உங்கள் அருமைக் கதிர்வேலனுடன் நிச்சயமாக வரமுடியாது!'' என்றாள்.

''அவன் வேடிக்கையாகப் பேசுவதைக் கேட்டுத் தவறாக எடுத்துக் கொண்டு விட்டாய். உண்மையில் கதிர்வேலன் ரொம்ப நல்லவன். முன்னொரு சமயம் 'ஒரு நல்ல பையனாகப்பார்த்து உனக்குக் கல்யாணம் செய்து வைக்கிறேன்' என்று சொன்னேனே, ஞாபகம் இருக்கிறதா? நான் குறிப்பிட்ட அந்த நல்ல பையன் கதிர்வேலன்தான்'' என்றார் சுகுமாரன்.

''என்ன சொன்னீர்கள்?'' என்று கேட்டுக்கொண்டே எழுந்தாள் மல்லிகா. எழுந்த வேகத்தில் அவள் உட்கார்ந்திருந்த நாற்காலி பின்னால் நகர்ந்து கீழே விழுந்தது!

''நல்ல பையன், உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறவன் என்று சொன்னேன். அதற்கு ஏன் இவ்வளவு பதற்றமடைகிறாய்?''

''அவரைப் பார்த்தால் நல்லவராகவும் தோன்றவில்லை, பையனாகவும் தோன்றவில்லை!'' என்றாள் மல்லிகா.

''எனக்குத்தான் அவன் பையனாகத் தோன்றுகிறான். உனக்கு அப்படித் தோன்ற மாட்டான் என்றும் உன் கண்களுக்குப் பரந்த மார்புடனும் நல்ல உயரத்துடனும் வலிவு கொண்ட திரண்ட தோள்களுடனும்கூடிய அழகிய வாலிபனாகத் தோற்றமளிப்பான் என்றும் எனக்குத் தெரியும்!''

''அந்த அழகைக் கண்டு எல்லோரும் மயங்கி விழுந்து விடுவார்கள் என்று அவருக்கு எண்ணமோ? அந்த மமதையினால்தான் மற்றவர்கள் அழகைப் பற்றி அவர் கேலி செய்கிறாரோ?''

''அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை, மல்லிகா! ஏதோ விளையாட்டாகப் பேசியது உன் மனத்தைப் புண்படுத்தி விட்டது. தான் செய்தது தவறுதான் என்று பிறகு என்னிடம் ஒப்புக்கொண்டு விட்டான். யோசித்துப் பார், எத்தனை நாட்கள் இப்படி ஆண் துணை இல்லாமல் இந்தப் பெரிய வீட்டில் தன்னந்தனியாக வசிக்கப் போகிறாய்?''

''என்னைக் காப்பாற்றிக் கொள்ள எனக்குத் தெரியும். தங்கை சரஸ்வதி இருக்கிறாள். தகப்பனாரைப்போல்நீங்கள் இருக்கிறீர்கள். எனக்கு என்ன குறைவு! கல்யாணத்தைப் பற்றித் தயவுசெய்து மறுபடியும் என்னிடம் பேசாதீர்கள்!''

''இன்னும் சில நாட்கள் அவனுடன் பழகினால் உன் மனம் மாறிவிடும். உன்னை வற்புறுத்த நான் விரும்பவில்லை. ஆனால் அதற்காக இலங்கைக்கு வருவதற்கு மட்டும் தடை சொல்லாதே'' என்று கெஞ்சும் குரலில் மல்லிகாவைக் கேட்டுக் கொண்டார் சுகுமாரன்.



## மூன்றும் அத்தியாயம்
# வேலியும் பயிரும்

டாக்டர் ராமலிங்கம் இறந்துபோய் ஒரு வருஷத்துக்கு மேல் ஆகிவிட்டது. காலத்தின் ஓட்டத்தில் அவரைச் சேர்ந்தவர்களின் மனத் துயரம் சிறிது சிறிதாகக் குறைந்து கொண்டு வந்தது.

ராமலிங்கம் இறந்தபிறகு, நடராஜனுக்குத் தன்மீது ஏற்கனவே ஏற்பட்டிருந்த வெறுப்பு அதிகமாகும் என்று எதிர்பார்த்தான் மணிசேகரன். 'இனி இந்த வீட்டில் நீ அடி எடுத்து வைக்கக்

---

## ராம்தீர்த் யோகாஸ்ரமத்தின் சில செயல்கள்




## ராம்தீர்த் பிராமி ஆயில் – ஸ்பெஷல் நெ. 1

கூந்தல் தைலம், மூளைக்கு ஔஷதம், கண்களுக்கும் ஞாபகசக்திக்கும், ஆழ்ந்த நித்திரைக்கும், உடல் வலியைப் போக்குவதிலும், ராம்தீர்த் பிராமி ஆயில் யாவருக்கும், எக்காலத்தும் உகந்தது. கிடைத்தற்கரிய பலவித மூலிகைகளினால் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட ராம்தீர்த் பிராமி ஆயில் இப்பொழுது எல்லா இடங்களிலும் புதிய பாட்டிலில் கிடைக்கிறது.

பெரிய பாட்டில் விலை ரூ. 4/-; சிறியது ரூ. 2/-

எங்கும் கிடைக்கும்

**SHRI RAMTIRTH YOGASHRAM, DADAR, BOMBAY – 14**

### யோகாசன வரைவு படம்

ஆரோக்யமாகவும், திடமாகவும் திகழ யோகாசனங்களை விவரிக்கும் எமது அழகான ஆசனப் படத்திற்கு எழுதுங்கள். ரூ. 2/- மணியார்டர் அனுப்பி இப்படத்தைப் பெற்றுக் கொள்ளலாம். வீட்டிலிருந்தே ஆசனங்களைச் சுலபமாகப் பழகலாம்.

யோகாசன வகுப்புகள்: காலை 7-30லிருந்து 9-30 மணி வரையிலும், மாலையில் 6-லிருந்து 7-30 மணி வரையிலும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. பிரதி ஞாயிறுதோறும் காலை 10 மணிக்கு யோகாசன சொற்பொழிவுகள் உண்டு.

சென்னை டெப்போ: 4/441, தங்கசாலைத் தெரு, சென்னை-3

கூடாது' என்று கூடச் சொல்வான். அப்படி அவன் விரும்பினால் நாம் போகாமல் இருந்து விட வேண்டியதுதான். நடராஜன்தானே இனிமேல் அந்த வீட்டுக்கு எஜமானன்? அவனுக்குப் பிடிக்காதவர்கள் எப்படி அந்த வீட்டுக்குள் நுழைய முடியும்?

அத்தகைய நிலை ஏற்பட்டால் சென்னையை விட்டே மறுபடியும் கிளம்பிப் போய் விடவேண்டியதுதான் என்று தீர்மானித்திருந்தான் மணி. விமலாவுக்கு மிக அருகிலேயே இருந்துகொண்டு அவளைப் பார்க்காமலும் இருப்பதென்பது நடக்காத காரியம். அவளை விட்டு வெகு தொலைவில் போய் விட வேண்டியதுதான். ஏன் இந்தப் பாரத நாட்டை விட்டே வேறு தேசத்துக்குப் போய் விட்டாலும் தேவலை. இலங்கையிலும் மலேயாவிலும் பர்மாவிலும் பீஜித் தீவுகளிலும் ஏராளமான தமிழர்கள் குடியேறி வசிக்கவில்லையா? அவர்களுள் ஒருவனாக நானும் போய் விடுகிறேன். ஆனால் விமலாவை விட்டுப் பிரிந்து எப்படிப்போவது? ஆயிரமாயிரம் மைல்களுக்கு அப்பால் சென்றுவிட்டாலும் கூட விமலாவைப் பற்றிய நினைவு மறைந்து விடுமா? அவள் வாழ்க்கை என்னவாயிற்று என்று எப்படித்தெரிந்து கொள்வது? கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ள முடியாது. அதை நடராஜன் நிச்சயம் விரும்ப மாட்டான். அந்த முரடனிடம் இவளுக்கு ஏன் இத்தனை அன்பு? ஏன் இந்தப் பரிவு? நடராஜன் எவ்வளவுதான் தன்னைத் துன்பப்படுத்தினாலும் அவனுக்காகவே ஏங்கி, ஏங்கி உருகுகிறாளே ஏன்? காதல் என்பது விசித்திரமானதுதான்!

அவர்களுக்குத் திருமணம் நடந்து விட்டாலாவது நான் நிம்மதியாக இங்கிருந்து போய் விடலாம். ஆனால் அது இப்போதைக்கு எங்கே நடக்கப் போகிறது? குறைந்தது இன்னும் ஒரு வருஷத்துக்காவது கல்யாணப் பேச்சு கிடையாதே. அதற்குள் என்னவெல்லாம் நிகழ்ச்சிகள் நடந்துவிடுமோ, யார் கண்டது? இந்தச் சஞ்சலப் புத்திக்காரனை நம்பி இந்த வெகுளிப் பெண்ணை எப்படித் தனியே விட்டுப் போவது?



இப்படிப் பலவிதமான எண்ணங்களால் அலைக்கப்பட்டு, ஒரு முடிவுக்கும் வரமுடியாமல் தவித்தான் மணி. ஆனால் அவன் முற்றிலும் எதிர்பாராத விதத்தில் நடந்துகொண்டு நடராஜன் அவனை வியப்புக் கடலில் ஆழ்த்தினான்.

ராமலிங்கத்தின் மறைவு மணியிடம் வெறுப்பை வளர்ப்பதற்குப் பதிலாக அன்பைப் பெருக்கியது. ஒரு முக்கோணத்தின் மூன்று மூலைகளில் நின்றுகொண்டிருந்த நடராஜனையும் விமலாவையும் மணியையும் ராமலிங்கம் தமது மறைவால் நடுவே ஒன்று சேரும்படி செய்து விட்டார்.

"நான் கடிந்து பேசியதையெல்லாம் மறந்துவிடு, மணி! அம்மாவுக்கும் விமலாவுக்கும் எனக்கும் கூட ஆறுதல் சொல்லித் தைரியமூட்ட நீ தான் இருக்கிறாய். உன் அறையைக் காலி செய்து விட்டு இந்த வீட்டுக்கே வந்து விடு!" என்று நடராஜன் சொன்னபோது மணி அப்படியே அசந்து போய்விட்டான்!

ஆறுதல் சொல்லத் தயங்கவில்லை அவன். ஆனால் வீட்டோடு வந்துவிடத் தயாராக இல்லை. நடராஜனுடைய திட சித்தத்தில் அவனுக்கு நம்பிக்கை பிறக்கவில்லை. இன்று இப்படிச் சொல்வான், நாளைக்குத் திடீரென்று அர்த்தமில்லாமல் கோபத்துடன் சீறிப் பாய்வான். வேண்டவே வேண்டாம்!

* * *

மொட்டை மாடியில் 'ஜிலு ஜிலு' வென்று வீசிய கடற்காற்றை அனுபவித்துக் கொண்டு நடராஜனும் விமலாவும் உட்கார்ந்திருந்தார்கள்.

"ஒரு வருஷம் ஓடி மறைந்துவிட்டது, அத்தான்! ஆனால் எனக்கென்னவோ நேற்று நடந்தது போலத்தான் இருக்கிறது" என்றாள் விமலா.

நடராஜனுக்கு அந்தப் பயங்கரச் சம்பவம் நினைவுக்கு வந்தது. கோபத்தில் தகப்பனாரைத் தான் பிடித்துத் தள்ளியதும் மார்பைப் பிடித்துக் கொண்டு அவர் கீழே விழுந்த காட்சியும் மனக் கண்முன்னால் நின்றன. 'சொந்தத் தகப்பனாரின் மரணத்துக்குக் காரணமாயிருந்த பாவி அல்லவா நான்!'





ஒரு நீண்ட பெருமூச்சுடன் "விமலா! தயவுசெய்து அதைப் பற்றிப் பேசாதே. என்னுடைய வேதனையை அதிகரிக்காதே" என்றான்.

சிறிது நேரம் அங்கே மௌனம் நிலவியது. "விமலா! கல்யாணம் நின்று போனதில் உனக்கு வருத்தமா?" என்று கேட்டான் நடராஜன்.

"கொஞ்சம் கூட வருத்தம் இல்லை, அத்தான்! கல்யாணம் என்பது உடலைத் தான் ஒன்று சேர்க்க முடியுமே ஒழிய உள்ளத்தைப் பிணைக்க முடியாது. உலகத்தாருக்காகச் செய்யப்படும் சடங்கு தானே அது? மாட்டின் கழுத்தில் கயிற்றைக் கட்டி உரிமை கொண்டாடுவது போல், தாலி கட்டி 'என் மனைவி' என்று கணவன் உரிமை கொண்டாடலாம்!"

"விமலா! இது என்ன அசட்டுப் பேச்சு! இப்படியெல்லாம் பேச எங்கே கற்றுக் கொண்டாய்?" என்று கேட்டுக் கொண்டே பொன்னம்மாள் படியேறி வந்தாள். அவள் பின்னாலேயே மணி சேகரனும் வந்தான்.

"விமலா ஒன்றும் தவறாகச் சொல்லவில்லை அம்மா! 'உள்ளங்கள் இணைந்த பிறகு திருமணச் சடங்கைப்பற்றி என்ன கவலை?' என்று கேட்கிறாள். நியாயமான கேள்விதானே?" என்று சமாதானம் கூறினான் நடராஜன்.

"ரொம்ப நியாயத்தைக் கண்டு விட்டாயாக்கும். மறுபடியும் கல்யாணத்துக்கு நாள் பார்க்க வேண்டும் என்று இப்போதுதான் மணியிடம் சொல்லிக் கொண்டிருக்கிறேன். இங்கே என்னடா வென்றால் இருவரும் கல்யாணம் எதற்கு என்று கேட்டுக் கொண்டு கூத்தடிக்கிறீர்கள்."

"ஒரு வருஷத்துக்கு முன்னாலும் கூட ஜாதகப் பொருத்தம் பார்த்து நல்ல நாள்தான் நிச்சயம் செய்தாய். என்ன நடந்தது? கல்யாணமே நின்றுவிட்டது."

"அதற்காகக் கல்யாணமே வேண்டாம் என்பதா?"

"நான் பார்ப்பதிலும் சடங்குகளிலும் அர்த்தமில்லை என்கிறேன். கணவன் மனைவியிடையே உள்ளப் பிணைப்பு ஏற்பட வேண்டும். தாலி கட்டுவதால் மட்டும் அந்தப் பிணைப்பு ஏற்படாது."

டொன்னம்மாளுக்கு அதெல்லாம் ஒன்றும் புரியவில்லை. "மணி! இவர்கள் என்ன இப்படித் தத்துப் பித்தென்று உளறிக் கொண்டிருக்கிறார்கள்? நீதான் புத்தி சொல்ல வேண்டும்" என்றாள்.

"மாமி! நடராஜன் கல்யாணம் வேண்டாம் என்று சொல்லவில்லை. கவலைப்படாதீர்கள். புருஷன் மனைவிக்கு ஒருவரை யொருவர் பிடித்திருக்க வேண்டும் என்கிறான், அவ்வளவுதான். விமலா

வுக்கும் நடராஜனுக்கும்தான் ஒருவரையொருவர் குழந்தைகளாக இருக்கும் போதே பிடித்துவிட்டதே. அப்போதே அப்பா அம்மா விளையாட்டு விளையாடியவர்கள்தானே? கல்யாணத்துக்கு ஏன் தடை சொல்லப் போகிறார்கள்? நல்ல நாளாகப் பார்த்து 'ஜாம் ஜாம்' என்று கல்யாணத்தை நடத்தி முடித்து விடுவோம்'' என்றான் மணி.

கல்யாணப் பேச்சை மாற்றுவதற்காக ''என்ன, சுகுமாரனுடைய புதிய படப் பிடிப்பெல்லாம் எப்படி இருக்கிறது?'' என்றான் நடராஜன்.

''அதற்கென்ன குறைச்சல்? தமிழ், இந்தி, அடுத்தாற்போல் தெலுங்கு என்று ஒரே படத்தையே மாற்றி மாற்றி எடுத்துக் கொண்டிருப்போம்.''

''உன்னுடைய படம் பிரமாதமாக ஓடுகிறது போலிருக்கிறதே. நூறாவது நாள் கூடக் கொண்டாடப் போகிறீர்களாமே. பேப்பரில் விளம்பரம் செய்திருக்கிறீர்களே?'' என்று குறுக்கே புகுந்தாள் பொன்னம்மாள்.

''என்ன மாமி 'என்னுடைய படம்' என்று சொல்லி விட்டீர்கள். சுகுமாரன் காதில் விழுந்தால் அடிக்க வருவார்.''

''ஏனடா அடிக்க வேண்டும்?''

''நான் அதில் சம்பந்தப்பட்டிருப்பது உண்மைதான். அதனால் நான் எடுத்த படமாகிவிடுமா? உழைப்பவன் ஒருவன்; உரிமை கொண்டாடுபவன் ஒருவன். ஆனால் உண்மையில் சுகுமாரனும் நிறைய உழைத்துத்தான் இருக்கிறார், இந்தப் படத்துக்கு. மற்ற எல்லோரையும் விட அதிக சிரமம் எடுத்துக் கொண்டிருக்கிறார். ஆனால் ஸ்டுடியோ தொழிலாளர்கள் மட்டும் அதை உணர்ந்ததாகத் தெரியவில்லை. தங்கள் உழைப்பினால் ஏற்பட்ட பலனையெல்லாம் டைரக்டர் சுகுமாரன் தாமே அனுபவிக்கிறார் என்ற எண்ணம் நிலவி வருகிறது.''

''உண்மையாகவா? சுகுமாரனின் நிலைமை திருப்திகரமாக இல்லை என்று சொல்லு!'' என்றான் நடராஜன்.

''அவர் நிலைமை திருப்திகரமாகத்தான் இருக்கிறது. ஆனால் தொழிலாளர்களின் நிலைமைதான் திருப்தி தரும்படியில்லை. நான் அவருக்கு எச்சரிக்கை கூடச் செய்து விட்டேன். அவர் கேட்பதாக இல்லை. ஹிந்திப் படப் பிடிப்பில் ஈடுபட்டிருக்கிறார். இந்தச் சமயத்தில் தொழிலாளர்களிடையே மனக் கசப்பை வளர்க்கக் கூடாதல்லவா?''

''தொழிலாளர்களுக்கு என்ன வேண்டுமாம்?'' என்று கேட்டான் நடராஜன்.

'' 'எங்கள் உழைப்பால்தானே நீ பொருள் சேர்க்கிறாய், லாபத்தில் எங்க

ளுக்கும் பங்கு கொடு' என்கிறார்கள். 'நியாயமான கோரிக்கைதானே. எல்லோருக்கும் இரண்டு மாத போனஸ் கொடுத்தால் திருப்தி அடைவார்கள்' என்று சொன்னேன். அவர் காதில் ஏறவேயில்லை. 'நீயும் அவர்களுடன் சேர்ந்து கொண்டு என் காலை வாரி விடப் பார்க்கிறாயா?' என்று கத்தினார். இதில் வேடிக்கை என்னவென்றால் அவர் சொன்னதில் உண்மையும் இருக்கிறது. நான் தொழிலாளர்களின் தலைவனாக இருக்க வேண்டும் என்று ஸ்டுடியோவில் உள்ள மற்றத் தொழிலாளர்கள் கேட்டிருக்கிறார்கள்.''

''நீ என்ன செய்யப் போகிறாய்?''

''அதை ஏற்றுக் கொள்ளத்தான் போகிறேன்.''

''ஏற்றுக் கொண்டு பெரிய புரட்சி நடத்தப் போகிறாயாக்கும்!''

''அதெல்லாம் ஒன்றுமில்லை. உண்மை நிலையை எடுத்துரைக்கப் போகிறேன். அனாவசியமாக நடிகர்களுக்குக் கொடுக்கும் பணத்துடன் ஒப்பிட்டால் இவர்கள் கோரிக்கை ஒன்றுமில்லை என்றே சொல்லலாம். திருப்பித் திருப்பி ஒரு சில நடிகர்களை வைத்துக் கொண்டு அவர்களுக்கு மட்டும் பணத்தை வாரி வாரிக் கொடுக்கும் இந்த அநீதி மறைய வேண்டும். ஸ்டுடியோ தொழிலாளர்களுக்கு நியாயமான சம்பள உயர்வு கொடுக்க வேண்டும் என்பதை டைரக்டர் சுகுமாரனுக்குப் புரியும்படி எடுத்துக் கூறப் போகிறேன். அதற்கு அவர் மசியவில்லையானால் தொழிலாளர்களின் சக்தி என்னவென்பதை அவர் பார்க்கத்தான் போகிறார்'' என்று உணர்ச்சியுடன் கூறி முடித்தான் மணிசேகரன்.

''பேஷ்! 'வேலியே பயிரை மேய்கிறது' என்ற கதைதான்!''

''அப்படியில்லை நடராஜா! வேலிக்கு மறு புறத்தில் பசியுடன் ஒருவன் இருக்கிறான். அவனுக்குத் தோட்டத்திலிருந்து சில பழங்களைக் கொடு என்று வேலி தோட்டத்தின் சொந்தக்காரனைக் கேட்டுக் கொள்கிறது. அவ்வளவுதான்.''

இந்தச் சமயத்தில் மாடிப் படிகளில் அவசரம் அவசரமாக நர்ஸ் நிர்மலா ஏறி வந்தாள். ''டாக்டர்! டைரக்டர் சுகுமாரன் போனில் பேசுகிறார். அவருடைய திரைப்படத்தில் நடிக்கும் நடிகைக்கு உடல்நிலை சரியில்லையாம். நீங்கள் உடனே வந்து பார்க்க முடியுமா என்று கேட்கிறார்'' என்றாள்.

''இதோ, உடனே புறப்பட்டு வருகிறேன் என்று சொல்லு. நீயும் பின்னோடு வர ''யாராக இரு'' என்றுசொல்லிக்கொ.. ட எழுந்தான் நடராஜன்.

''யார்? மல்லிகாவுக்கா உடம்பு சரியில்லை? நேற்று சரியாகத்தானே இருந்தாள். மஹாபலிபுரத்துக்குக் கூட அவளும் சுகுமாரனுமாகப் போய் விட்டு வந்தார்களே? என்னவாக இருக்கும்?'' என்று கேட்டுக்கொண்டே மணிசேகரனும் எழுந்தான்.

''நேரில் போய்ப் பார்த்தால்தான் தெரியும். இப்போதே எப்படிச் சொல்ல முடியும்?'' என்று சொல்லிக்கொண்டே வேகமாகக் கீழே இறங்கினான் நடராஜன். அவனையும், அவனைப் பின் தொடர்ந்து சென்ற மணியையும் பார்த்துக் கொண்டு நின்ற விமலாவின் மனத்தில் இனந் தெரியாத ஒருவிதக் குழப்பம் வந்து புகுந்து கொண்டது.

சென்ற ஒரு வருஷகாலமாகத் தான் அனுபவித்து வந்த நிம்மதியான வாழ்க்கைக்கு மறுபடியும் முடிவுகாலம் நெருங்கி வந்து விட்டதாக அவளுக்குத் தோன்றியது.

(தொடரும்)

## நியாயமான வார்த்தை!

லோகமான்ய திலகர் அயல்நாடு சென்று திரும்பி வந்தபின் அவருக்குப் பம்பாய் நகரத்திலே ஒரு பெரிய பாராட்டுக் கூட்டம் நடந்தது. குதிரை சாரட்டில் அவரை வீதிவலமாக அழைத்துவர ஏற்பாடாகியிருந்தது.

அவர் அதில் ஏறி உட்கார்ந்ததும் தொண்டர் குழாம் மலர்மாலைகளை மலையாக அவர் கழுத்தில் போட்டு மகிழ்ந்தது.

அப்பொழுது திலகர் பெருமான், ''எனக்கு எதற்கு இத்தனை மலர்மாலைகள் சூட்டுகிறீர்கள்? இந்தக் குதிரைகளுக்குச் சூட்டுங்கள்!'' என்றார்.

தொண்டர்கள் வியப்புடன் வீரர் திலகரை நோக்கினார்கள்.

''நான் சொல்வது உங்களுக்கு அதிசயமாயிருக்கிறதா? இந்தக் குதிரைகளும் வண்டி இழுக்கின்றன. நாமும் ஒரு வண்டியை இழுக்க முயற்சி செய்கிறோம். அரசியல் வண்டியைத்தான் குறிப்பிடுகிறேன். வண்டி இழுக்கும் இந்தக் குதிரைகளுக்கோ ஒரே நோக்கம். ஒரே சிந்தனை. அரசியல் வண்டியை இழுக்க முயலும் நமக்கோ பல நோக்கங்கள்; பல சிந்தனைகள்; பல சூழ்ச்சிகள்; பல அரசியல் தகிடுதத்தங்கள்; பல மோசடிகள். அதனால் நம்மைப்போல் இல்லாமல் ஒரே நோக்கம் கொண்ட இந்தக் குதிரைகளுக்கு மலர் மாலை அணிவிப்பதுதானே நியாயம்?'' என்றார் திலகர்.

# தரத்திற்கும் உறுதிக்கும் நிகரற்றது

# ஹத்திபாயின்




## ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்

எப்பொழுதும் பிரகாசத்துடன் நீடித்து உழைப்பவை

* * *

**ஹத்திபாய் துளஸிதாஸ் & ஸன்ஸ்**

122, கன்ஸரா சால், பம்பாய் 2.






## அறிவு வாயில்கள்

அறிவைப் பெற உதவும் ஐம்புலன்களைப் பற்றிய அறிவையும் நிச்சயம் ஒவ்வொருவரும் அடைய வேண்டும் என்ற நோக்கத்தோடு எழுதப்பட்ட நூல் அறிவு வாயில்கள்.

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து அறிவு வாயில்களைப் பற்றியும் எளிய தமிழ் நடையில் தெளிவாகப் புரியும்படி அலசி ஆராய்ந்து எழுதப்பட்டிருக்கிறது.

ஐம்புலன்களின் அமைப்பு, அவை வேலை செய்யும் விதம் ஆகியவற்றைச் சொன்ன ஆசிரியர், அவற்றைப் பாதுகாப்பதற்கான முறைகளையும் சொல்கிறார்.

மிகவும் ஜாக்கிரதையாகக் கவனித்து வந்த போதிலும் சில சமயங்களில் நம்மையும் அறியாமல் புலன்களுக்குக் காயம்படலாம் அல்லது அவை நோயுறலாம். அப்படி நேர்ந்து விட்டால் அவைகளுக்கு அளிக்க வேண்டிய சிகிச்சைகள் எவ்விதம் அமைய வேண்டும் என்பதையும் விரிவாகக் கூறுகிறார். விலை: ரூ. 1-00.

## வாழ்வும் விஞ்ஞானமும்

இன்றைய வாழ்க்கை முறைக்கு விஞ்ஞான முன்னேற்றம் இன்றியமையாததாகி விட்டது. காலை எழுந்தது முதல் இரவு படுக்கப்போகும் வரையில் விஞ்ஞான முன்னேற்றத்தினால் உண்டான சாதனைகளில் ஏதாவது ஒன்று நமக்கு உதவி புரிகிறது.

ஆதிகாலத்திலிருந்து விஞ்ஞானம் எப்படியெல்லாம் வளர்ச்சி அடைந்தது; நமது வாழ்க்கையில் எந்தெந்த வகைகளில் விஞ்ஞானம் உதவுகிறது; விஞ்ஞான ஆராய்ச்சி முறைகள் என்னென்ன என்பது போன்ற அரிய விஷயங்களையெல்லாம் மிக அழகாக எடுத்துச் சொல்கிறார் ஆசிரியர்.

சோதனைச்சாலையில் ஆராய்ச்சிகள் நடக்கும்போது உண்மையிலேயே நாம் நடத்தும் ஆராய்ச்சி மனித சமுதாயத்தின் வளர்ச்சிக்குத்தான் உதவுமா? அல்லது அழிவுச் செயல்களுக்குப் பயன்படுமா? என்று யோசித்துப் பின்னதற்கு யார் எப்பேர்ப்பட்ட பலாத்காரத்தைப் பிரயோகிப்பினும் தமது ஒத்துழைப்பு ஒருபோதும் கிடைக்காது என்பதில் உறுதியுடன் இருக்கவேண்டும் என்று இறுதியில் ஆசிரியர் கூறும் கருத்தை ஒவ்வொரு விஞ்ஞானியும் சிந்திக்க வேண்டும். விலை ரூ. 1-50.

இவ்விரு புத்தகங்களையும் எழுதியவர் திரு அ. நடராஜன், பி. எஸ்ஸி. திருப்பதி ஸ்ரீ வெங்கடேச்வரர் கல்லூரியில், பௌதிகத் துறையில் செயல்முறை ஆசிரியராகத் தொண்டாற்றி வருகிறார்.

அறிவை வளர்க்கும் நூல்களைத் தமிழில் எழுதியிருக்கும் திரு நடராஜன் அவர்களும் பதிப்பகத்தாரும் பாராட்டுக்குரியவர்கள்.

கிடைக்குமிடம்: மலர் நிலையம் 133, பிராட்வே, சென்னை -1.

## கடல் முத்து

சமீப காலத்திய இலக்கிய சிருஷ்டிகர்த்தாக்களுள் ஜான் ஸ்டீன்பெக் என்பவர் உலகப் பிரசித்திபெற்ற அமெரிக்க நாவலாசிரியர்.

அவர் எழுதிய 'தி பேர்ல்' என்ற குறுநாவலைக் 'கடல் முத்து' என்ற தலைப்பில் தமிழாக்கித் தந்திருக்கிறார் குண்டூசி கோபாலன். நல்ல தமிழ் நடையைக் கையாண்டு மூலக்கதையின் சுவை சிறிதும் குன்றாமல் மொழிபெயர்த்து வெற்றி பெற்றிருக்கிறார்.

தங்களுக்கு மதிப்பு மிக்க முத்து ஒன்று அகப்பட வேண்டும், அதை விற்றுத் தங்கள் ஒரே குழந்தைக்கு வைத்தியம் செய்ய வேண்டும் என்று எண்ணுகிறார்கள் ஒரு செம்படவத் தம்பதிகள். ஆனால் அந்த முத்து அவர்கள் எதிர்பார்த்தது போலவே கிடைத்தவுடன், அவர்களுடைய இன்பமான இல்லற கீதம் துன்பமான முத்தின் கீதமாக மாறி ஒலிக்கிறது. முத்தின் கீதம் இல்லற கீதத்தைப் போல் இனிமையாக ஒலிக்காது என்று புரிந்து கொள்ளக் கணவனுக்கு நீண்ட காலமாகிறது. ஆனால் அதற்குள் எவ்வளவு பயங்கரச் சம்பவங்கள் நடந்து விடுகின்றன?

ஸ்டீன்பெக்கின் இந்தக் குறுநாவலை நன்கு புரிந்துகொண்டு அனுபவிக்கக் கதை நடந்த காலத்தில் அமெரிக்காவில் நிலவிய சூழ்நிலையை அறிந்துகொள்வது அவசியம். அதை முன்னுரையில் விளக்கிக் கூறியிருக்கலாம்.

கிடைக்குமிடம்: பேர்ல் பப்ளிகேஷன்ஸ், பம்பாய் — 1. விலை: ரூ. 0-75;

## புற்று நோய்

மனித சரித்திரத்தின் ஆரம்ப முதலே மனிதர்கள் புற்று நோயினால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றனவாம். சமீப காலமாகப் பல நாடுகளில் இதைக் குணப்படுத்த ஆராய்ச்சிகள் தீவிரமாக நடைபெற்று வருகின்றன.

இந்த ஆராய்ச்சிகளின் பலனாகப் புற்று நோயைக் குணப்படுத்தவே முடியாது என்ற எண்ணம் மறைந்து இதை ஆரம்ப காலத்திலேயே வைத்தியப் பரிசோதனை செய்து கண்டு பிடித்து விட்டால், நவீன வைத்திய முறையில் நிச்சயம் முற்றிலும் குணப்படுத்த முடியும் என்ற நம்பிக்கை தோன்றியிருக்கிறது.

ரண சிகிச்சை, எக்ஸ்ரே, ரேடிய கிரண சிகிச்சை முதலிய சிகிச்சை முறைகளோடு, சமீப காலத்தில் கதிரியக்கம் உள்ள அணு சக்தி மருந்து சிகிச்சையும் சேர்ந்து, புற்று நோயை ஒழிப்பதில் புதிய சகாப்தத்தையே உண்டுபண்ணியிருக்கின்றன. இந்த நோயைப் பற்றியும் சிகிச்சை முறைகளைப் பற்றியும் முழு விவரங்கள் அடங்கிய நூல் ''புற்று நோய்.''

ஆசிரியர்: வி. ஐ. காஸான்ஸ்கி; தமிழாக்கம்: எஸ். எஸ். ராமசாமி பி.எஸ்ஸி., பி.எல்.

கிடைக்குமிடம்: நியூ செஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை—2. விலை: ரூ. 1.

# ஜிஞ்சர் கீரீம் ஐஸ் தயாரிக்க ஒரு புதிய முறை

¼ அவுன்ஸ், பிரௌன் அண்டு போல்ஸன் கஸ்டர்டு பௌடர், 8 அவுன்ஸ், சர்க்கரை, 1 டீஸ்பூன் ஜிஞ்சர் எஸன்ஸ், 1 பைண்ட் கறந்த பால், நன்ருய் அடித்த இரண்டு முட்டைக்கரு, 4 அவுன்ஸ் பதப்படுத்திய ஜிஞ்சர். சிறிதளவு பாலில் கஸ்டர்டு பௌடரை மிருதுவாகக் கலந்துகொள்ளவும், மிகுதியைக் கொதிக்க வைக்கவும். கருக்களைக் கலக்கவும், சர்க்கரை, கலந்த கஸ்டர்டு பௌடர், பதப்படுத்திய இஞ்சி (சிறு துண்டுகளாக நறுக்கியவை) ஜிஞ்சர் எஸன்ஸைம், 2 டேபிள்ஸ்பூன் இஞ்சி ஸிரப் இந்தக் கலவை கெட்டியாகும்வரை அடுப்பில் வைத்து கிளறவும். பிறகு எடுத்து, கொஞ்சநேரம் கலக்கவும் குளிர்ந்த பிறகு உறைய வைக்கவும்.

## பாலின் மூலம் ஆரோக்கியம்

குழந்தைகள் யாவரும், ஆடை, நிரம்பியதும், ருசியுள்ளதும், ஆரோக்கியமளிப்பதுமான கஸ்டர்டை விரும்புகிறர்கள். இதில் ஆரோக்கியமளிக்கும் பால் சேர்ந்துள்ளது. பிரௌன் அண்ட் போல்ஸன் கஸ்டர்ட் பவுடர் முற்றிலும் ஒரு சைவ தயாரிப்பு என்பது ஞாபகமிருக்கட்டும். நீங்கள் அடுத்தத்தடவை கடைக்குச் செல்லும்பொழுது, பிரௌன் அண்ட் போல்ஸனின் இதர வகைகளான ரெயின்ஸி, பேடண்ட் கார்ன்ஃப்ளோவர் மற்றும் பிளமாஞ்ஜுளையும் கேட்டு வாங்குங்கள்.




## இலவசம்

குசிமிக்க சமையல் செய்யும் முறை கொண்ட புத்தகம் வேண்டுவோர் இந்தப் பாரத்தை பூர்த்தி செய்யவும்.

இங்கிலீஷ்/ஹிந்தி/தமிழ் பாஷையிலுள்ள சமையல் புஸ்தகம் ஒன்று எனக்கு அனுப்பவும்
(உங்களுக்கு வேண்டாத பாஷையின் பெயரை அடிக்கவும்)

என் பெயர் ______________________

என் விலாசம் ______________________

______________________

தபால் செலவிற்காக 15 நயாபைசா ஸ்டாம்பு அனுப்பியுள்ளேன்.

டிப்பார்ட்மெண்ட்: ... கார்ன் பிராடக்ட்ஸ கோ. (இந்தியா) பிரைவேட் லிட். தபால் பெட்டி நெ. 994, பம்பாய்–1.



**கார்ன் பிராடக்ட்ஸ் கோ (இந்தியா) பிரைவேட் லிட்.**

ஏஜெண்டுகள் : பாரி அண்ட் கம்பெனி லிமிடெட்

# சத்தியம் மீறியது

**எம்.ராதா**



உலகத்தின் இருளெல்லாம் ஒன்றுகூடி அந்தச் சின்னனூர் கிராமத்தை ஆக்கிரமித்திருந்தது. இருளை அதிகப்படுத்தின, இரு மருங்கிலும் நெடிதுயர்ந்து வளர்ந்திருந்த புளிய மரங்கள். இருள் சரியாகப் பரவியிருக்கிறதா எனக் கவனிப்பதைப்போல் சற்றைக்கொருதரம் கண் சிமிட்டிக் கொண்டிருந்தன மின்மினிப் பூச்சிகள்.

அந்தச் சாலையில், அழுக்கேறிய துணியொன்றால் சுற்றப்பட்ட சாப்பாட்டுப் பாத்திரத்தைத் தலையில் வைத்துக் கொண்டு வேகமாக நடந்து வந்து கொண்டிருந்தான் ரங்கசாமி. கருங்காலி மரத்தைப் போல் கறுத்துப் பளபளக்கும் அவனுடைய ஆஜானுபாகுவான உடல் இருளோடு ஒன்றிவிட்டது.

காற்று வேகமாக வீச ஆரம்பித்தது. காற்றுடன் போராடிக் கொண்டிருந்த புளியமரங்களிலிருந்து உலர்ந்த புளியம் பழங்கள் சலசலவெனக் கீழே உதிர்ந்தன. அவை ரங்கசாமியின் காலடிகளில் மிதிபட்டுச் 'சரக் சரக்'கெனச் சப்தித்தன.

தூரத்தில் ரயில் கூவெனக்கூவியது. ரயிலின் முன் விளக்கு வெளிச்சம் தண்டவாளங்களில் பிரதிபலித்தது. புதிய பாலத்தின் மீது முதன் முதலாகச் சென்றது புகை வண்டி. கடகடவென்ற சப்தத்தைக் கேட்டு, நடந்து கொண்டிருந்தவன் நின்றான். புகை வண்டியைக் கண் கொட்டாமல் பார்த்தான். 'என் வாழ்க்கையை நடத்த இதுவரை செல்வம் தந்த பாலம். இனி என்ன செய்வது?' என்று மனத்திலுள் கூறிக்கொண்ட ரங்கசாமியின் பெருமூச்சு பேய்க் காற்றில் கலந்தது.

ரங்கசாமி நடக்க ஆரம்பித்தான். இது வரையில் நின்றிருந்த சரக் சரக்கென்ற சப்தம் தொடர்ந்து கேட்டது.

குப்பத்தில் நுழைந்த ரங்கசாமியின் முகம் களைப்பும், சோர்வும் சேர்ந்ததால் கோபமாகக் காணப்பட்டது. அவன் கோபத்தை அதிகப்படுத்துவது போல், குடிசையின் முன்னால் நீட்டிக் கொண்டிருந்த மூங்கில் ஒன்று முகத்தில் ரத்தக் கீற்றை ஏற்படுத்தி, முகமெல்லாம் எரிய ஆரம்பித்தது.

"ஐயா வர்ராரு ஆத்தா" எனக் கூவியபடியே ஐந்து வயதுக் குழந்தை ராசு, ரங்கசாமியின் கால்களை வளைத்துக் கொண்டான். "என்னங்க, வெங்காயம் வாங்கியாந்தீங்களா?" என்ற துளசியின் குரல் அடங்குவதற்குமுன், "அண்ணே? லேஸ் பின்னை நூல் வாங்கியாரலே?" என்றவாறே வந்து நின்றாள் தங்கை வள்ளி.

ரங்கசாமிக்கு அடக்க முடியாமல் போய் விட்டது கோபம். காலை வளைத்துக் கொண்ட குழந்தையை உதறித் தள்ளினான். வள்ளியின் கையிலிருந்த அரைகுறையான, க்ரோஷா வேலைப்பின்னலை மூலையில் எறிந்தான். துளசியை உறுத்துப் பார்த்தபடியே, "ஏண்டி! வெங்காயம் இல்லாமப் போனா ஆயா விரதமிருக்கிறதுதானே?" என்று கூறிவிட்டு, சாணமிட்டு மெழுகியிருந்த வாசல் கட்டாந் தரையில் மல்லாந்து படுத்துக் கொண்டான்.

அழுது ஓய்ந்திருந்த குழந்தையைத் தூக்கிக் கொண்டு அங்கேயே படுத்துவிட்டாள் துளசி. அண்ணன் மூலையில் எறிந்த வேலையையும், வாசலில் படுத்திருந்த அண்ணனையும் மாறி மாறிப் பார்த்தபடி நின்ற வள்ளி குடிசையின் மூலையில் போய்ச் சுருண்டு கொண்டாள்.

அன்றைய அன்னம் அடுப்பின் மேலேயே வைத்தபடி இருந்தது. ரங்கசாமி படுத்தபடியே யோசித்தான். பசி, உறக்கம் இரண்டும் பறந்து விட்டன. அவனுடைய தலையில் உறுத்திய கருங்கல் ஒன்றைக் கூட அவன் கவனிக்கவில்லை.

பொழுது விடிந்தால், தனக்கும், தன் குடும்பத்துக்கும் நேரப்போகும் நிலைமை எண்ணிப் பார்க்கவே பிடிக்கவில்லை அவனுக்கு. இந்த நிலை முன்னமேயே தெரிந்ததுதான். ஆனால்

அப்போது கைமேல் நாலும் ஐந்துமாக ரூபாய் புரண்டு கொண்டிருந்ததினால் வரப் போகும் நிலை பெரிதாகத் தெரியவில்லை. அப்போதிருந்த ஆனந்தத்தில், வெங்காயமின்றி ஒரு நாள் கூடச் சாப்பாடு இறங்காது. தங்கை லேஸ் பின்ன வேண்டும் என்ற ஆசையில், நூல் வாங்கி அவளை அதில் ஈடுபடுத்தினான். தன் குழந்தை ராகவை அதிகப்படியாகவே சீராட்டினான். ஆனால், இன்றைய நிலையில் எல்லாம் வேம்பாகக் கசந்தன.

அப்போது, சின்னனூரில் ஓடிக் கொண்டிருந்த பெரியாற்றுக்குப் பாலம் ஒன்று அமைத்து, ரயில் போக்குவரத்துக்காக ஏற்பாடு செய்தனர். அப்போது வேலையற்றுத் தவித்த ஆயிரக்கணக்கான கூலியாட்கள் அங்கு வேலைக்கு அமர்ந்தனர்.

வறட்சி மிகுந்திருந்த சின்னனூரிலிருந்தே இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட கூலியாட்கள் அங்கு சென்று வேலை செய்து பிழைத்தனர். அந்தப் பாலத்தைக் கட்டி முடிக்க ஒருவருடம் பிடித்தது. காலையில் இருள் அகலும் முன் புறப்பட்டு, புளியமரச் சாலை வழியே, நாட்டுப் பாடல்களைப் பாடியவாறு கூலியாட்கள் செல்லுவதே ஒரு அழகு.

ரங்கசாமி குப்புறப் படுத்தபடியே பழைய நினைவுகளை ஒதுக்கிவிட்டுப் புது நினைவுகளை, காசில்லாமல் தவிக்கப் போகும் நினைவுகளைப் பற்றி வெறுப்புடன் யோசித்தான். 'துளசியிடம் தனக்கு வேலை போன விவரத்தைச் சொன்னால்...? சொன்னால் என்ன செய்வாள்? ஊ~ம்! தன்னுடன் சேர்ந்து அவளும் பிலாக்கணம் பாட ஆரம்பித்து விடுவாள்.'

மணிக்கூண்டு கடிகாரம் கணீரென்று பன்னிரண்டு அடித்தது. ரங்கசாமி சட்டென்று எழுந்து உலாவ ஆரம்பித்தான். கைகளைப் பிசைந்து கொண்டான். முகத்தைக் கைகளால் அழுத்தித் தேய்த்துக்கொண்டான். அப்படியும், இப்படியுமாக உலாவி, உலாவிக் கால்கள் கடுத்தன.

ரங்கசாமி திறந்திருந்த குடிசைக் கதவின் தட்டிப் படலை எடுத்து மூடினான்.

நடந்து கொண்டிருந்த ரங்கசாமி குப்பத்தின் மூலையில் திடுக்கிட்டு நின்றான். சம்பந்தம் தன் வீடு நோக்கி வந்து கொண்டிருந்ததுதான் அவனை நிற்கச் செய்தது.

பிரமித்ததில் சம்பந்தம் என்ற வார்த்தையே குளறியது ரங்கசாமிக்கு. அந்த அகால வேளையில் அவன்தான் தூங்காமல் இப்படி அலைகிறான் என்றால், சம்பந்தமும் அலைகிறானே? வியப்புடன் சம்பந்தத்தைப் பார்த்தான் ரங்கசாமி.

குனிந்து நடந்து வந்து கொண்டிருந்தவனை ரங்கசாமி, ''சம்பந்தம்!'' என்று அழைத்தான். உடலைக் குலுக்கிக் கொண்ட சம்பந்தம், ரங்கசாமியை அணைத்துக் கொண்டான்: அவன் உடல் குன்றிவிட்டது: இந்தச் சமயத்தில், கண்ணாயிரமும், முனிசாமியும் அவர்களுடன் சேர்ந்து கொண்டனர்.

வாய் மூடி மௌனத்தில் ஆழ்ந்திருந்த நால்வரையும், மணிக்கூண்டு மணியோசை தட்டி யெழுப்பியது. மணி இரவு இரண்டு: பின் நிலா, மெதுவாக வெளி வந்தது.

கண்ணாயிரம் பேச்சைத் துவக்கினான்: ''ரங்கண்ணே! எனக்கு ஒரு யோசனை தோணுது. அதுமட்டும் சரியானபடி நடந்துச்சின்னா நம்ப கைமேலே துட்டுப் புரளும்.'' கண்ணாயிரம் நிறுத்திவிட்டான்.

''ஜல்தியா சொல்லடா'' என்று ஊக்கினான் முனுசாமி.

''சொல்லறதுக்கில்லே.'' தலையை மெதுவாக ஆட்டினான் கண்ணாயிரம்.

''அடப் பாவி! மனசிலே வைச்சுக்கினு என்ன செய்யப் போறே? சும்மா சொல்லிப் போடு'' என்றான் ரங்கசாமி.

கண்ணாயிரம் சற்று யோசித்தான்: ''அண்ணே! இப்பவேண்டாம். நாளை இரவு மாந்தோப்பில் காவற்காரர்க் குடிசையிலே பேசிக்கலாம்'' என்றான்.

அனைவரும் பிரிந்து அவரவர்கள் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தனர்.

வாசலில், கட்டாந் தரையில் படுத் துறங்கிய ரங்கசாமி, தன் மேல் சூரிய கிரணங்கள் உறைப்பதை உணர்ந்து



விழித்துக் கொண்டான். முதன் முதலில் அவன் கண்களில் பட்டவள் துளசிதான். கவலை கப்பிய முகத்துடன், துளசி, "என்னுங்க, உடம்பு நல்லா இல்லிங்களா? வேலைக்குப் போகலிங்க?" என்றாள் பதற்றத்துடன்.

உள்மனது சுரீரென்றது ரங்கசாமிக்கு. தனக்கு வேலை போய்விட்ட விவரத்தைச் சொல்ல விரும்பாதவன், "இல்லை, புள்ளே! இன்னிக்கு வேலை இல்லை" என்றபடியே முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

'சரி! அப்ப நான் போகட்டுமா?" என்று புறப்பட்டவளை, ரங்கசாமி, "ஏய்! நீ எங்கே புறப்பட்டே?" என்றான் வியப்புடன்.

புன்னகை செய்த துளசி, "முனிசிப்பு ஐயா வீட்டிலே ஒரு சித்தாள் வேலை" என்று சொல்லிக்கொண்டே நடக்கலானாள்.

தானிருக்கத் துளசி வேலைக்குப் போக வேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டதே யென்று தாங்க முடியாத துக்கம் பொங்கியது ரங்கசாமிக்கு. அவளைத் தடுப்பதற்கும் வழியில்லை. தானும் வேலையின்றி, துளசியையும் தடுத்து நிறுத்திவிட்டால் பிறகு குடும்பத்தின கதி என்ன ஆவது?

இரவு வருமா என ஆவலுடன் எதிர் நோக்கினான் ரங்கசாமி. மாலை நேரம் குளுமையாக மப்பும் மந்தாரமுமாகக் கழிந்தது. வேலை செய்து விட்டு வந்த துளசி அசந்து உறங்கி விட்டாள். வள்ளி பொங்கிப் போட்டதை மெல்லாமல் விழுங்கிய ரங்கசாமி, கைத்தடியை எடுத்துக் கொண்டு மாந்தோப்புக் குடிசையை நோக்கி நடையைக் கட்டினான்.

இருளில் மாந்தோப்பு மரங்கள் தெரியவில்லை. சலசலவென்ற இலைகளின் சப்தம் மின்னல் கீற்று வானை வேடிக்கை காட்டியது. நடுவில் கிடந்த சிறுகுச்சுள்ளிகளை யெல்லாம், கைத் தடியால், தனிப் பாதை அமைத்துக் கொண்டு மெதுவாக நடந்தான் ரங்கசாமி.

ஏதோ ஒரு இடத்தில் வந்து நின்ற ரங்கசாமி, அரைகுறைப் பீடிகளில் ஒன்றை எடுத்துப் பற்ற வைத்தான். மங்கலான தீக்குச்சியின் ஒளியில், கண்ணாயிரத்துடன், சம்பந்தம், முனுசாமி, சுந்தரம், முத்துசாமி இவர்கள் வந்து கொண்டிருந்தது தெரிந்தது.

அனைவரும் சேர்ந்து நடக்க ஆரம்பித்தனர். அவர்கள், காய்ந்த சருகுகளின் மேல் நடந்த சப்தம் காற்றில் கலந்தது.

தூரத்தில் புதுப் பாலத்தின் மேல் ஓடிக் கொண்டிருந்த புகை வண்டியின் சப்தத்தைக் கேட்ட கண்ணாயிரம் பெருமூச்சு விட்டான்.

திடீரென்று மழை பிடித்துக் கொண்டு விட்டது. மாமரங்கள் பேயாட்டமாடின. தற்காப்புக்குக் கொண்டு வந்த சாக்குகள் மழையில் நனைந்து தண்ணீர் சொட்ட ஆரம்பித்து விட்டது. காற்றை எதிர்த்துக்கொண்டு ஓடினார்கள் அனைவரும்.

உஸ்ஸென்று சப்தமிட்ட காற்றில் மாம் பூக்களும், பிஞ்சுகளும் அவர்களின் மேலேயே உதிர்ந்தன. காவற்காரக் குடிசையில் ஒருவரையும் காணவில்லை. உள்ளே புகுந்தவர்கள் தயாராக எடுத்து வந்திருந்த சிம்னி விளக்கை ஏற்றினார்கள். குடிசைக் கதவை அடைத்து விட்டு, உடலைக் குறுக்கிக் கொண்டு அவர்கள் அமர்ந்தனர்.

எல்லோருடைய கண்களும் கண்ணாயிரத்தை ஆவலுடன் நோக்கின. மண் சுவரில் சாய்ந்து கொண்டு கண்ணாயிரம் சொன்ன யோசனை அனைவரையும் திடுக்குறச் செய்தது.

ஒரு வருடமாக, பல லட்சம் ரூபாய்களில் கட்டிய பாலத்தை உடைத்தெறிந்தால், உடனடியாக மறுபடியும் அங்கேயே பாலம் கட்டுவார்கள். வேலையும், கூலியும் ஒரு வருடத்துக்கு மறுபடியும் நீடிக்கும்.

சிறிது நேரம் மௌனமாக இருந்த சம்பந்தம், "ஏன் தம்பி, அவ்வளவு பெரிய பாலத்தை உடைக்கிறதாவது? எனக்கொன்றும் புரியலியே?" என்றான்.

"இதோ பாரு, அதைப்பத்தி நீ குழம்பாதே, நீ இதுக்கு ஒத்துக் கொள்கிறியா, இல்லையா?" என்றான் கண்ணாயிரம் வெறியுடன்.

"அது சரி, நாம் பாலத்தை உடைக்கப் போய், அதன் மேலே போகிற ரயில் கவிழ்ந்து விட்டால்......?" என்றான் சம்பந்தம்.

"அது ஏன்? அவுங்க விதி அவங்களுக்கு. நாம் என்ன செய்ய முடியும் அதற்கு? அவுங்களைப் பாத்துக்குனு இருந்தால் நம்ம கதி என்ன ஆகிறது?" என்றான் கண்ணாயிரம் அலட்சியமாக.

"ஆமாண்ணே! நீ சொல்றது நியாயம் தான்" என்று அவனுடன் ஒத்துப் பாடினர் முனுசாமியும், முத்துசாமியும்.

ரங்கசாமி, எங்கோ வெறித்துப் பார்த்தபடியிருந்தவன், "டேய், முத்து! நீ புள்ளை குட்டிக்காரனடா! உடைக்கிற வேலை உனக்கு வேணாம்டா!" என்று அலறினான்.

"பசியால் தவிக்க விட்டுக் கொளந்தைகளைச் சாக அடிக்கிறதைவிட இது தேவலாம்" என்றான் கண்ணாயிரம்.



"தம்பி! டேய், கண்ணாயிரம்! நீ இளம் பிள்ளைடா. இப்படிப் புத்தியைப் போக விடாதே" என்றான் ரங்கசாமி பரிதாபமாக.

"அண்ணே! உனக்கு இஷ்டமில்லேன்னா பேசாமல் எந்திருச்சுப் போ." கண்ணாயிரத்தின் குரலில் சூடு ஏறியது.

ரங்கசாமி குனிந்த தலை நிமிராமல் புறப்பட்டான். அவனைத் தடைசெய்தது கண்ணாயிரத்தின் குரல்.

"அண்ணே! வெளியே போய் இதைப் பற்றி மூச்சுக்கூடவிடாதே. சொல்லிப் போட்டேன். எனக்கே தெரியாது என்ன செய்வேன்னு. என் தலையில் அடிச்சுச் சத்தியம் பண்ணிட்டுப் போ!" கடுமை நிறைந்திருந்தது குரலில்.

திகைத்த ரங்கசாமி, "தம்பி! ஏதோ தெரிஞ்சதைச் சொல்லிட்டேன். கேட்பாயோ, விட்டுப்போடுவியோ? நான் சத்தியம் பண்ணிடறேன்" என்ற ரங்கசாமி கண்ணாயிரத்தின் தலையில் அடித்து விட்டு வெளியேறினான்.

அவன் சென்ற சில நிமிடங்களில், கண்ணாயிரம் சதித்திட்டத்தை உருவாக்கினான்.

வெள்ளிக்கிழமை இரவு பாலத்தைச் சுற்றி வெடிமருந்தைக்கொட்டித் தீயைக் கொளுத்திவிட்டு விட்டு ஓடிவிட வேண்டியது. பாலம் வெடித்துச் சிதறும். ரயில் வண்டி தலைகுப்புற விழும். கோடிக்கணக்கான ரூபாய்களை விழுங்கிவிட்டுப் பாலைவனமாக நிற்கும் அந்த இடம். —பயங்கரமான இந்தத் திட்டத்தை வாயைப் பிளந்துகொண்டு கேட்டனர் மற்ற நால்வரும்.

இதற்குள் மழை பெய்து ஓய்ந்துவிட்டது. இருள் மட்டும் விலகவில்லை.

வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்த ரங்கசாமியின் மனத்தில், உருப்புரியாத கவலை. 'அருமையாக வளர்த்த குழந்தையைப் போல் கட்டிய பாலத்தை உடைப்பதாவது? புத்தியில்லாமல் அவன் தான் உளறினானென்றால், நாம் சத்தியம் வேறு செய்து கொடுத்து விட்டோமே?' என்று தோன்றியது.

அவனுடைய மனத்தில் உறுதி சேர்ந்து கொண்டது. 'என் வாழ்க்கையே பலியானாலும் சரி, கண்ணாயிரத்துக்குச் செய்து தந்த சத்தியத்தை மீறி விடுவேன். இதற்கு ஒரு அருமையான வழி இருக்கிறது.'

குப்பத்தின் மூலையில் தகப்பனுடன் வசித்த அஞ்சலையின் வீட்டெதிரில் நின்ற ரங்கசாமி, "அஞ்சலைப் பொண்ணு" என்று கூவினான்.

வெளியே வந்த அஞ்சலை, "வாங்க, அண்ணே! இந்த அகால நேரத்தில் வந்திங்களே? என்ன விஷயம்?" என்று கேட்டாள்.

விஷயத்தை அவளிடம் வெளியிட்ட ரங்கசாமி, "எப்ப உடைக்கப் போறாங்களோ, தெரியாது பொண்ணு எனக்கு. உனக்கு வரப் போகிற அத்தான் கம்பி எண்ணாமல் பார்த்துக்கிறது உன் பொறுப்பு" என்றான். இவ்வாறு சொல்லிவிட்டு நடந்த ரங்கசாமி வீடு சென்று அயர்ந்து தூங்கிவிட்டான் நிம்மதியுடன்.

ஆனால், மறுநாள், மாலையில் கண்ணீருடன் வந்த அஞ்சலை, "அண்ணே! அவரு செய்யறதைத் தடுக்க யாராலேயும் முடியாதாம். அதுக்காக என்னைக்கூடக் கட்டிக்க மாட்டாராம். நீதான் எங்கிட்ட சொல்லிப் போட்டேன்னு தெரிஞ்சுக்கிட்டாரு. எனக்கு என்னவோ செய்யுது, அண்ணே!" என்றவாறே அழுதுகொண்டே போய்விட்டாள்.

கண்ணாயிரத்தின் சதித் திட்டத்தைப் பற்றி நினைத்தவாறே சென்ற ரங்கசாமி, 'இதற்கு இப்பவே ஒரு வழி செஞ்சிட வேணும்' என்று தீர்மானித்துக் கொண்டான். மாணிக்கமும், சிங்காரமும் எதிரில் வரவே, ரகசியமாக அவர்களிடம் விஷயத்தை வெளியிட்டான்.

திகைத்தனர், சிங்காரமும், மாணிக்கமும். கண்ணாயிரத்தைக் காப்பாற்றச் செய்ய வேண்டியதை முடிவு கட்டிவிட்டுப் பிரிந்தனர்.

வெள்ளிக்கிழமை இரவு மணி ஏழு. கண்ணாயிரமும், அவன் சகாக்களும் பாலத்தை நோக்கி நடந்தனர். அவர்கள் பின்னால் மாணிக்கமும், அவன் சகாக்களும் அவர்கள் அறியாமல் நடந்தனர்.

சலவைக் கல்போல் வெண்மையாக, சுண்ணும்பு மணம் மறையாத பாலத்தின்மீது ஜனங்களைச் சுமந்துகொண்டு வந்து கொண்டிருந்தது ரயில். தீக்குச்சியில் பீடியைப் பற்ற வைத்த கண்ணாயிரம், "ஒழிஞ்சு போ சீக்கிரம். எங்களுக்கு வேலைகொடு!" என்றவாறு இன்னொரு தீக்குச்சியைப் பற்ற வைத்தான்.

அவனறியாமல், பின்னால் நின்ற ரங்கசாமி, கைத்தடியை ஓங்கிக் கண்ணாயிரத்தின் தலையில் அடித்தான். அதைத் தொடர்ந்து பல குரல்கள் அலறின. சிறிது நேரத்தில் அந்த இடம் அமைதியில் ஆழ்ந்தது. கூவெனக் கூவியபடி சென்ற புகைவண்டி ரங்கசாமிக்கு நன்றி கூறுவதைப்போல மெதுவாக ஓடியது அன்று.

மறுநாள் காலை, கண்ணாயிரத்தையும், அவனுடன் அடிபட்டவர்களையும் காணச் சென்றனர், மாணிக்கமும், ரங்கசாமியும்.

கண்ணாயிரம் ஜுர வேகத்துடன், "ஏய்! என்னையா கவிழ்க்க நெனச்சே? நான் சாவறதுக்குள்ளே அந்தப் பாலத்தை உடைக்கப் போடுவேன். ரங்கண்ணே! சத்தியத்தை மீறின நீயும் ஒரு மனுசனா? அஞ்சலைப் பொண்ணுகிட்ட மட்டுமா சொல்லிப் போட்டே நீ? ஊர் ஜனங்க எல்லாரிடம்னு சொல்லிப்பிட்டே?" என்றான்.

அச்சமயத்தில் "டேய் தம்பி! ஏதோ சத்தம் கேட்குது" என்றான் மாணிக்கம்.

தெருவில், ஒரு ஆள் சொல்லிக்கொண்டே போனான்: "சர்க்காரு ஒரு ஆஸ்பத்திரி கட்டப்போறாங்க. பாலம் கட்டின கூலிங்க சம்மதப்பட்டால் நாளைக்குள்ளே பேரைப் பதிவு செய்துக்குங்க."

கண்ணாயிரத்தின் கண்களில் புதிய ஒளி புகுந்தது. "அண்ணே!" என ரங்கசாமியை அழைத்தான். "என்னை மன்னிச்சுடு, ஆசாசையிலே எல்லாப் புத்தியும் போயிருந்துச்சு. நல்ல சமயத்தில் நீ காப்பாற்றலேன்னா......" மேலே பேச முடியாது குளறினான் கண்ணாயிரம்.

"சும்மா யிருடா தம்பி! அஞ்சலைப் பொண்ணைக் கட்டிக்கிட்டு நீ சொகமா இருக்கணும்னு எனக்கு ஆசை. உடம்பொறந்தவனுக்கு மூணு குடும்பச்சுமை மேல் போறப்புத் தானே அவங்களைக் காப்பாத்தணும்!" என்றான் ரங்கசாமி கண்ணீர் மல்க.

"அண்ணே! நீ சத்தியத்தை மீறினதனாலே நல்லது நடந்து போச்சு" என்று கூறிய கண்ணாயிரத்தின் கையையும், அருகில் நின்ற அஞ்சலையின் கையையும் இணைத்தான் ரங்கசாமி.




காலையில் பார்க்க வேண்டிய நோயாளிகளையெல்லாம் பார்த்து முடித்த பிறகு டாக்டர் சரளா கைகளையும் முகத்தையும் கழுவிக்கொண்டு தனது மேசைக்குத் திரும்பி வந்தாள். கோட்டுப் பையில் சுருண்டு கிடந்த 'ஸ்டெதஸ்கோப்'பையும், பவுண்டன் பேனாவைப்போல் செருகிக் கொண்டிருந்த 'தெர்மா மீட்டர்'ரையும் எடுத்து மேசையின் மீது வைத்தாள். தனக்கு 'அர்த்த புருஷ'த் தோற்றம் அளித்திருந்த முழங்கால்வரை நீண்டு தொங்கிய வெள்ளை நிறக் கோட்டைக் கழற்றி மேசைக்குப் பின்புறமிருந்த 'ஸ்டாண்'டில் மாட்டினாள். பிறகு நாற்காலியில் சாய்ந்து கொண்டு இரு கைகளையும் தலைக்கு மேலே உயர்த்தி ஒரு தடவை சோம்பல் முறித்தாள். தொடர்ந்து அவளிடமிருந்து வெப்பம் மிக்க பெருமூச்சு ஒன்று வெளிவந்தது.

அன்று அவளுடைய மனமே சரியாக இல்லை. வேலையில் கண்ணும் கருத்துமாயிருக்கும் அவளுக்கு அன்று வேலை செய்யவே ஓடவில்லை. எழுதிக் கொடுத்த 'பிரிஸ்கிரிப்ஷன்'களில்கூட இரண்டொன்றில் தவறுகள் செய்து விட்டாள். நல்லவேளையாக அனுபவம் மிக்க நர்ஸ் தங்கமணியின் கண்களில் அவை பட்டன. அவள் வந்து அவற்றைத் திருத்தி எழுதி வாங்கிக்கொண்டு போனாள். அனல் பூத்துக் கிடக்கும் நெருப்பின்மீது சிறு காற்று வீசினாலும் அதன்மேலுள்ள சாம்பலெல்லாம் பறந்து, அது கனிந்து எரியத் தொடங்கி விடுவதுபோல், சரளாவின் உள்ளத்தில், கடந்த பத்து வருஷங்களாகப் பதுங்கிக் கொண்டிருந்த வெறி, அன்று யதேச்சையாகச் சந்தித்த ஒரு நபர் மூலம் விசுவரூபம் எடுத்து அவளை இப்படியெல்லாம் ஆட்டிவைத்துப் படாதபாடு படுத்திக் கொண்டிருந்தது.

அன்று காலையில் அவளும் நர்ஸ் தங்கமணியும் நர்ஸிங் ஹோமுக்கு வந்து கொண்டிருந்தனர். ஆஸ்பெத்திரிக்கு அவசரமாகச் சில மருந்துகள் வேண்டும் என்பதை அப்போதுதான் தங்கமணி ஞாபகப்படுத்தினாள். சரளா வழியிலிருந்த மருந்துக்கடை வாசலில் காரை நிறுத்தி, "போய் வேண்டியதை வாங்கிக் கொண்டு பின்னால் மாலையில் விட்டுக்கு அனுப்பச் சொல்லு" என்றாள். தங்கமணி காரிலிருந்து இறங்கிக் கடைக்குள்ளே நுழைந்தாள். அவளையே கவனித்துக் கொண்டிருந்த போது சரளாவின் கண்கள் கடை வாசலை ஒட்டிய கவுண்டரின் முன் நின்று கொண்டிருந்த ஒருவரைக் கண்டன. உடனே அவள் அவசரம் அவசரமாகக் காரிலிருந்து இறங்கிக் கடையை நோக்கி நடந்தாள்.

ஆம்; விசுவம்தான் அங்கே நின்று கொண்டிருந்தான். சரளாவைப் பார்த்ததும் அவன் ஒருகணம் திடுக்கிட்டான். பிறகு, வலிய வரவழைத்த முறுவல் ஒன்றைச் சிந்திவிட்டு, "சௌக்கியமா, சரளா?" என்று கேட்டான்.

"சௌக்கியந்தான். நீங்கள் இங்கே எங்கே வந்தீர்கள்?" என்று வியப்புடன் கேட்டாள்.

விசுவம், தான் வாங்கிய மருந்துக்குரிய விலையைக் கொடுத்துவிட்டுத் திரும்பி, "இவ் ஊரில் ஆபீசின் கிளை ஒன்றைப் புதிதாகத் தொடங்கி என்னை இங்கே மாற்றியிருக்கிறார்கள். வந்து இரண்டு மாதங்களாகின்றன. நீ இங்கே இருக்கிறாயென்று சமீபத்தில் தான் கேள்விப்பட்டேன். சௌகரியமாக ஒரு நாள் வந்து பார்க்க வேண்டுமென்றிருந்தேன். அதற்குள் எதிர்பாராமலே சந்தித்துக் கொண்டு விட்டோம்" என்றான்.

அவன் சகஜமாகத்தான் பேசினான். ஆனால் அவனைக் கண்ட நிமிஷத்திலேயே நீறு பூத்திருந்த சரளாவின் உள்ளத்து நெருப்பு கனியத் தொடங்கி விட்டது. அதன் வேகத்தில், "ஆமாம், யாருக்கு மருந்து?" என்று அவள் அவனைக் கேட்டாள்.

"என் மனைவிக்குத்தான்."

"என்ன உடம்பு?"

"உடம்புக்கு ஒன்றுமில்லை; அவள் கர்ப்பம்" என்றான் விசுவம்.

சம்பாஷணை நீண்டுகொண்டே போயிருக்கும். ஆனால் அதற்குள் தங்கமணி மருந்துகளை வாங்கிக் கொண்டு வந்து விட்டாள். எனவே சரளா, "சரி, வருகிறேன். சாவகாசமாக ஒருநாள் என் வீட்டுப் பக்கம் வாருங்களேன்" என்று கூறிவிட்டுக் கிளம்பிவிட வேண்டியதாயிற்று.

கார் நர்ஸிங்ஹோமை நோக்கிக் கிளம்பியதும் தங்கமணி, "யார் இவர்?" என்றாள்;

"தெரிந்தவர்" என்றாள் சரளா.

ஆனால் விசுவம் அவளுக்கு வெறுமனே 'தெரிந்தவர்' மாத்திரந்தானா?

பத்து வருஷங்களுக்கு முன்பு அவர்கள் போட்ட திட்டம் மட்டும் நிறைவேறியிருந்தால், இன்று சரளா இந்த டாக்டர் தொழிலுக்கு வந்திருக்க மாட்டாள்; விசுவத்தைத் 'தெரிந்தவர்' என்று மட்டும் சொல்லும் நிலையும் ஏற்பட்டிராது. அப்பொழுது அவன் இவளுடைய கணவனாக இருந்திருப்பான்!

* * *

அப்பொழுது சரளாவுக்குப் பதினாறு வயது; மணம் செய்ய வேண்டிய பிராயம். அவள் 'இண்ட'ரை முடித்திருந்தாள். அதோடு மகளின் படிப்பை நிறுத்திவிட்டுக் கடனோ உடனோ வாங்கிக் கலியாணத்தைப் பண்ணிக் கொடுத்து விடவேண்டுமென்று ஹாலாஸ்யம் எண்ணியிருந்தார். ஆனால் அந்த எண்ணம் செயல்படும் முன்பே அவருடைய கழுத்துக்குக் காலனின் கயிறு வீசப்பட்டு விட்டது. ஹாலாஸ்யம் சென்னையில் ஒரு கம்பெனியில் நல்ல பதவியில்தான் இருந்தார். கை நிறையச் சம்பாதித்துக் கொண்டும் இருந்தார். ஆனால் அவர் ஓர் ஊதாரி. காலணாக்கூடச் சேர்த்து வைத்துக் கொள்ளவில்லை. ஆதலால் அவருடைய மரணத்துக்குப் பிறகு சரளாவும் அவளுடைய அன்னையும் திண்டாடும்படியான நிலை ஏற்பட்டுவிட்டது.

ஹாலாஸ்யம் வேலை செய்து வந்த கம்பெனியில் அப்பொழுது மானேஜராக இருந்த கிழவர் மிகவும் நல்லவர். தமது கம்பெனிக்கு உள்ளன்போடு உழைத்த ஒருவரின் மனைவியும் மகளும் நிராதரவாக நிற்பதை அறிந்ததும் அவர் சரளாவை அழைத்து அக்கம்பெனியிலே ஒரு வேலை கொடுத்து உதவினார். கிடைத்த சம்பளம் தாயும் மகளும் நட்டின்றி வாழப் போதுமானதாக இருந்தது.

ஆனால் சரளாவுக்கு இந்த உத்தியோக வாழ்க்கை பிடிக்கவே இல்லை. தன் வயதுப் பெண்கள் கலியாணம் செய்து கொண்டு கணவனுடன் களித்து வாழ்வதைக் காணும் போது அவளுடைய உள்ளம் கதறி அழும். 'அம்மா ஏன் என் கலியாண விஷயத்தில் சிரத்தையேயின்றி இருக்கிறாள்? நான் இப்படி வாழ்நாள் முழுவதும் உழைத்து வயிறு வளர்த்துக் கொண்டிருக்க வேண்டும் என்பதுதான் அவள் எண்ணமா?' என்று அவள் ஏங்குவாள்.



ஆயினும் எந்தப் பெண்தான், 'எனக்குக் கலியாணம் செய்துவை, அம்மா!' என்று வெட்கத்தை விட்டுத் தன் தாயிடம் கூறத் துணிவாள்? அதை அந்தத் தாயே அல்லவா உணர வேண்டும்?

சரளாவின் அம்மா லட்சுமிக்கும், மகளுக்குக் கலியாணம் செய்ய வேண்டும் என்பது தோன்றாமல் இல்லை. ஆனால் கலியாணம் என்றால் எளிதா? முதலில் அதற்கு வேண்டிய பணத்துக்கு அவள் எங்கே போவாள்? இப்படி இரண்டு உள்ளங்கள் கல்யாணத்தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்த சமயம்தான், சரளா வேலை செய்துவந்த கம்பெனியில் புதிதாக உதவி அக்கௌண்டெண்டாக வந்து சேர்ந்தான் விகவம். கட்டழகன் அவன். பி. காம். பாஸ் பண்ணியிருந்தான். வயது இருபத்து நான்கு—இருபத்தைந்து இருக்கும். சரளாவும் அந்த இலாகாவிலேயே வேலை செய்து வந்ததால் இருவரும் நெருங்கிப் பழகும் வாய்ப்பு நிறைய ஏற்பட்டது. இருவர் மனத்திலும் காதல் மூண்டது.

விகவத்துக்குப் பெற்றோர் உற்றார் யாருமில்லாததால், தன் கலியாணத்தைப் பற்றி அவனேதான் தீர்மானித்துக் கொள்ள வேண்டியிருந்தது. அவன் விஷயத்தை ஆறப் போடவில்லை. தங்கள் இருவர் மனமும் ஒன்றுபட்டு விட்டது என்பது நிச்சயமான உடனே லட்சுமியிடம் சென்று, சரளாவைத் தனக்கு மணம் செய்து கொடுக்குமாறு கேட்டுக் கொண்டான். அவர்களுடைய பொருளாதார நிலை அவனுக்கு நன்றாகத் தெரியுமாதலால், கலியாணச் செலவுகளைத் தானே ஏற்றுக் கொள்வதாகவும் கூறினான்.

லக்ஷ்மியின் மகிழ்ச்சிக்குக் கேட்கவா வேண்டும்? ஆனால் இதற்கிடையே எதிர்பாராத சம்பவம் ஒன்று நிகழும் என்று யார் எதிர்பார்த்திருந்தார்கள்?

* * *

விகவமும் சரளாவும் வேலை பார்த்து வந்த கம்பெனியின் பழைய மானேஜர் ஓய்வுபெற்றுப் போய் விடவே அவருடைய இடத்துக்குப் புதிதாக ஒருவர் வந்தார். அவருக்கு அடுக்காக ஐந்து பெண்கள். அவர்களில் மூத்தவளான பத்மா அப்பொழுது மணப் பிராயத்தவளாக இருந்தாள். பண வசதி, செல்வாக்கு எல்லாம் இருந்தும், உடம்பை அசைக்காமலும், அதிகப் பணச் செலவு இல்லாமலும் தமக்கு அடங்கிய மாப்பிள்ளை ஒருவனைப் பிடித்துவிட வேண்டுமென்று எண்ணினார் புது மானேஜர். இங்கே மாற்றலாகி வந்ததும் முதல் காரியமாகத் தமது ஆபீசில் வேலை செய்து வந்தவர்களில் யார் யாருக்குக் கலியாணமாகவில்லை என்பதை விசாரித்துத் தெரிந்து கொண்டார். விகவம் உள்பட ஐந்து இளைஞர்களின் பட்டியல் அவருக்குக் கிடைத்தது. ஆனால் அந்த ஐவரிலும் விகவமே பெரிய பதவி வகித்து, அதிகச் சம்பளம் பெற்று வந்ததால், அவனிடமே அவருடைய மனம் லயித்தது.

ஒருநாள் அவர் விகவத்தை வீட்டுக்கு அழைத்துச் சென்று, கலியாணப் பேச்சைப் பிரஸ்தாபித்தார்.

விகவம் அதைக் கேட்டதும் திடுக்கிட்டான்; தான் சரளாவை மணந்து கொள்ளுவதாக அவளுடைய தாயாருக்கு வாக்களித்திருப்பதை மானேஜரிடம் கூறினான்.

ஆனால் மானேஜர் அவனை விடவில்லை. தமது மகளை மணந்து கொண்டால் அவனைப் பிரதம அக்கௌண்டெண்டாக்கத் தலைமைக் காரியாலயத்துக்குச் சிபாரிசு செய்வதாக ஆசை காட்டினார்.

அதுவும் விகவத்தை மனம் மாறச் செய்யவில்லை. ஆகவே அவர் அவனைப் பயமுறுத்தத் தொடங்கினார். இந்தச் சம்பந்தத்துக்கு இணங்கவில்லையானால், விகவம், சரளா, இருவரின் வேலைக்கும் வத்தி வைத்து விடுவதாகச் சொல்லாமல் சொன்னார்.

விகவம் அன்றிரவே சரளாவைச் சந்தித்து நடந்ததையெல்லாம் கூறினான்.

சரளா உள்ளம் பதறிப் போனாள். "என்ன முடிவு செய்தீர்கள்?" என்று அவள் துடித்துப் போய்க் கேட்டாள்.

"முடிவு இப்பொழுது உன் கையில்தான் இருக்கிறது, சரளா! மானேஜரை விரோதித்துக் கொண்டால் நமக்கு நிச்சயமாக வேலை போய்விடும். நான் ஆறு மாதகாலம் தவியாய்த் தவித்த பிறகு கிடைத்த வேலை இது. இதைப் போக்கிக் கொண்டு மறுபடியும் திண்டாட என்னால் முடியாது; ஆகையால் வேலைக்கு ஆபத்து ஏற்படாமலே இந்த வியூகத்திலிருந்து விடுபட்டு உன்னை மணக்க ஒரு வழி கண்டுபிடித்திருக்கிறேன். நீ நாளைக்கு லீவு போட்டு விட்டு மானேஜர்



ஆபீசுக்கு வந்திருக்கும் சமயத்தில் அவருடைய வீட்டுக்குப் போ. பத்மாவிடம் நமது காதலையும், உனது நாதியற்ற தன்மையையும் எடுத்துச் சொல்லு. மனத்தை வேறொருத்தியிடம் பறிகொடுத்து விட்ட ஒருவனை எந்தப் பெண்ணும் மணக்கத் துணிய மாட்டாள். என்னை மணக்க முடியாதென்று அவளையே தன் தந்தையிடம் கூறிவிடச் செய். இதை நீ வெற்றியுடன் செய்து முடித்தால்தான் நாம் ஒன்றுபடமுடியும்'' என்று கூறினான்.

மறுநாள் சரளா பத்மாவைச் சந்தித்தாள். எல்லாவற்றையும் சொன்னாள். ''இவர் இல்லாவிட்டால் வேறொருவரைத் தேடி மணம் முடித்து வைக்க உனக்கு அப்பா இருக்கிறார். அந்தஸ்து இருக்கிறது; ஐசுவரியம் இருக்கிறது. எனக்கோ அப்படி ஒன்றுமே இல்லை. ஆகையால் தயவுசெய்து எனக்கு இவரை விட்டுக்கொடு'' என்று முந்தானையை விரித்துக்கொண்டு கெஞ்சினாள்.

ஆனால் பத்மா இணங்கவில்லை. விசுவத்தின் இளமை, எழில், பதவி எல்லாம் அவளைக் கவர்ந்து விட்டன. கிடைத்திருப்பவரை நழுவ விட்டால், புதிதாக வந்து வாய்ப்பவர் எப்படி இருப்பாரோ? அவள் தீர்மானமாக, ''அதெல்லாம் முடியாது; உன் காதலருக்கு உன்னைத்தான் மணந்துகொள்ள வேண்டுமென்றிருந்தால் அவரே அதை அப்பாவிடம் நேரே வந்து சொல்லிக் கொள்ளட்டும்'' என்று கூறி விட்டாள்.

சரளாவின் உள்ளம் குமுறியது. அவளுக்கு விசுவத்தின் மீது சிறிதும் வருத்தமில்லை. இறுமாப்புடன் பதிலளித்த பத்மாவிடந்தான் அவளுடைய கோபமெல்லாம் பாய்ந்தது. ''பாவி! என் வாழ்வைப் பறித்துக் கொண்டாய். இதற்கு உன்னை என்றாவது ஒருநாள் பழி வாங்காது விடமாட்டேன்'' என்று சபதம் செய்து கொண்டாள் அவள். ஆனால் அவள் இப்படி ஏதேனும் செய்துவிடக் கூடும் என்று சந்தேகப்பட்டுத்தானோ என்னவோ, மறுநாள் சரளா ஆபீசுக்குச் சென்றதும், அங்கே மானேஜர் அவளுடைய வேலைக்குச் சீட்டைக் கிழித்து வைத்துக்கொண்டிருந்தார்.

இப்பொழுது மற்றெல்லாவற்றையும் விட, வயிற்றுப் பாட்டைப் பார்த்துக் கொள்ள வேண்டிய கவலைதான் சரளாவுக்குப் பெரிதாகி விட்டது. அவளுடைய அதிர்ஷ்டம் மறுநாளே வேலூரில் ஒரு டாக்டர் அம்மாளுக்கு ஒரு பெண் குமாஸ்தா வேண்டுமென்று பத்திரிகையில் விளம்பரம் வந்தது. உடனே சரளா இரண்டாம்பேர் அறியாமல் அங்கே போய், அந்த வேலையை ஒப்புக் கொண்டாள்; தாயாரையும் தன்னிடம் அழைத்துக் கொண்டாள்.

சரளாவுக்கு வேலை கொடுத்திருந்த டாக்டர் சாவித்திரி அம்மாள் வயதானவள். பல காலமாக வேலூரில் நர்ஸிங் ஹோம் ஒன்றை நடத்தி வந்தாள். நல்ல கை ராசியுள்ளவள்; ஆதலால், குமாஸ்தா அமர்த்திக்கொண்டு ஆஸ்பத்திரி வரவு - செலவுகளைக் கவனிக்கும் அளவுக்கு அவளிடம் கேஸ்கள் வந்து குவிந்தன. சரளாவுக்கு அங்கே இடுப்பு ஒடிய வேலை இருந்தது. அவள் நல்ல உழைப்பாளி. இரவு-பகல் என்றில்லாமல், உடலை உடலென்று பாராது உழைத்து உத்தியோகத்தைக் காத்துக் கொள்ளும் உறுதி உடையவள். ஆகையால் அவள் விரைவில் டாக்டரின் நன்மதிப்புக்குப் பாத்திரமானாள்.

அவளுக்கு நல்வாழ்வை அளிக்க அந்த அம்மாள் விருப்பம் கொண்டாள். எனவே சரளாவைத் தமது செலவில் எம்.பி.பி.எஸ். படிக்கச் சென்னைக்கு அனுப்பி வைத்தாள்.

* * *

வெறி என்பது மனிதருக்கு மிகக்கொடிய சத்துரு. எவ்வளவு நல்லவர்களாக இருந்தாலும் வெறி ஏற்பட்டுவிட்டால் அவர்களிடமுள்ள நல்ல தன்மைகளெல்லாம் பறந்து விடுகின்றன. அவர்களுடைய கண்கள் குருடாகி விடுகின்றன; அறிவு மங்கி விடுகிறது. யாரும் தங்களிடமிருந்து எதிர்பார்க்க முடியாத செயல்களையெல்லாம் அவர்கள் செய்யத் தலைப்பட்டு விடுகிறார்கள்.

சரளாவும் அத்தகைய வெறியால்தான் அச்சமயம் ஆட்டி வைக்கப் பட்டாள். தன் வாழ்வைப் பாழடித்த பத்மாவின் வாழ்வைத் தான் பாழடிக்க வேண்டும் என்பது ஒன்றுதான் அப்பொழுது அவளுடைய குறிக்கோளாக இருந்தது.

சரளா ஒரு திட்டம் வகுத்தாள். ஏற்கனவே தன் மீது மாறாத காதல் கொண்டிருந்த விசுவத்துக்கு வலை விரித்துத் தன்னிடம் இழுத்துக் கொண்டு, பத்மாவைத் தத்தளிக்க விட வேண்டும்.

ஆனால் யாருடைய நல்ல காலமோ தெரியாது. சரளாவின் திட்டம் நிறைவேற வழி



வில்லாமற் போய்விட்டது. தான் சென்னைக்கு வந்திருப்பதை விசுவத்துக்கு அறிவிப்பதற்காக அவள் ஒருநாள் அவன் ஆபீஸுக்கு டெலிபோன் செய்தபோது, அவனை முன்பே ஹைதராபாத்துக்கு மாற்றி விட்டார்கள் என்ற ஏமாற்றமான செய்திதான் சரளாவுக்குக் கிடைத்தது.

அதன் பிறகு எவ்வளவோ காரியங்கள் நடந்தன; அவை சரளாவின் வாழ்வில் இன்பத்தையும் துன்பத்தையும் நிறைத்தன. அவளுடைய தாயார் லட்சுமி நோய் வாய்ப்பட்டு இறந்து போனாள். சரளா எம். பி. பி. எஸ். படித்து முடித்துவிட்டு வந்ததும் டாக்டர் சாவித்திரி முதுமை காரணமாகத் தமது நர்ஸிங்ஹோமை அவளிடமே ஒப்படைத்து விட்டுச் சொந்தக் கிராமத்துக்கு ஓய்வு பெறப் போய்விட்டாள். ஆனால் இந்த மாறுதல்கள் எவையும் சரளாவின் உள்ளத்திலிருந்த அந்தப் பழி வாங்கும் நினைவை மாற்றிவிடவில்லை. அது அங்கே நீறு பூத்த நெருப்பாக இருந்து கொண்டேதான் இருந்தது. அந்த நெருப்புக்கு, இன்று விசுவத்தைச் சந்தித்ததும், அவன் மனைவியுடன் வேலூரில்தான் வாழ்கிறான் என்பதும் காற்றாக வந்து, அதைக் கனிந்தெரியச் செய்தது.

* * *

ஆஸ்பத்திரிக் கடிகாரம் பன்னிரண்டு அடித்து ஓய்ந்தது.

அன்றையக் காலை வேலைகள் முடிந்து விட்டதால் சரளாவும் நர்ஸ் தங்கமணியும் வீட்டுக்குப் புறப்பட்டனர். டாக்டர் இருந்த தெருவிலேயே தங்கமணியும் வசித்து வந்தாள். அவள் நர்ஸிங் ஹோமில் கம்பவுண்டர் வேலையும் பிரதான நர்ஸ் வேலையுமே செய்துவந்ததால், பெரும்பாலும் டாக்டருடனே அங்கே வந்து, அவள் வீடு திரும்பும்போது தானும் திரும்பி விடுவாள்.

இருவரும் ஆஸ்பத்திரி வாசலுக்கு வந்த போது டாக்ஸி ஒன்று விர்ரென்று அவர்கள் முன்னே வந்து நின்றது. அதிலிருந்து விசுவம் கீழே இறங்கினான். சரளாவின் பார்வை அவனிடம் சிறிது நேரம் நிலைத்துவிட்டுக் காரின் உள்ளே திரும்பியது.

அங்கே நிறைந்த வயிறுடன் முக்கி முனகிக் கொண்டு இறங்க முயலுவது யார்?

பத்து வருஷங்கள் ஆகிவிட்ட போதிலும் சரளா, பத்மாவை எளிதாகவே அடையாளம் கண்டு கொண்டாள்.

"சரளா!" என்று அவளை நெருங்கினான் விசுவம். "என் மனைவிக்கு நோவு எடுத்திருக்கிறது."

அவள் அவனுக்குப் பதிலேதும் சொல்லவில்லை. தங்கமணியிடம் திரும்பி, "அவளை உள்ளே அழைத்துச் செல், தங்கம்; நான் இதோ வருகிறேன்" என்று கூறி விட்டுத் தன் அறைக்குத் திரும்பி நடந்தாள்.

இதோ, அவள் பழி வாங்குவதற்கேற்ற வாய்ப்பு வலிய வந்துவிட்டது. அவள் திட்டமிட்டதற்கெல்லாம் மாறாக, எவ்விதச் சிரமமும் இன்றி, அந்தப் பாவியை விசுவத்திடமிருந்து நிரந்தரமாகவே பிரித்துவிட ஓர் அரிய சந்தர்ப்பம் கைகூடியிருக்கிறது. பிரசவ கேஸ்: அவள் என்ன செய்தாலும் அதைப் பிரசவக் கோளாறு என்று கூறிச் சமாளித்து விடலாம் அல்லவா?

சரளா துணிந்து விட்டாள். பழி, பாவம் ஒன்றும் இப்பொழுது அவள்முன் எடுபடவில்லை. டிஸ்பென்ஸரி அறையிலிருந்த அலமாரியைத் திறந்து, எளிதாகப் பிரசவமாவதற்காகக் கொடுக்கப்படும் மிக்ஸரை முதலில் கலந்துகொண்டாள். பிறகு அதில் கொடிய விஷ மருந்து ஒன்றில் இரண்டொரு துளிகளையும் விட்டாள். அவுன்ஸ் கிளாஸைக் கையில் எடுத்துக் கொண்டு பிரசவ வார்டுக்குப் போவதற்காகத் தன் அறை வழியே நடந்தபோது, அங்கே உட்கார்ந்திருந்த விசுவம், "ஒரு நிமிஷம் நில் சரளா; உன்னிடம் ரகசியமாக இரண்டொரு வார்த்தைகள் சொல்ல வேண்டும்" என்றான்.

"சொல்லுங்கள்" என்றாள் சரளா நின்றபடி.

"என் மனைவிக்கு இங்கே பிரசவத்துக்கு வருவதற்கு ஒரே பயம். பழைய சம்பவத்தை மனத்தில் வைத்துக் கொண்டு அவளுக்கு நீ ஏதாவது செய்துவிடுவாயோ என்று!"

சரளாவின் நெஞ்சில் சாட்டையாகப் பாய்ந்தது இந்தச் செய்தி. ஒருவேளை பத்மாவின் இந்தச் சந்தேகத்தின் காரணமாக, அவளுடைய மரணத்துக்குப் பின் உடல் பரிசோதனைக்கு உள்ளாகிவிடுமோ?

விசுவம் தொடர்ந்தான்: "நான் அவளுக்குத் தைரியமூட்டினேன். 'பைத்தியமே! அப்படி அவளுக்கு மனக் கசப்பு ஏதாவது இருந்தால் என்மீதல்லவா இருக்க வேண்டும்?' என்று சமாதானப்படுத்தி அழைத்து வந்தேன். உன் தங்கமான மனம் எனக்குத் தெரியாதா, சரளா? இதை எதற்காக இப்பொழுது உன்னிடம் சொல்லுகிறேனென்றால், பிரசவக்காலத்தில் அவளிடம் இப்படிப்பட்ட பீதி எதுவும் இருக்கக் கூடாது. ஆகையால் நீயும், உனக்கு அவளிடம் எவ்விதக் காரமும் கிடையாது என்பதை வற்புறுத்திச் சொல்லு."

பாவம்! எவ்வளவு நம்பிக்கை இவருக்கு என்னிடம்? அந்த நம்பிக்கைக்குத் துரோகம் இழைக்கப் போகிறோமே என்று எண்ணிய போது சரளாவுக்குச் சிறிது கலக்கம் ஏற்படத்

தான் ஏற்பட்டது. ஆனால் மறுநிமிஷம் அவளுடைய வெறி அந்தக் கலக்கத்தை விரட்டி விட்டது. அவள் முறுவலித்துக் கொண்டே, "உங்களிடமும் எனக்கு எந்தவிதமான மனக்கசப்பும் கிடையாது" என்றாள் சாதுரியமாக. "அப்படி மனக்கசப்பு அடையும்படி நீங்கள் எனக்கு என்ன துரோகம் செய்துவிட்டீர்கள்?"

"இல்லை; நான் இன்னும் சில காலம் காத்திருந்திருக்கலாம் இல்லையா?"

"எதற்கு?"

"உன்னை மணந்து கொள்ளத்தான்."

"எப்படி? நீங்கள் அப்பொழுது ஏதாவது சாக்கு போக்குச் சொல்லி யிருந்தால், மானேஜர் என் வேலைக்குச் சீட்டுக் கிழித்தது போல் உங்கள் வேலைக்கும் சீட்டுக் கிழித்திருப்பாரே!"

"அப்பொழுது நடந்ததை நான் சொல்லவில்லை, சரளா! அதன் பிறகு நான் காத்திருந்திருக்கலாம் அல்லவா?"

சரளாவுக்கு விளங்கவில்லை. "பிறகு என்றால்......?" என்று கேட்டாள் அவள்.

"அதுதான் என்னை ஹைதராபாத்துக்கு மாற்றிய பிறகு."

"அப்படியென்றால் உங்களுக்கு ஹைதராபாத்துக்கு மாற்றல் உத்தரவு வரும்வரை மானேஜர் பத்மாவை உங்கள் தலையில் வைத்துக் கட்டவில்லையா?"

"அதற்குத்தான் இடமே இல்லாமல், உன்னை அவர் வேலையிலிருந்து நீக்கிய ஒரு வாரத்துக்கெல்லாம் எனக்கு மாற்றல் உத்தரவு வந்துவிட்டதே! மானேஜர், என்னை ஒரு மாதம் லீவு போட்டுவிட்டுப் பத்மாவை மணந்துகொண்டு அவளுடன் ஹைதராபாத்துக்குப் போய் வேலையை ஒப்புக்கொள்ளுமாறு கூறினார். ஆனால் இப்படி அவர் பிடியிலிருந்து விடுபட ஒரு 'சான்ஸ்' தெய்வச் செயலாகக் கிடைத்திருந்தபோது நான் அதை விட்டுவிடுவேனா? ஒரு வீடு—கீடு பார்த்து ஏற்பாடு செய்துவிட்டுப் பிறகு வந்து பத்மாவை மணந்து கொள்ளுகிறேன் என்று மழுப்பி விட்டேன். அன்று மாலையே இந்த சந்தோஷச்செய்தியைத் தெரிவிக்க உன்னைத் தேடி வந்தேன். வீடு பூட்டிக் கிடந்தது. பக்கத்து வீட்டுக்காரர்களிடம் விசாரித்தேன். அவர்கள் நீ வேலையை விட்ட மறுநாளே வெளியூர் போய் விட்டதாகவும், இரண்டு நாட்களுக்குப் பிறகு உன் தாயாரும் சாமான்களை யெல்லாம் ஒழித்துக்கொண்டு போய்விட்டதாகவும் அறிவித்தனர். நீயோ, உன் தாயாரோ எங்கே போகிறீர்களென்பதை எவரிடமும் கூறாததால், எனக்கு உன்னைக் கண்டுபிடிப்பது சிரமமாகப் போயிற்று."

"ஆகையால், பிறகு வேறு வழியின்றிப் பத்மாவையே மணந்து கொள்வது என்று தீர்மானித்து விட்டீர்களாக்கும். ஐயோ! நான் எத்தனை அபாக்கியசாலி விகலம்?" சரளா மனம் பொருமினாள்.

விகலம் குறுக்கிட்டான்; "இல்லை; அப்பொழுதும் நான் திடமாகத்தான் இருந்தேன். ஹைதராபாத்துக்குப் போனதும், 'இந்தக் கலியாணம் நடக்கவே நடக்காது' என்று மானேஜருக்குக் கண்டிப்பாகக் கடிதம் எழுதி யனுப்பிவிட்டேன்."

"பின் எப்பொழுது நடந்தது உங்கள் கலியாணம்?" என்று கேட்டாள் பத்மா.

"நான்கு வருஷங்களுக்குப் பிறகு; அதுவும் மானேஜரின் குடும்பம் ஹைதராபாத்துக்கு வந்து, எல்லோருமாக என் கால்களைப் பிடித்துக் கொண்டு கெஞ்சிய பிறகு."

"ஓ! அவரைத் திரும்பவும் அங்கே மாற்றி விட்டார்களா?"

"மாற்றி விட்டார்களாவா? உனக்கு விஷயமே தெரியாதா, சரளா?"

"தெரியாதே; என்ன நடந்தது?"

"நான் ஹைதராபாத்துக்குப் போன மறு வருஷமே மானேஜர் மாரடைப்பால் மரணமடைந்து விட்டார். ஹைதராபாத்தில் அவருடைய மாமனார் இருந்ததால், மானேஜர் இறந்த பிறகு அவருடைய குடும்பத்தினர் அங்கே வந்து விட்டனர். இதற்குள் பத்மாவுக்கு வேறு இடத்தில் கலியாணம் நடந்து விட்டது. மற்ற நான்கு பெண்களும்......"

"என்ன பத்மாவுக்குக் கலியாணமாகி விட்டதா? அப்படியானால் இப்பொழுது நீங்கள் மணந்து கொண்டிருப்பவள்......?"



"வேடிக்கைதான் போ; இவளைப் பத்மா என்று எல்லோரையும் போலவே நீயும் நினைத்து விட்டாயா? இவள் அவளுக்கு அடுத்தவளான சாரதா அல்லவா? இருவருக்கும் இடையே ஒரு வயதுதான்; தோற்றத்திலும் அவர்கள் அக்காள் தங்கைகள் எல்லோரும் ஒன்றுபோலத்தான் இருப்பார்கள்."

சரளாவின் கையிலிருந்த அவுன்ஸ் கிளாஸ் நழுவிக் கீழே விழுந்தது!

"ஐயையோ! மருந்து கொட்டிவிட்டதே! என்ன அபசகுனம்!"—பதறினான் விகலம்.

"அபசகுனம் ஒன்றும் இல்லை, மிஸ்டர்! பதறாதீர்கள்; இனிமேல் அந்த மருந்துக்குத் தேவையில்லை!" என்ற குரல் கேட்டு இருவரும் பின்புறம் திரும்பிப் பார்த்தனர். நர்ஸ் தங்கமணி நின்று கொண்டிருந்தாள். "உங்கள் மனைவிக்குச் சுகப் பிரசவம் ஆகி விட்டது ஸார்; ஆண் குழந்தை!" என்று கூறினாள் அவள்.

விகலத்தின் முகம் மலர்ந்தது.

சரளாவின் முகமும் கூடத்தான். ஆம்; ஒரு பெரிய கொலைப் பழியிலிருந்து அவள் தப்பிவிட்டாளல்லவா!

விளையாட்டு மன்னர்கள்

# வெற்றி தேடித்தந்த வீரர்

மூத்காலங்களில் நாடக நோட்டீஸ்களில் 'அடாது மழை பெய்தாலும் விடாது நாடகம் நடத்தப்படும்' என்று விளம்பரப்படுத்துவதுண்டு. நாடகக் கொட்டகைகளில் நடக்கும் நாடகத்துக்கு ரஸிகர்களைச் சேர்க்க இப்படி விளம்பரம் செய்தனர். ஆனால் சென்ற ஒரு மாத காலமாகச் சென்னை நகரசபை ஸ்டேடியம் திறந்தவெளி மைதானத்தில் அடாது மழை பெய்தும் விடாது கால்பந்து விளையாட்டு நடந்ததையும், அதை ரஸிகர்கள் மழையில் நனைந்துகொண்டே பார்த்த அதிசயக் காட்சியையும் கண்டதும் விளையாட்டுக் கலையில் சென்னை ரஸிகர்களுக்குள்ள ஈடுபாட்டைக் கண்டு வியந்தோம்.

சென்னை கால்பந்துக் கழகத்தினர் இரண்டு வருஷங்களாகக் கால்பந்துப் போட்டியை வெகு விமரிசையாக நடத்தி வெற்றிக் கேடயம் வழங்கி வருகின்றனர். இந்த வருஷம் ஹைதராபாத், மைசூர், சிக்கந்திராபாத் முதலிய இடங்களிலிருந்து கால்பந்துக் கலைஞர்களும் சென்னையில் பிரசித்தி பெற்ற கால்பந்து விளையாட்டுக்காரர்களும் அபாரமாக விளையாடிச் சென்னை ரஸிகர்களைக் குதூகலத்தில் மூழ்கடித்தனர். இறுதி விளையாட்டில் பெரம்பூர் ரயில்பெட்டி கட்டும் தொழிற்சாலையைச் சேர்ந்த கால்பந்துக் குழுவினரும், பங்களூரைச் சேர்ந்த மெட்ராஸ் இன்ஜினியரிங் குரூப் விளையாட்டுக் கலைஞர்களும் அபாரமாகப் போட்டியிட்டனர். இந்த விளையாட்டில் பெரம்பூர் ரயில் பெட்டி கட்டும் தொழிற்சாலையைச் சேர்ந்த கால்பந்துக் குழுவினர் ஜயமடைந்து வெற்றிக் கேடயத்தைப் பரிசாகப் பெற்றனர். எதிர்க்கட்சியின் மீது 'கோல்' போட்டு இண்டக்ரல் கோச் பாக்டரிக்கு வெற்றியைத் தேடித்தந்தவர் திரு ஞானகிராமன். அவரே அந்தக் கால்பந்தாட்டக் குழுவுக்குத் தலைமைவகித்து நடத்தியவர்.



திரு ஞானகிராமன்

திரு ஞானகிராமன் ரங்கூனில் 4-10-1933 வருஷம் பிறந்தவர். அப்பொழுது அவரது தந்தை பர்மா ரயில்வேயில் ஸ்டேஷன் மாஸ்டர் உத்தியோகம் வகித்து வந்தார். திரு ஞானகிராமன் பர்மாவில் பிறந்தாலும், அவரது கல்லூரிப் படிப்பு சென்னையில்தான் தொடர்ந்தது. சென்னை வேப்பேரியிலுள்ள செயின்ட்பால் ஹைஸ்கூலில் கல்வி கற்றுத் தேர்ந்தார். பள்ளியில் படிக்கும்போது அவருக்குக் கால்பந்து விளையாட்டிலும் 'பாக்ஸிங்' கலையிலும் ஈடுபாடு ஏற்பட்டது.

"யாரும் மிகுந்த ஈடுபாட்டுடனும் உற்சாகத்துடனும் ஒரு காரியத்தில் ஈடுபட்டால் அவர்கள் தோல்வியடைவது என்பதில்லை" என்பது மாமுனிவர் வால்மீகியின் வாக்கு. விளையாட்டுக் கலையிலே ஈடுபாடு கொண்ட திரு ஞானகிராமனுக்கு அக் கலையே அவருக்குப் பெயரும், புகழும், பதவியும் தேடித் தந்தது. பெரம்பூர் ரயில் பெட்டி கட்டும் தொழிற்சாலையில் உடற்பயிற்சி போதகராக அவர் பணியாற்றி வருகிறார்.

திரு ஞானகிராமன் காப்டன் பதவி வகித்துக் கால்பந்தாட்டத்தில் பல வெற்றிகளை இண்டக்ரல் கோச் பாக்டரிக்குத் தேடித் தந்திருக்கிறார். கரக்பூர் இண்டர் ரயில்வே கால்பந்தாட்டப் போட்டியில் இவர் குழுவினருக்கே வெற்றி கிடைத்தது.

இலங்கையில் சென்னை கால்பந்துக் குழுவினர் இக் விஜயம் செய்த போது, அதில் திரு ஞானகிராமனும் ஒருவராகச் சென்றார். சென்னை கால்பந்து குழுவினர் எல்லா ஆட்டங்களிலும் வெற்றி பெற்றனர். ஒரே ஒரு பந்தயம் மட்டும் வெற்றி தோல்வியின்றி முடிந்தது.

திரு ஞானகிராமனின் விளையாட்டு சோபிப்பதற்குப் பயிற்சி அளித்து உறுதுணையாக நிற்பவர் திரு ஏ. டி. பார்த்தசாரதி.

சென்னை நகரசபை மைதானத்தில் தலைசிறந்த விளையாட்டுக் கலைஞர்கள் விளையாடுவதைக்கண்டு ரசிக்கும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்த சென்னை கால்பந்துக் கழகத்தைப் பாராட்டுகிறோம்.

—குண்டுமணி



ஒரு படுபாதகனின் பெயர் பரோபகாரம். அவன் பெரிய பணக்காரன். அவனிடம் மானேஜராக வேலை பார்க்கிறான் சங்கர். சங்கரின் மனைவியை, அவன் ஊரில் இல்லாத சமயத்தில் தன் இச்சைக்குப் பலியாக்க முயன்ற பரோபகாரம், அந்தப் பெண் புலியின் சீற்றங் கண்டு நடுங்கித் திரும்பிவிடுகிறான். ஊரிலிருந்து திரும்பிய சங்கர், பரோபகாரத்தைப் பழி வாங்க முற்பட்டு, முடிவில் அவனது சதிச் செயலால், ஏழாண்டு சிறைத் தண்டனை அடைந்து, சிறையிலிருந்து தப்பியோட முயன்றபோது போலீஸாரால் சுடப்படுகிறான். அவன் தப்பியோட முயன்றது பிரசவ வேதனையிலிருக்கும், தன் மனைவி




யைப் பார்க்கத்தான். மகன் பிறந்திருக்கிறான் என்னும் நல்ல செய்தியைக் கேட்டு, தம் மகனைக் கொண்டு பரோபகாரத்தைப் பழி தீர்க்க வேண்டும் என்று மனைவியிடம் உறுதிமொழி வாங்கிக் கொண்டு உயிர் துறக்கிறான்.

மேற்படி உறுதிமொழியைக் கொண்டுதான் அன்னையின் ஆணை உருவாகிறது.

இந்த அளவு திரைக் கதையைத் தெரிந்து கொண்டால் போதும். பாரகன் பிக்சர்ஸ் தயாரித்திருக்கும் "அன்னையின் ஆணை" கதையில் தெரிந்துகொள்வதற்கு அதற்கு மேல் ஒன்றும் இல்லை.

காந்தன்

மூலக் கதை, திரைக் கதை அமைப்பு, டைரக்ஷன் ஆகிய மூன்று பொறுப்புகளையும் ஏற்று வெற்றிகரமாகப் பூர்த்தி செய்ய வேண்டுமே என்னும் வேகத்தில் சி. எச். நாராயண மூர்த்தி கதையில் அதிகம் அக்கறை காட்டவில்லை என்று நினைக்கிறேன். ஏனென்றால், கதை எங்கெல்லாமோ போய் எப்படியெல்லாமோ முடிகிறது. ஆனால் பெரிய ரயில்வே ஜங்ஷன் இருப்பதனாலேயே பெயருடன் விளங்கும் காட்பாடி என்னும் சிற்றூரைப் போல், இந்தப் படமும் பாத்திரங்களின் நல்ல நடிப்பினால் சிறந்து விளங்குகிறது.

இந்தப் படத்தில், சிவாஜி கணேசன் மூன்று பாகங்களில் நடித்திருக்கிறார். முதலில் அதாவது தந்தை சங்கராக வந்து கதையை ஆரம்பித்து வைக்கிறார். பிறகு மகன் கணேசனாக வந்து அன்னையின் ஆணையை நிறைவேற்றுகிறார். மனைவிக்கு நேர விருந்த இழுக்கையறிந்து அதற்குக் காரணபூதனான பரோபகாரத்திடம் சென்று சீறி விழுந்து அவனால் பெரும் பழி சுமத்தப்பட்டுச் சிறை புகுந்து அங்கிருந்து தப்பியோட முயன்று சிறைக் காவலனின் துப்பாக்கிக் குண்டுக்கு இரையான வரையில்தான் சங்கர் வருகிறான்.

ஆனால், அந்தச் சில காட்சிகளிலேயே தேர்ந்த நடிப்பின் திறமை வெளிப்படுகிறது. பிராணன் போகும் தறுவாயில் சங்கரின் துடிப்பையும் தாங்கொணா வேதனையையும் சிவாஜி கணேசன் நன்றாக நம் கண் முன் நிறுத்துகிறார்.

இரண்டாவது பாகம் மிகவும் சிரமமானது. அன்னை கௌரி தனக்கு நேரவிருந்த இழுக்கையும், தன் கணவர் இறுதியாகக் கூறிச் சென்ற

சபதத்தையும் கூறியதிலிருந்தே மகன் கணேசனின் முகத்தில் உணர்ச்சி பொங்குகிறது. பிரேமாவின் கயல் விழிகளின் பார்வைக்கு நெகிழ்ந்து விடாமல் அன்னையின் ஆணைக்கு அடங்கி இருந்தபோதும், பிறகு, அவளை மணந்து, பரோபகாரத்தைப் பாதாளச் சிறையில் அடைத்துப் பழி வாங்கியபோதும், உண்மையறிந்த பிரேமா சீறிப் பாய்ந்த நேரத்தில் சிறிதும் தளராதிருந்த போதும் சிவாஜி கணேசன் அபாரமாக நடித்திருக்கிறார்.

மூன்றாவது பாகம் சிறிது நேரமே வருகிறது. ஆனால் மனத்தில் நன்றாய்ப் பதிந்துவிடுகிறது. கல்லூரி மாணவர்கள் சம்ராட் அசோகன் நாடகம் நடத்துகின்றனர். ஆதிக்க ஆசையும் போர் வெறியும் கொண்டிருந்த அசோகனையும், கலிங்கத்துப் போரில் கண்ட வெற்றிக்குப் பிறகு பகவான் புத்தரின் அருளால் அன்பு மதத்தையும் அஹிம்சை நெறியையும் பின்பற்றத் துணிந்து அதிசய மாறுதல் அடைந்த அசோகனையும் ஒரே சமயத்தில் காண முடிகிறது. சிவாஜி கணேசனின் சிறந்த நடிப்பை இந்நாடகம் நன்கு வெளிப்படுத்துகிறது.

மேற்படி மூன்று பாகங்களிலும் தலைசிறந்து விளங்குகிறார் சிவாஜி கணேசன். ஆதிமுதல் அவருக்குப் புகழைத் தேடித் தந்த வீர வாசகங்களும் அளவோடு இருந்து படத்துக்கு அழகையும் புகழையும் தருகின்றன.

பரோபகாரத்தின் வக்கீலான பாலு ஒரு பெண்ணைக் காதலித்து, பிறகு அவளைக் கைவிட்டு, பலாத்காரமாகப் பிரேமாவை மணக்க ஏற்பாடு செய்கிறான். பிரேமாவின் கழுத்தில் பாலு தாலி கட்டும் தருணத்தில், கணேஷ் ஒரு போட்டோவைருகவாகக்காட்டி, பாலுவின் கொடுமைகளை அம்பலப் படுத்துகிறான். அந்தப் போட்டோ எந்தச் சந்தர்ப்பத்தில், யாரால் எடுக்கப்பட்டது என்பது புரியவில்லை! அதை விளக்கமாகக் காட்டாதது டைரக்டரின் தவறு என்று நினைக்கிறேன்.

பரோபகாரமாக நடிக்கும் எஸ். வி. ரங்காராவ் வில்லன் பாகத்தைத் திறமையாகச் செய்திருக்கிறார். கணேஷ் வீட்டில் அகப்பட்டுக் கொண்டு அவனிடம் தவித்தது, பாதாளச் சிறையில் அகப்பட்டுக் கண்ணீர்விட்டது ஆகிய எல்லாச் சந்தர்ப்பங்களிலும் அவர் மிகவும் நன்றாய் நடித்திருக்கிறார்.

எம். என். நம்பியார் பரோபகாரத்தின் வக்கீல் பாலுவாக வந்து வில்லன் வேலைகளையெல்லாம் செய்கிறார். அவரிடம் அகப்பட்டுத் தவிக்கும் அபலைப் பெண்ணாக வந்து அவரை நல்வழிப்படுத்த முனைந்து போராடி அவர் கைத் துப்பாக்கிக்கு இரையாகிறார் எம். என். ராஜம். தூர்த்தனைக் காதலிப்பதும் அவன் கைத்துப்பாக்கிக்கு இரையாவதும் அவருக்குப் பழக்கப்பட்ட பாகமாதலால் அநாயாசமாக நடித்திருக்கிறார்.

கதாநாயகியாக, பரோபகாரத்தின் மகள் பிரேமாவாக நடிப்பவர் சாவித்திரி. தமிழ், தெலுங்கு ஆகிய இருமொழிப் படங்களிலும் சிறந்த நடிகையாக விளங்கும் அவர் இப்படத்தில் கண்ணீரில் கரைந்து, உருகிப் படம் பார்ப்பவர்களையும் உருக்கி விடுகிறார்.

இந்தப் படத்தில் காதல் இலேசாக இருக்கிறது; கஷ்டம் நிறைய இருக்கிறது; கண்ணீர் வெள்ளமாகப் பொங்குகிறது. ஆனால் கடைசியில் விபரீதமாக எல்லோரும் செத்துத் தொலைக்காமல் படம் முடிந்து விடுகிறது.

ஏ. மருதகாசி, கா. மு. ஷெரிப், கு. மா. பாலசுப்பிரமணியம், கோபாலகிருஷ்ணன், வ. சோமநாதன் முதலிய கவிஞர்கள், ''அன்னையின் ஆணை''க்குரிய பாடல்களை இயற்றியிருக்கின்றனர். ''நீயேகதி ஈசுவரி'' என்ற முதல் பாட்டு நன்றாயிருக்கிறது. கணேஷின் அன்னை கௌரியாக வந்து கண்ணீர் வடித்துக் கஷ்டப்படும் பாகத்தை ஏற்றிருப்பவர் பண்டரி பாய் என்றாலே போதும். அந்தப் பாத்திரத்துக்கு எத்தனை பொருத்தமான நடிகை அவர் என்பதை எல்லோரும் சுலபமாகத் தெரிந்துகொள்வார்கள்.

கணேஷ் வீட்டு ஊமை வேலைக்காரியாக டி. பி. முத்துலட்சுமி நன்றாய் நடித்திருக்கிறார். இனி அவர் பேசாமலே நடிக்கலாம்!

''அன்னையின் ஆணை''க்கு வசனம் எழுதியிருப்பவர் முரசொலி மாறன் எம். ஏ., மிகவும் அழகான முறையில் தமது பணியைச் செய்திருக்கிறார். வசனம் இனிமையாகவும் உருக்கமாகவும் கம்பீரமாகவும் இருக்கிறது.

பட்டண வாழ்க்கையில் சோடா இன்றியமையாத அம்சமாகி விட்டது போல் நம் படங்களில் பலவித நடன நிகழ்ச்சிகள் இன்றியமையாததாகி விட்டன. இந்தப் படத்திலும் நடனம் இருக்கிறது. அது மிதமிஞ்சிப் போய் விடாத வரையில் பயமில்லை. சில சமயம் சில படங்களைப் பார்க்கும் போது நடனம் வந்து விடுமோ என்று பயப்படும் படியாகி விடுகிறது அல்லவா?





# ஆற்றோரத்து மரம்

'மூன்றை'

"பாட்டய்யா! எவனாவது தன் விரோதியின் கண் கெட வேண்டுமென்பதற்காக, தான் குருடனாவானா?"

"அப்படி ஒரு பழைய நீதிக் கதை உண்டு. அதைத்தானே சொல்கிறாய், சுமதி?" என்று கனிந்த குரலுடன் கேட்டு முருகேசம் பிள்ளை பெருமூச்செறிந்தார்.

இன்னும் இரண்டு வயதாகி, சற்று விவரம் தெரிந்திருந்தால், பார்வையை இழந்து கஷ்டப்படும் தன் மூப்பாட்டனிடம் அச் சிறுமி இக் கேள்வியைக் கேட்டிருக்க மாட்டாள். அவள் தொடர்ந்து, "ஆம், பாட்டையா! பொய்க் கதைகளையெல்லாம் ஏன்..." என்று ஆரம்பிக்கவே, பக்கத்து அறையிலிருந்த அவளுடைய தாயார் சரசுவதி, "சரி! சரி! பாட்டய்யாவைத் தொந்தரவு செய்யாதே, சுமதி!" என்று கண்டித்துக் கொண்டே வந்தாள்.

"பாட்டய்யா, இன்றைக்கு எந்த இடத்தைப் பார்க்கப் போகலாம்?" என்று கேட்டாள். அவள் வட இந்தியாவிலேயே பிறந்து, வளர்ந்து, அங்கேயே வாழ்க்கை நடத்தி வருவதால், பல வருஷங்களுக்கு ஒரு முறைதான் பாட்டனாரைப் பார்க்கக் கோடைக்கானலுக்குச் செல்வாள்.

"இன்று பாலருவியைப் பார்த்துவிட்டு வரலாமே, சரஸா!" என்றார் பெரியவர்.

"பாலருவிக்கு ஞாயிற்றுக்கிழமை போகலாம் என்று நினைக்கிறேன். பக்கத்து வீட்டு வைரவம்மாளும் வருகிறேன் என்றார்கள்."

"அப்படியானால்......ஓஹோ, இன்று வெள்ளிக்கிழமையல்லவா? நக்ஷத்திர ஆபீசை வெள்ளிதோறும்தான் வெளி ஜனங்கள் பார்க்கலாம். அதை இன்று முடித்துக் கொள்ளுங்கள். அங்குள்ள சிப்பந்திகள் உனக்குப் புரியும் அளவுக்கு அக்கறையுடன் விவரித்துக் காண்பிப்பார்கள். வேறு சிபாரிசு தேவையில்லை. இருந்தபோதிலும் நான் டைரக்டர் ராகவனிடம் கேட்டுக் கொண்டதாகவும் தெரிவித்து விடு."

"ஏன், நீங்கள் வர மாட்டீர்களா, பாட்டய்யா?" என்று கெஞ்சும் குரலில் கேட்டாள் சரசுவதி.

"இந்தக் கண்ணை வைத்துக் கொண்டு நான்......"

"கொஞ்சமும் சிரமம் இல்லாமல் கையைப் பிடித்து நான் அழைத்துப் போகிறேன்."

"ஆபீசுவரை நடந்து செல்வது அவ்வளவு சிரமமில்லை. முப்பத்தைந்து வருஷங்கள் பழகிய கால்கள் தாமாகவே நடக்கும். அங்கே போய்ச் சேர்ந்த பின் நான் என்ன செய்யப்போகிறேன்? அனேகமாய் எல்லாக் கருவிகளும் புதியவை. அங்குள்ள ஜனங்கள் என்னிடம் மரியாதையாக நடந்து கொண்டாலும்......" என்று இழுத்தார் கிழவர்.

"பாட்டய்யா! நீங்கள் வந்தால்தான் எனக்குத் திருப்தியாக இருக்கும். பிறருடைய விளக்கங்கள் மூளை வரையில்தான் எட்டும்; நீங்கள் உங்களுக்கு ஏற்பட்ட பாணியில் விவரித்தால் அதே விஷயம் உள் அறிவைப் போய்த் தொடும். அதற்காகத்தான் சொல்கிறேன். நீங்கள் ஆரதிருஷ்டிக் கண்ணாடியின் மூலம் வான ஆராய்ச்சி செய்யும் போதெல்லாம், அம்மா ஒரு முக்காலியில் உட்கார்ந்து கவனித்துக் கொண்டே இருப்பாளாமே!..."

"சரி, வருகிறேன், சரஸா!" என்று கூறிச் சம்மதித்தார் முருகேசம் பிள்ளை. வெளிவந்த வார்த்தைகள் கண்ணீரில் தோய்ந்திருந்தன.

நக்ஷத்திர ஆபீஸ் எனப்படும் சூரிய ஆராய்ச்சி நிலையம் ஸ்தாபிக்கப்பட்டதுமே முருகேசம் பிள்ளை அதில் ஒரு ஆராய்ச்சியாளராக நியமிக்கப்பட்டார். வயர்லெஸ் செய்தி வசதி, ஸினிமா

போட்டோ முறை முதலிய சௌகர்யங்கள் ஏற்பட்டிராத காலம் அது. துரிதப் பிரயாணம், கடிதப் போக்குவரத்து, அயல் பாஷைகளில் அறிவு முதலான வசதிகளும் குறைவு. இருந்த போதிலும், பிள்ளையவர்கள் தமக்கு இடப்பட்டிருந்த தினசரிக் காரியங்களை ஒழுங்காகச் செய்ததுமல்லாமல், சொந்த முயற்சியால் பல புதிய உண்மைகளைக் கண்டறிந்தார். இது காரியாலய அலுவல் நேரம், இது ஓய்வு நேரம் - என்ற வித்தியாசம் அவர் மனத்தில் எழுந்ததில்லை. தம் பிரச்னைக்கு விடை கிடைக்கும் வரை, அல்லது, குறிப்பிட்ட நட்சத்திரமோ கிரகமோ, இல்லா விட்டால் வேறு வான வீதி சஞ்சாரியோ அஸ்தமிக்கும் வரை, அவர் ஊண் உறக்கத்தை மறந்து, தமது ஆராய்ச்சியில் மூழ்கிக் கிடப்பார். அநேக சமயங்களில் அவருடைய பெண் பெருந்தேவி, பக்கத்திலேயே உட்கார்ந்திருந்து, பழகிய நாய்க்குட்டியின் அன்பு ததும்பும் அறிவுடன் அவருடைய ஒவ்வொரு செயலையும் கவனித்து, சற்று இடைவெளி தென்பட்டதும், அப்பிளவில் தலையிட்டு, அவருக்கு உலக நினைவு மூட்டி வீட்டுக்கு அழைத்துச் செல்வாள். பெருந்தேவியும் அபூர்ண வயதிலேயே தன் இனிய சுபாவத்தால் விண்ணுலகைப் பிரகாசிக்கச் செய்யச் சென்றுவிட்டாள்.

முருகேசம் பிள்ளை வந்திருக்கும் தகவல் கிடைத்ததும், காரியாலயத்தில் ஒரு பரபரப்பு உண்டாயிற்று. ஒரே ஒரு குமாஸ்தாவைத் தவிர மற்ற அனைவரும் புதியவர்கள். இருந்த போதிலும் அவர்கள் மனப்பூர்வமான விசுவாசத்துடன் தான் அவரை வரவேற்றனர்.

டைரக்டர் ராகவன் வந்தவர்களை ஒரு சிறு உத்தியோகஸ்தன் கையில் ஒப்புவிக்காமல், தாமே நேரில் அழைத்துச் சென்று, ஒவ்வொரு யந்திரமாகக் காண்பித்தார். அவற்றுள் பல, பிள்ளையவர்கள் பென்ஷன் பெற்ற பிறகு, பழையவற்றுக்குப் பதிலாக வாங்கப் பட்டவை; பெரியவை. அதிக சக்தியும் வாய்ந்தவை. சில கருவிகளும் யந்திரங்களும் முற்றிலும் புதியவை. சமீபத்தில் கற்றறிந்த விஷயங்களைக் கொண்டு திறமையுடன் அவ்விடத்திலேயே தயாரிக்கப்பட்டவை; பல நாட்டு விஞ்ஞானிகளால் பாராட்டப்பட்டவை.

கிழவர் அவற்றை ஆவலுடன் தடவிப் பார்த்து, ''இப்பொழுது பல நாட்டாரும் மொத்தம் எத்தனை நட்சத்திரங்கள் வரையில் ஆராய்ந்திருக்கிறார்கள்?'' என்று கேட்டார். திடுக்கிடும்படியான பெருந் தொகையை டைரக்டர் ராகவன் குறிப்பிட்டார்.

''அடேயப்பா! இன்னும் அந்த இருநூறு அங்குலக் கண்ணாடி தன் சக்திகளைக் காட்ட ஆரம்பித்ததும், தற்சமயம் பார்வையின் எல்லையில் இருக்கும் தாரகைகள் பக்கத்துத் தெருவுக்கே வந்து விடும்!'' என்றார் கிழவர் உற்சாகமாக.

''அந்தக் கண்ணாடி என்னென்ன புது சங்கதிகளை அறிவிக்கும் என்று கற்பனை கூடச் செய்ய முடியாது. அத்துடன் ஒத்துழைக்க அற்புதமான ஷ்மிட் டெலஸ்கோப்பும் உருவாகி, அமலில் வந்து கொண்டிருக்கிறது. ஆனால் நீங்கள் அக் காலத்தில் அற்பக் கருவிகளைக் கொண்டே எவ்வளவு மகத்தான காரியங்களையெல்லாம் சாதித்திருக்கிறீர்கள்! கண்களே தூரதிருஷ்டிக் கண்ணாடி போல் ....'' என்று பாராட்டும் போதே ராகவன் தம் பிசகை உணர்ந்து நாக்கைக் கடித்துக் கொண்டார்.

அதற்குள் சுமதி, ''பாட்டய்யா! தூரதிர்ஷ்டக் கண்ணாடி என்றால் என்ன?'' என்று கேட்டாள். கிழவர் சிரித்துக் கொண்டே, ''தூரதிருஷ்டக் கண்ணாடி



யில்லை, அம்மா! தூரதிருஷ்டிக் கண்ணுடி. அதாவது ரொம்பத் தொலைவிலிருக்கும் சிறு பொருள்களையும் இதைக் கொண்டு காணலாம்'' என்று விளக்கிவிட்டு, டைரக்டர் ராகவனிடம் ''அந்தப் பழைய ஆறு அங்குல டெலஸ்கோப்பை எதற்காவது உபயோகப்படுத்துகிறீர்களா, அல்லது...'' என்று ஆரம்பித்தார்.

''தினசரி வேலையில் அதை உபயோகப்படுத்துவதில்லை. ஆனால் நான் என் வீட்டுக்கருகில் அதற்காக இடம் தயார் செய்திருக்கிறேன். இரவு நேரத்தில் சில சமயம் திடீரென்று ஒரு புது யோசனை தோன்றினால் அதை உபயோகிக்கிறேன். இப்பொழுது வந்திருக்கும் அநேக பூதக் கண்ணுடிகளைவிட அது வெகு தெளிவு.''

''அது இன்னும் நன்ருக இருக்கிறதா? நாள் செல்லச் செல்ல லென்ஸ்கள் மங்கிப் போகுமே?'' என்ருர் கிழவர்.

''ஆம். சாதாரணமாக அப்படித்தான். ஆனால் இது நன்ருக அமைந்துவிட்டது. இதன் பார்வை இத்தனை வயதாகியும் மங்கவில்லை!'' ... மறுபடியும் சொல் பிசகு. பாவம்.

அதே சமயத்தில் சுமதி, ''கால் வலிக்கிறது, பாட்டய்யா! அந்த முக்காலியில் குந்தலாமா?'' என்று கெஞ்சினுள்.

''உட்காரு, அம்மா...எந்த முக்காலி? ஏன், ராகவன்? முன்னிருந்ததேதானு, புதிதாய்ச் செய்தீர்களா?'' என்று கேட்டார் விருத்த வான சாஸ்திரி.

அதன் கருத்து அறிய முடியாத இளம் டைரக்டர், ''எனக்கு ஞாபகமில்லை. பதினைந்து, இருபது வருஷங்களாக இதுதான் இங்கே இருக்கிறது'' என்ருர்.

''சுமதி எங்கே உட்கார்ந்திருக்கிருள்? என்னை அழைத்துப் போ, சரளா!'' என்ருர் கிழவர் முருகேசம் பிள்ளை.

அருகில் சென்றதும் அவர் முக்காலியைத் தொட்டுப் பார்த்துச் சுமதியைக் கையால் தடவிக் கொடுத்தார். மனம் தடவிக் கொடுத்தது பெருந்தேவியை! அவருடைய கண்கள் மறுபடியும் நனைந்தன. கண் பார்வையை இழந்த பிறகும் துக்கத்தால் நீர் வடித்தல், தூசியால் துன்பப்படுதல் முதலிய தொண்டுகள் புரிந்து கொண்டுதான் இருக்கிறது!

அன்றிரவு முருகேசம் பிள்ளையின் கனவில் பிரகாசமான ஒரு உருவம் தோன்றி, ''என்னைத் தெரியவில்லையா?'' என்று வினவியது.

''தெரியவில்லையே!'' என்று வெட்கத்துடன் மனம் கலங்கினுர் முருகேசம்.

''முப்பத்தைந்து வருஷங்கள் தொட்டுப் பழகி, பல நன்மைகள் பெற்று, மறந்து விட்டீரே!'' என்று விளையாட்டாகக் குறை கூறியது அவ்வுருவம்.

கிழவர் என்ன சொல்வது என்று தெரியாமல் தவியாய்த் தவித்தார்.

''நான்தான் அந்த ஆறு அங்குலத் தொலைநோக்கியின் ரக்ஷக தேவதை!''



ஷெனாய்நகரம் திரு. வி. க. உயர்நிலைப் பள்ளியில் நடைபெற்று வரும் இசைப் பள்ளியின் ஆதரவில் சென்ற மாதம் 5-ந் தேதி பரதநாட்டிய வகுப்பு ஆரம்பமாயிற்று. ஆரம்ப தினத்தன்று பரத நாட்டிய ஆசிரியர் சிதம்பரம் வித்வான் திரு என். செல்வரத்தினம் பிள்ளை அவர்களின் மாணவிகளான அம்பத்தூர் சகோதரிகள் ஜயா-மைதிலியின் பரத நாட்டியம் நடைபெற்றது. ஷெனாய்நகரம் இசைப் பள்ளியின் காரியதரிசி திரு சி. சுந்தரராஜன் அவர்கள் நாட்டியமாடிய குழந்தைகளின் திறமையையும், அவர்களுக்குப் பரத நாட்டியம் பயிற்றுவித்த திரு செல்வரத்தினம் பிள்ளை அவர்களின் மேதையையும் பாராட்டினார்.

என்று அவ்வொளிப் படலம் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டது.

''அப்படியா! அந்த யோசனை எனக்குத் தோன்றவில்லை. ஆம்! தங்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். இப்பொழுது என்ன உத்தரவு?''

''உங்கள் அந்தரங்க பக்தியுணர்ச்சியைக் கண்டு மனம் குளிர்ந்தேன். இக்காலத்தில் ஜனங்கள் யந்திரங்களிடம் வேலை மட்டும் வாங்கிக் கொண்டு மற்றப்படி உதாசீனமாக இருந்து விடுகிறார்கள். இங்கிதம் அறியாதவர்கள்... மனிதர்களையே யந்திரம் போல் நடத்துகிறார்களே! உமக்கு நான் ஒரு நன்மை செய்ய விரும்புகிறேன்.''

''அப்படியா! ரொம்ப சந்தோஷம். அது என்னவாக இருக்கக் கூடும்? என்னுடைய மனம் குழம்பி...!''

''மறுபடியும் உங்களுக்குப் பார்வை கிடைக்கும்படி...''

''உண்மையாகவா? அது முடியும் காரியமா? ஆஹா! அதைவிடப் பெரிய நன்மை நான் கற்பனைகூடச் செய்ய முடியாது. நான் இதற்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்... ஆம், ஒன்று செய்யலாம். அந்த வானம்நோக்கியைக்கொண்டே இன்னும் புதிய சங்கதிகள் பலவற்றைக் கண்டுபிடித்து, உங்கள் கீர்த்தியை வளர்த்து...''

''அது நடவாத காரியம். ஏனென்றால் அந்த லென்ஸின் பார்வையைத்தான் உமக்கு அளிக்கப் போகிறேன். அது மங்கிப் போய்விடும். பார்வை திரும்பக் கிடைத்ததும், அருகே இருக்கும் மகளைக் கையால் மாத்திரம் பாராமல் கண்ணாலும் கண்டு மகிழலாம். கற்பனைக் கெட்டாத் தொலைவிலிருக்கும் வெண் தூசிப் படலத்தை விண் மீன்களாகப் பிரித்துக் காணலாம்.''

''ஐயோ! விவரித்து விவரித்து மேலும் மேலும் ஆசையைக் கிளப்ப வேண்டாம்.''

''எதற்காக இந்தத் தயக்கம்? நானாக முன் வந்து அரிய நலனைக் கொடுக்க...''

''வாஸ்தவம். விரும்பத்துணியாத—விரும்பத் தோன்றாத—வரத்தை அன்புடன் வலிய அளிக்கிறீர்கள். ஆனால் அந்தச் சக்திவாய்ந்த கண்ணாடியும் தெளிவாய் நின்று...''

''நீர் ஒரு மனிதர். உலகத்தில் தெய்வத்தின் பிரதிநிதி. ஜீவனும் புலன்களும் புத்தியும் கற்பனைசக்தியும் படைத்தவர். அது ஒரு கண்ணாடிச் சில்லு!''

''வேண்டாம், வேண்டாம்; எல்லாம் முன் போலவே இருக்கட்டும்!''

''விசித்திரமான மனிதர்! உம் தீர்மானத்துக்குக் காரணம் என்னவோ?''

''என்னுடைய மனத்துக்கே உருவாகத் தெரியவில்லை. பிறருக்கு...''

''இருந்த போதிலும், முடிந்தவரையில் ஜாடையாக...''

''... நான் ஆற்றோரத்து மரம். நானே இறந்து விட்டால், இன்று பார்வை பெற்று என்ன பயன்? மனிதர் ஜாக்கிரதையுடன் நடந்து கொண்டால், அக்கண்ணாடி சிரஞ்சீவி.''

''அற்புதமான மனிதர்! இது நிச்சயந்தானா, அல்லது ஒரு வேளை....''

''வேண்டாம், வேண்டாம். மனத்தைக் கலைக்க வேண்டாம்.''

''லட்சியப் பிறவி! உங்கள் தீர்மானமே சரி. ... அழிவற்ற ஞானக் கண் பெற்ற பின், இம்மாமிச கோளம் எதற்கு?''

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

